

அசோகவனத்தில் ஸீதாதேவி.

கர்ஜித்தான். அளவு காண வொண்ணாத பெரிய திருவடிவங் கொண்டு நின்ற வாதாத்மஜன் தன் பாதத்தை அம்மலையி லூன்றவே குகைகள்தோறுங் கிடந்த நாகங்கள் விஷாக்கினியை யுமிழும் வாய்களையுடையனவாய்க் குன்றத்தினூறு வயிறுகீறிப் பிதுங்கிய குடர்களோ வென்னும்படி புறத்தே புரண்டுபோயின. சிங்கங்கள் இறந்து இரத்தத்தைச் சிந்தி யுள்ளேயே நசுங்கிப் போயின. பறவைகள் ஸமுத்திரம் நாணப் பேரிரைச்சலிட்டுப் பறந்து சூர்யனுடைய காந்தி தெரியாமல் வானை மறைத்தன. யானைகள் தம் காதுகளை யடித்துக்கொண்டு நிமிர்ந்த வால்களை யுடையனவாய்ப் பிளிறின. புலிகள் கண்திறவாத தமது குட்டி களை வாயிற் கௌவிக்கொண்டு ஓடின. அக்குன்றின் மீதுள்ள சுனையருவிகள் நானாவித மலர்களின் மகரந்தங்களையு மளைந்து செந்நிறமுற்று அம்மலையானது கீண்டு இரத்தத்தைச் சொரிந் தாற்போலப் பூமியில் வந்து வீழ்ந்தன. அப்பர்வதம் திடு ரெனக் கீறி வெடிக்கவே மிக்க நடுக்கமெய்தி அங்குள்ள தேவ மாதர்களெல்லாரும் மெல்லிய தளிர்க்கரங்களால் தங்கள் நாய கர்களை இறுகத் தழுவிக்கொள்ள அவ்வானவர்கள் இராவணன் கைலையைப் பறித்த நாளில் அச்சமுற்றுப் பார்வதிதேவியாரால் தழுவப்பெற்ற சங்கரனைத் தனித்தனி யொத்து விளங்கினூர் கள். இவ்வாறு நிகழுங்காலத்துத் தேவரும் முனிவரும் மற்றும் மூவுலகத்தவர்களும் விரைவில் வந்து கூடி மலர்களையும் மணி களையும் சந்தனத்தையும் வாஸனைப் பொடிகளையும் ஹநுமான் மீது வாரியிறைத்து "ஏ, வீர!. 'அகஸ்தியர் பானம் பண்ணின இக்கடல் எம்மாத்திரம்? இதைத் தாண்டின் என் பெருமைக்குக் குறைவன்றோ?' என்றிகழாமற் செல்வாயாக" எனப் பிரார்த் திக்க மேருவுக்கு ஸமானமான ஹநுமானும் அதற்குஸம்மதித்து வாலை யுயர விசைத்துத் தாள்களை மடக்கி மார்பை யொடுக்கிக்

கழுத்தினைச்சுருக்கி இரண்டு தடக்கைகளையும் நீட்டிக்கொண்டு கட்புலனுக்குத் தெரியாத வண்ணமாக பிர்ம்ம லோகத்தை யுரிஞ்சிக்கொண்டு விசையாக ஆகாயத்தி லெழும்பிப் போயி ஞன். மாருதி சென்ற விசையினுல் மரங்களும் மலைகளும் யானைகளும் மற்றுள்ளன பிறவும் உடனெழுந்து ஸ்ரீராமனது பணியென்று கொண்டு இலங்கைவரையிலும் பாய்வனபோல வானத்திற் படர்ந்தன. சில விசையற்றவைகளாய்த் தள்ளி விழுந்தனவென்னும்படி கடலில் வீழ்ந்தன. இவ்வாறு மிருகங் களும் விருக்ஷங்களுஞ் செடி கொடிகளும் மற்றுள்ள யாவும் வீழ்ந்து கடலைத் தூர்க்கவே ஸ்ரீராகவன் சீறுவதன் முன்னரே சேது வுண்டானாற்போலக் காணப்பட்டது. ஸமுத்திர ஜலம் கீண்டு இரு கூறுக விலகக் கீழேயிருந்த நாகலோகமெங்கும் வெளிப்பட்டு ஆங்குள்ள ரத்னங்கள் பிரகாசிக்க, வானரோத்த மன் அதனை நோக்கி அரவினுக் கரசர் வாழ்வையுங் காணுந் தவ முடையவனானேனெனக் களிப்புக் கொண்டான். நாகலோகத் தவர்கள் கருடன்தான் தனது பக்ஷங்களினுல் கடலைக் கிழித் துக்கொண்டு வருகின்ருனே வென்று மனே வியாகுலமுற்று மறைந்தார்கள். இவ்விதமாக, வாயு ஸுதனை ஹநுமான் முன்னம் வாயுவினு லொடிபட்டுக் கடலிற் செல்லுந் திரிகூட பர்வதம்போலவும், இராவணனை யின்னமும் அமுக்கவேண்டு மென்று வயிரங்கொண்டு சிவபிரானின்றிச் செல்லுங் கைலை யங்கிரி போலவும், ஊழிக்காலத்தில் வடபாற் றேன்றும் பூர்ண சந்திரன் போலவும், நெடுநாளாகப் பிரிந்திருக்கின்ற தனது புதல்வனை திரிகூடாசலத்தைக் காண விரைந்து செல்லும் மேரு வரை போலவும், நக்ஷத்திரங்க ளுதிர, வானங்குழைய, மேரு குலுங்க, முடிவுகாலத்திலடிக்கும் பிதாவானவாயுபகவான் போலவும், தசக்கிரீவனுடைய நாசத்திற்கு அறிகுறியாக வட

திசையி லுதித்துத் தென்றிசைக்குச் செல்லும் கதிரவன்போல வும், கடலெல்லாங் கடக்கத் தாவும் ஆற்றல்மிக்க கருடன்போல வும் விசையாகப் படர்ந்து திரிவிக்கிரம னளந்த வானத்தை யெல்லாம் வாலாலளந்து வானவரும் மருளும்படி சென்றான். வீரனது வால் இழிதொழில் புரியும் அரக்கர்களுக் கஞ்சியொ ளித்துச் செல்லுங் காலபாசமோ, மேருவைச் சுற்றிநின்று கரு டன்வந் துற்றகாலத்துப் பிரிந்திட்ட நாகமோ என்னும்படி விளங்கிற்று. இப்படியாகக் குலபர்வதம் போன்றவனை ராம தூதன் ஏகுங்காலையில் மைந்நாகமென்னு மலை கடலினின்று மெழுந்து ஆகாயத்தை யளாவிக்கொண்டு எதிரே வந்து தோன் றிற்று. எதற்குஞ் சலியாத தீரனை ஹநுமான் அந்த மாம் வரையை வியப்புடன் கண்ணுற்று, இது என்னோ! என்று ஐய மெய்திப் பின் தெளிந்து, இவ்வசலம் இவ்வாறு நிமிர்ந்து நிற் பின் நாம் மேற்கொண்ட காரியத்துக்கு இடையூ றுண்டாகும் எனச் சிந்தித்து அதனைத் தலைகீழாகப் புரட்டித் தள்ளிவிட்டு விண்மீது விரைவாகச் சென்றான். இவ்வாறு வீரன் தன்னை முன்னம் கடலிலொளித்துநின்ற அக்குன்றம் சிந்தாகுலமுற்றுப் பின்னர் அன்பின் மிகுதியால் சிறியதோர் மனுஷ்யரூபத்தைத் தரித்து, "எந்தாய்! இதைக் கேட்பாயாக. என்னைச் சத்துரு பக்ஷத்தவனென்று எண்ணக்கூடாது. இந்திரன் தனது வச் சிராயுதத்தைக்கொண்டு பர்வதங்களினுடைய பக்ஷங்களையெல் லாம் சேதித்துவந்தகாலத்தில் இந்த தக்ஷிண ஸமுத்திரத்தில் உய்த்து வாயுபகவான் என்னைக் காத்தனன். அவனது அரு மைப் புதல்வனுதலின் நான் அன்பாற் றூண்டப்பட்டுச் செய் யுங் கைம்மாறு பிறிதொன்றில்லையேனும் சிகரத்திடை யிளப் பாறியிருந்து போம்படியாவது செய்யலாம் எனக் கருதி யுயர்ந் தேன். மேலும், ஸமுத்திர தேவதையும் 'கார்மேக வண்ண

ஞை ஸ்ரீ ரகுவீரனது பணிபூண்டு ஸீதையைத் தேடிக்கொண்டு வாயுவின் மைந்தன் வருகின்முன்; அவனுக்கு இளைப்பாறு மிட மாகப் பெறுவாய்; இதனினும் பெறக்கடவதான பேறு பிறி தொன்றுமில்லை.' என்று எனக்கு உரைத்திட்டது. ஆதலின், நீதியில் நின்றோய்! என்னை நற்முயினு நல்ல னென்றுகொண்டு சிறிதுபோதிருந்து என்னு வியன்றதை அங்கீகரிப்பாயாக" என்று சொல்லிற்று. அவ்வுரைகேட்டு மிகுந்த ஸந்தோஷங் கொண்டவனுய் "நீ வருந்தவேண்டாம்; நான் என் ஆசை பூரணமாகாமல் யாதொன்றையும் புசிக்க ஸம்மதியேன். தே னுக்குச் சமானமாகிய இன்பமான வார்த்தைகளோடு கூடின உனது அன்பு உண்டானபோதே நான் இருந்து சுவையுடை யன பலவும் நுகர்ந்தவனுனேன். இதன்மேலும் உதவக்கூடி யது என்ன இருக்கின்றது. "அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்—கென்போ டியைந்த தொடர்பு" என்னும் முது மொழிக்கு நீயே நல்லதோர் உதாரணமாயினை. ஆராயுங்கா லத்தில் அன்பினுஞ் சிறந்ததான பூஜை வேறு என்ன இருக் கின்றது. நான் விரைவாகச் சென்று இலங்கையை யெய்தி ஆண்டானது அடிமைத் தொழிலைப் பழுதில்லாமல் முடித்து மீளும்போது நின் விருந்தை யேற்றுக்கொள்வேன்" என்று வேண்டிக்கொண்டு பிரளய மாருத மென்னும்படி விரைந்து சென்முன். ஹநுமான் அக் கருங்கடலின்மீது மகாவேகமாகத் தாவிவரக்கண்ட சூர்யன், பாதம் பூமியில் பாவி நடவாத இளம் பிராயத்திலேயே நமது தேரின்மேற் குதிகொண்ட இவன் இவ் விதம் யாரைக் குறித்து எழுகின்முனோ என்று ஐயமுற்றுக் கலங்கினுன். இங்ஙனம் பூமி யிருளும்படி யாகாசத்தையெல் லாம் தன் சரீரத்தால் மறைத்துக்கொண்டு செல்லும்போது அங்கே தேவர்களது பிரார்த்தனையின்படி மூவுலகத்தையுந்

துன்பத்தினின்றும் விடுவிப்பதற்காக அவதரித்தவனான ஹநுமானது நிஜமான பராக்கிரமத்தைத் தெரிவிக்கும் அபிப்பிராயமுடையவளாய்ச் சுரசை யென்னும் ஒரு பரிசுத்தமாதை ஒரு அரக்கியின் உருவங்கொண்டு ஆகாசத்தை முட்ட வளர்ந்து எதிரே வந்து நின்று, "நெருப்பென்னும்படியான எனது கொடும் பசியைத் தீர்ப்பதற்காக நீயே எதிர் பாராதிருக்க வலுவில் விரைந்துவந்தாய். ஏ, வீர! நீயே மாம்ஸ நாற்றம் வீசுகிற என் வாயில் வந்து புகுவாய்; இதைத்தவிர உனக்கு வேறு கதியில்லை" என்று சொல்லித் தடுத்தாள். அதுகேட்டு, "அபலையான நீ பசிகொண்டு என்னை உண்ண இருப்பதும், நான் உனக்கு எனது சரீரத்தை ஆகாரமாகக் கொடுக்க நேர்வதும் மிகவும் நேர்த்தியாக இருக்கிறது" என்று சொல்லிப் பரிஹஸித்து, "நல்லது, நான் போய்த் தேவர் நாயகனான ஸ்ரீரகுபதியினது ஏவலை முடித்துத் திரும்பும்போது அப்படியே செய்கிறேன்" என்று சொல்லலும், அரக்கி யுருவங்கொண்ட அந் நங்கை "நான் இப்போது உன் சரீரத்தைத் தின்றே பசி தணியப்போகிறேன். இது நிச்சயம்" என்றலும், ஹநுமான் "நான் உனது குகை போன்ற வாயில் பிரவேசிக்கிறேன், சக்தியுண்டானால் தின்பாயாக" என்றுரைத்துத் தன்னை விழுங்கநின்ற அவளது பெரிய வாய் சிறிதாம்படி பெருத்து உடனே சுருங்கி அவள் வாயில் நுழைந்து மேகத்தைக் கிழித்துக்கொண்டு கிளம்பும் மின்னலைப்போல நொடிப்போதில் அவளுடலைக் கிழித்துக் கொண்டு வெளிப்பட்டான். அதுகண்ட தேவர்கள் 'மாருதி வல்லவன்' என்று சொல்லிப் புஷ்பத்தை வருஷித்து ஆசீர்வதித்தார்கள். சுரசைப் பெயர்கொண்ட அத் தூயவளும் தாயினுமிக்க அன்புகொண்டு அனுமானைப் பலவாறாக ஸ்தோத்திரம் பண்ணினாள். பொன்மேனி கொண்ட ஹநுமான் அவளை

ஆசீர்வதித்துவிட்டு ஆகாசத்திற் கிளம்பிக் கின்னரர் கீதங்கள் பாடத்தெய்வமங்கையர் நர்த்தனம் புரிய, பூதங்கள் புகழ, பிராம் மணோத்தமர்கள் வேதமியம்ப, தென்றல் விருந்து செய்ய, வித் தியாதரர்களது வீணாகானத்தைச் செவி தாழ்த்துக் கேட்டுக் கொண்டே செல்லுமளவில் ஆலாஹலம் என்னும் விஷத்துக்கு ஒப்பவளான அங்காரதாரை யென்னும் ராக்ஷஸி அக் கடலின் மீது மற்றோர் கடல் நிற்பதுபோலப் பயங்கரமான தனது வாயைத் திறந்துகொண்டு 'என்னை யாரடா கடந்து செல்பவன்' என்று எழக்கண்டு அஞ்சனை சிங்கன் அவள் வயிற்றைக் கிழிக்க வேண்டுமென்னுங் கருத்துக்கொண்டு அவளுடையவாயிற்புகு ந்து அவ்வரக்கியின் குடலைப் பிடுங்கிக்கொண்டுவெளிப்பட்டு,ஒரு மலைக்குகையிற் பிரவேசித்து அநேகம் பாம்புகளோடு அதி சீக் கிரத்தில் வெளிப்படுங் கருடன்போலத் தோன்றக்கண்டு தேவர் முதலானவர்கள் ஆச்சரிய மடைந்து பலவிதமாக வாழ்த்தினார் கள். ஹநுமானும் ஆகாசமார்க்கமாகவே போய் இலங்கையி லுள்ளதோர் பவளமயமான பர்வதத்திற் பாய்ந்தான். பாயவே அந்த இலங்கா நகரம் காற்றினா லலையுண்டு தகர்ந்து தள்ளாடு மரக்கலம்போல அசைந்து தகர்ந்தது. ஹநுமான் அவ் விலங் கையைக் கண்ணிற் கண்டு ஸ்வர்க்கலோகமும் இதற்கு ஈடா காது என்று வியந்து எழுநூறு யோஜனைதூரம் விஸ்தாரமுள்ள இந்த நகரத்தில் திரிலோகத்திலுமுள்ள சிறந்த பொருளெல் லாம் நிறைந்திருக்கின்றன வென்றால் இதனை முழுதுங் கண்டு யாரே சொல்ல வல்லவரெனப் புகழ்ந்து நின்றான்.

பொன்னாலும் மணிகளாலுஞ் செய்யப்பட்டுச் சந்திரமண் டலத்தை யளாவி மாடங்க ளோங்குவதையும், அம்மாடங்களின் நிலாமுற்றத்தை யடுத்து ஆகாச கங்கை யோடுவதையும், மர மெல்லாங் கற்பகமாய் மனையெல்லாங் கனகமாய் விளங்குவதை

யும், தெய்வமங்கையர்கள் அரக்கியர்க்குப் பணிவிடை செய்வ தையும், தேவர்கள் வலியொடுங்கி அரக்கர்க்குக் குற்றேவல் புரிவதையுங் கண்ணுற்று இது தவஞ்செய்த தவமென வியப்பு றுவான். இராவணனுக்குத்தோற்றனவென்

நிலாத்தோற்றுபடலம்.

றிகழ்தலினால் புறம்போன திக்கஜங்களும், ஈசன் பெற்ற ஐங்கரக் களிறும் நீங்கலாகவுள்ள கணக்கற்ற பல உத்தம யானைகளையும், சூரியன் தேரையொழிந்த பல உன்னத ரதங்களையும், அக் கதிரவனது ஏழு குதிரைகளும் போக மற் றுள்ள அளவிட வொண்ணாத பல ஜாதி அச்வங்களையும், மகா விஷ்ணுவின் திருவயிறோ என்னும்படியாயுள்ள கணையில்லாத பல ஜீவகோடிகளையும் நோக்கி இவை பல நாள் முயன்ற தவத் தின் பயனல்லவோவென்று தவத்தின் பெருமையைக் கொண் டாடுவான். அழகு குடிகொண்ட அவ்விலங்கா நகரத்தின் காந்தி வீசுதலால் அரக்கர் கருநிறந் தீர்ந்தவர்களாய் விளங்குவ தையும், சந்திரன் மறுவற்றவனாய்ப் பிரகாசிப்பதையும், கருங் கடல் உருக்கிய செம்பொன்னை யொத்து ஒளிர்வதையும் பார்த்து மயங்குவான். சந்தனம், கஸ்தூரி, கற்பகமலர் இவற் றின் சேர்க்கையால் அவ் வுவர்க்கடல் பரிமளம் வீசுவதை நாடு வான். தெய்வத் தச்சனைப் புகழ்வேனா? அரக்கர் மெய்வருந்திச் செய்த தவத்தை வியப்பேனா? விருஷபவாகனனது ஐயப்பாடில் லாத வரத்தைத்தான் மதிப்பேனா? யான் யாரை என்னென்று துதிப்பேன்? என்று சிந்திப்பான். மீண்டும், அந்நகரத்தினது மதிலைக் கடக்கமாட்டாது சூரியன் விலகிப் போவதையும், இழையும், ஆடையும், மாலையும், சந்தனமுமாகிய இவற்றை யேந்திக்கொண்டு இரண்டுநிரைகளும் வேலைக்காரர்களைப்போலப் பக்கத்தேநின்று வேண்டும்போது கொண்டுவந்து கொடுப்பதை யும் தெரிந்து நான்முகனையும் அவன் உரைகொண்டு படைத்த

விசுவகர்மாவையும் பலமுறை புகழ்வான். மகரவீணையின் நாதத்தால் கடலோசை யடங்குவதையும், அகிற்புகையால் மேகங்கள் தெரியாமல் அழுந்துவதையும், அரக்கரும்அரக்கியரும் வெறுத்து நீத்த ஆபரணங்களால் வெற்றிடமின்றி வீதி நிறைந்திருப்பதையும் நாடி யதிசயிப்பான். கணக்கில்லாத வரபல புஜபலங்களைப் பெற்று வீரக் கழலணிந்த காலும், வேல்முதலிய ஆயுதங்கள் பிடித்த கையும், மாதர் முலைத்தடங்களி லெழுதிய கோலங்கள் படிந்த மெய்யு முடையராய்ப் பிர்ம்மா முதலாக மற்றுள்ள எல்லாவுயிர்களும் தங்களுக்கு உறையிடவும் போதாதபடி வரம்பின்றி மிகுந்த அரக்கர் கூட்டங்களைக் கண்டு, நான் திரும்பிப் போய் நாயகனுக்குச் சொல்லும்போது விற்படை பெரிதென் பேனே? வேற்படை மிகுமென்பேனே? வாட்படை வலிதென் பேனே? கற்பணம், தண்டு பிண்டிபாலம் என்னும் இப்படிப் பட்ட நற்படை யதிக மென்பேனே? என்னென்று சொல்வேனென இவ்வாறெல்லாம் ஆலோசித்து நின்று, இனி நான் இவ்விதமிருப்பின் அரக்கர்கள் வந்து காண்பினுங் காண்பார்கள் என்று கருதித் தன் பெரிய மேனியைச் சுருக்கிக்கொண்டு அம் மலையின்மீதே யிருந்தான். சூரியனும் மேல்கடலில் வீழ்ந்து மறைவதாயினன். மறைதலும், சுயபுத்தி யில்லாதவனையும், கற்றோர் சொல்லக் கேட்குங் குணமில்லாதவனையும், தனக்குப் பின் வரும் அனர்த்தம் இன்னதென்றறியும் ஞானமில்லாதவனையும், தீ வழிக்கே காரணமாய்ப் பொருளைத் தேடியவனையுமுள்ள இராவணனது பாவத்தைப் போலவும், ரூபகுண ஔதார்யங்களில் தனக் கீடில்லாத ஸ்ரீ தாசரதியினது தேவியாரைச் சிறை வைத்தான் என்னும் அவனது கொடும்பழி போலவும் எங்கும் இருள் வந்து மூடிக்கொண்டது. அப்போது அரக்கர்களெல்லாம் வெளிப்பட்டு இராவணனது கட்டளையின்படி சிலர் இந்

திர லோகத்திற்குப்போவதையும், சிலர் சந்திரமண்டலத்திற்குச் செல்வதையும், சிலர் யமபுரத்திற் கேகுவதையும், தேவமாதர்களும், வித்தியாதர ஸ்திரீகளும், நாக கன்னிகைகளும் மின்னினங்கள் சஞ்சரிப்பனபோல அவ்விருளிற் சென்று அரக்கிமார்களுக்குப் பணிவிடை செய்வதையும், 'நிரம்பவும் தாமதமாய் விட்டது; அரக்கர்கள் கோபிப்பார்கள்' என்று நடுநடுங்கித் தாங்களணிந்துள்ள முத்தாரங்களும், முடிகளும், மாலைகளும், உத்தரீயங்களுஞ் சரிந்து விழத் தேவர்க ளோடுவதையும் பார்த்து ஆச்சரிய மெய்தினன். அக்காலை, தீவினை யென்னும் நெருப்பினால் தகிக்கப்பட்டு உலர்ந்துபோய் மாருதி யென்னும் மழையினால் திரும்பவும் தர்மமானது முளைப்பதுபோலச் சந்திரன் உதயமானன். 'இராகவன் தூதன் வந்தான்; இனி இந்திரனும் வாழ்ந்தான்' என்று ஸந்தோஷிக்கின்ற கீழ்த்திசை யென்னும் ஸுந்தரியினது முகம் போலவும், 'இனி என் பகை தொலைந்தது' என்றெழுந்த இந்திரனது வெண்கொற்றக் குடை போலவும் அத்தண்மதி யொளியுற்று விளங்க, ஆகாசமானது திங்களென்னும் வெள்ளிய குடத்தினால், பாற்கடலை மொண்டு பாலைச் சொரிந்தாற்போல எங்கே பார்த்தாலும் சந்திரிகை விரிந்து பரவுவதாயிற்று. ஹநுமான் மீது தேவர்கள் வருஷித்த புஷ்பங்கள் அரக்கர்க்கஞ்சிக் கீழ்விழ மாட்டாமலும், திரும்பவும் ஸ்வர்க்கத்திற்குப் போக வலியில்லாமலும் ஆகாயத்திலேயே தங்கினாற்போல நக்ஷத்திர கணங்கள் பிரகாசித்தன. இரவினது ஒரு பகுதியும், அவ் விரவைப் போக்கிய நிலவினது ஒரு துண்டும் தம்முட் பகைகொண்டு போர்புரிவனபோல மல்லிகை மலர்களில் வண்டுகள் தங்கியிருந்தன. அக் கடிமதி விலங்கைக்கு வெள்ளிய துகிலினால் உறையிட்டது போலச் சந்திரனுடைய பசியகிரணங்கள் ஓரிடந் தப்பாமல் எங்கும் நுழைந்து

நிறைந்தன. மேலும் அந் நிலாவானது காகுத்ஸ்தனது பாணத்தைப்போல அதி விரைவாகச் சென்ற ஹநுமானைத் துணையாகக்கொண்டு இலங்கா நகரத்திற்கு வந்து பரவிய ஸ்ரீ ரகுநந்தனர்களது புகழ் போலவும் பொலிவுறத் தோன்றிற்று.

இவ்வாறு நிகழுங்காலத்தில், கபிசிரேஷ்டனான ஹநுமான் எவ்வழியாக இதிற் பிரவேசிப்பது என்பதை யுணர்ந்து, ஆழியை அகழாகக்கொண்டு வானுலகை முட்டி யோங்கிய பொன்னு லாகியதோர் மதிலையுற்று, அம் மதிலின் உயர்ச்சி கண்டு வியந்து, பின் யமபுர வாசலைப் போன்ற அந் நகர வாசலையும், அவ்வாசலைச் சூலம், மழு, வாள், அயில், தோமரம் முதலிய பற்பல விதமான ஆயுதங்களையு மேந்திக்கொண்டு பங்குனியில் மலர்ந்த பலாசவனமோ என்னும்படி செம்பட்ட மயிர்த்தலையரான பல அரக்கர்கள் காத்துக்கொண்டிருப்பதையும் நோக்கி, 'இவ் வாசல் வழியாகப் போவது மிகவும் அரிது; அன்றியும் இவர்கள் வைத்த வாயில்வழியாகப் போவதும் அழகன்று; சூரியனைத் தொடும் இம் மதிலைத் தாண்டியே உட்புகுவேன்' என்று ஒரு பக்கமாகப் போயினன். அங்கே ஒரு அரக்கி எட்டுத் தோளும் நாலு முகமும், சுழல்கின்ற கண்ணும், அச்சந் தருகின்ற நூபுர மணிந்த காலும், மழைபோல் முழங்கும் குரலும், மின்போல் ஒளிர்கின்ற ஆபரணங்களு முடையவளாய் வேல் வாள் சூலம் முதலிய ஆயுதங்களைப் பிடித்துக்கொண்டு நமனுக்கும் நடுக்க முண்டாம்படி பயங்கரமாய், 'நில், நில்' என்று தனது கோர தந்தங்களையுடைய வாயைத் திறந்து சொல்லிக்கொண்டே மாருதியின்பால் வந்து "அட அறிவில்லாய்! வீணே இம் மதிலைத் தாவி என் கோபத்துக் காளாகாதே, ஓடிப் போ" என்று கனன்று கூறினள். அது கேட்ட ஹநுமான் 'இவ் வூரைப்

இலங்கைமாதேவி வதைப்படலம்.

பார்த்துவிட்டுப் போக வந்தால் உனக்கேன் இந்தக் கோபம்' என்று தணிந்து வார்த்தை சொல்ல, அக்கொடியாள் "போ என்றால் போகாமல் எதிர்த்தும் பேசுகிறையா? திரிபுராந்தகனை ருத்திரன் முதலியோரும் எனக்கு அஞ்சுவர். அப்படி யிருக்க நீ யாரடாவன் பயமின்றித் தாவ முயல்கிறாய்? மேலும் உன்னால் தாண்டத்தான் முடியுமா?" என்று கூறி நகைத்தாள். ஐயனும் அவள் நகைப்பதைக் கண்டு நகைத்தவளவில், அவள் மிக்க சினங்கொண்டு சூலத்தாற் குத்த முயல, ஹநுமான் அவற்றை யெல்லா முறித்தெறிந்து அவளையும் ஒரே யடியால் அடித்துக் கீழே தள்ளினான். அவளும் இடியுண்ட நாகம் போலக் கீழ் வீழ்ந்து ரத்த வெள்ளத்தில் மூழ்கிப் பின்ன ரெழுந்து ராம தூதனுக்கு முன்னின்று, "ஐயனே கேட்பாயாக; நான் பிர்ம்ம தேவனது கட்டளைப்படி இந் நகரைக் காப்பவளாவேன். இலங்காதேவி என்பவள் நானே. தீத்தொழில் புரிந்ததால் இவ்விதமாயினேன். 'எப்போது ஒரு குரங்கு உன்னைக் கைத்தலத்தாற் புடைத்துச் செல்லுமோ அப்போது என்னைக் காண்பாய், நகரமும் உடனே அழியும்' என்று நான்முகன் கூறியிருக்கின்றான். அப்படியே முடிந்தது. அறம் வெல்லும், பாவந் தோற்கும், என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இனி உன்னால் எல்லாக் காரியமுங் கை கூடும். நீ தாராளமாய்ப் போவாய்" என்று சொல்லிவிட்டுப் பிர்ம்மலோகம் போய்ச் சேர்ந்தாள்.

வீரனை ஹரிபுங்கவனும் ஜாநகீகாந்தனுடைய திருவடிக் கமலங்களை மனத்தால் வணங்கித் துதித்து அந்தப் பொன் மதிலைத் தாவி அப்புறம் புகுந்து, நிர்த்தோஷமான மணிகளா லிழைக்கப்பட்ட மாடகோடிகள் பேரிருளையெல்லாம் விழுங்கிப் பகலாக்குகின்ற அழகைக் கண்ணுற்று, சூரியன்தான் உதித்து விட்டானோ வென்று திடுக்கிட்டு, "நியாயந்தான், 'இந்நகரத்

தின் மாடங்களே இருளை யகற்றிப் பகல் செய்யக் கூடியவை யாயிருக்க நான் இருப்பதுமிகைதானே' யென்று நாணமுற்றுக் கதிரவன் விலகிப் போகின்முன்போ லிருக்கிறது. உண்மை யைப் பார்க்கின் அத்திவாகரன் இந்நகரின் மதிலிற் றேன்றுவானுயின் அவன், தன் முன் தோன்றும் மின்மினியினுங் கேடுகெட்டு விளங்குவா னென்பதில் சிறிது மையமில்லை'' என்று வியப்பெய்தினன்.

ஊர்தேடுபடலம்.

இவ்வாறு மாடங்கள் இரவைப் போக்குவதால்தான் இம் மூதூரி லுள்ள ராக்ஷஸர்கள் நிசாசரர்களானார்போலும் என்று எண் ணினன். இவ்விதம் பற்பலவாக இயம்பி, ரகுகுல திலகனை ஸ்ரீ ராகவனது புகழ்போலவும், தேவர்களுக்கு அமிர்தத்தை யளித்த மந்தர பர்வதம்போலவும் உயர்ந்து திரண்ட புஜங்களை யுடையவனான ஹநுமான் வீதிவழியாக ஏகுதல் கூடாதென்று நினைந்து, தன் பெரிய திருமேனியைச் சுருக்கிக்கொண்டு பூக் கள் தோறும் தாவிச்செல்லும் வண்டைப்போலக் கடல் கடந்த தனது காலால் மாடங்கள்தோறுஞ் சென்று தேடுவான்; பல விதமான சாலைகள்தோறும் எய்தி நாடுவான்; யானைக்கூடந் தோறும் போய்ப் பார்ப்பான்; குதிரைப்பந்திகள்தோறும் ஏகி யாராய்வான்; இப்படி ஒவ்வொரு இடமாகச் சோதித்துச் செல் லும்போது அங்கங்கு சுவர்களி லிழைக்கப்பட்ட நானாவிதமான மணிகளின் சாயையால் வாயு புத்திரன் கறுப்பாயும், வெண்மை யாயும், சிவப்பாயும் நிறம் மாறுபட்டுக், காண்பதற்கு எளியவனு யும் அரியவனுயும் விளங்கும் மகாமாயனை தன் உள்ளத்தி லிருக்கும் ஸ்ரீ ராகவனது வியாபாரத்தைக் கைக் கொண்டவன் போலக் காணப்பட்டான். இங்ஙனமாக, அமரர் மாதர் ஆகாச கங்கையின் தெண்ணீர் கொண்டு நீராட்டக் கற்பகச் சோலையி லிருந்து மஞ்சன மாடுகின்றவர்களையும், தாங்கள் தளிர்க்கை

நோவ அளந்தெடுத்தமைத்த வீணையின் ஓசையைக் கெடுக்கும்படி முழங்கிற்றென்று மேகத்தினது வாயைப்பொத்துகின்றவர்களையும், அழகிய பூம்பந்தலின் கீழ்ச் சுவர்ணமயமான நடனசாலையில் கந்தர்வ ஸ்திரீகள் நர்த்தனம் புரியக்கண்டு மகிழ்கின்றவர்களையும், தாங்கள் தங்கள் நாயகர்களின்மீது வைத்த காதலாகிய பயிர்க்கு நீர் வார்ப்பதுபோல மதுபானம் பண்ணிக் களிக்கின்றவர்களையும், பாதத்திற்குச் செம்பஞ்செழுதி, மேனியில் அளவில்லாத வாசனையை யுடைய கலவையைப் பூசிக், கண்ணென்னும் வாளுக் கஞ்சனந் தீட்டிக் கற்பகம் கொடுக்க வாங்கி நல்ல பூஷணங்களைத் தெரிந்து தரித்துக் கோலஞ் செய்து கொள்ளுகின்றவர்களையும், வள்ளத்திலுள்ள கள்ளில் தங்கள் முகம் பிரதிபலிக்க அவற்றைக் கண்டு கணவரைக் கோபிக்கின்றவர்களையும், நாயகர்களைப்பிரிந்த தாபத்தால் ஸ்தனங்களிற் பூசிய கலவை தீயும்படி வளைக்கையால் வதனத்தைத் தாங்கிக் கொண்டு மிக்க வருத்தத்தோடு அந்நாயகர்களை யெதிர்பார்த்து நெடுநேரமிருந்து சோர்கின்றவர்களையும், மிக்க காதல் தூண்டுதலால் வழிமேல் விழிவைத்துச், சென்றுவந்த தூதியர்களது முகத்திற் புன்னகை கண்டு உயிர்வந்து துடிக்கின்றவர்களையும், அரம்பை மாதர்கள் மங்கள கீதம் பாட கிருக தேவதைகளுக்குத் திருவிழாச் செய்பவர்களையும், நாயகர்களோடு ஊடினவர்களாய்ப்பிரிந்து தங்கள் உணர்வு உள்ளம் மற்றுள்ள கரணம் எல்லாம் அவ்வன்பரைத் தொடர்ந்தொழியத் தாமும் தமது பிராணனுமாக மீண்டு கதவையடைத்திருந்து வருந்துகின்றவர்களையும், கின்னரர் முதலியோர் கீதம் பாட முத்தாற் செய்யப்பட்ட விமானத்திலேறிப் பன்னகமகளிர் பல்லாண்டு பாடப் புதிய கிருகத்தில் பிரவேசிக்கின்றவர்களையும், முரஜம் முதலிய மங்களவாத்தியங்கவொலிக்க தேவ ஸ்திரீகள் வாழி பாட விவாகம் செய்து

கொள்ளுகின்றவர்களையும் சென்று சென்று நோக்குவான். யக்ஷ, கின்னர, வித்தியாதர மாதர்களையும் மயக்கற நாடிச் செல்வான். இவ்வித மேரு மாருதி ஒரு பெரிய மலைபோற் கிடந்து உறங்கும் கும்பகர்ணனைக் கண்டான். ஏழு யோசனை யகன்று ஏழுயோசனை யுயர்ந்து அஷ்ட திகந்தங்களிலுமுள்ள இருளையும் நீக்கும் காந்தி யுள்ளதாய் ஓங்கியவோர் ரத்ன மண்டபத்தின் நடுவில் திவ்யமான ஓர் படுக்கையில் பன்னக அரசனோ, கரிய ஸாகரமோ, இருளெல்லாம் ஒரு வழித் திரண்டதோ, அன்றித் தீவினைதான் இவ்வுருக்கொண்டு வந்ததோ என்னும்படி கிடந்து, கடலிலே முழுகிப் பராகங்களை யுகுக்கின்ற கற்பகச் சோலையின் வாசனையை யளைந்து இனிய தென்றற்காற்று வந்து வீச, வானவர் மகளிர் கால் பிடிக்கத் தூங்குகின்ற அக் கும்பகர்ணனுடைய மூச்சுக் காற்றானது வாசலின் புறத்தே வந்து அங்கே சென்றுகொண்டிருந்த ஹநுமானை நிறுத்தி மகா பராக்கிரமசாலியான அக் கும்பகர்ணனுடைய மூக்கினருகில் இழுத்துக்கொண்டு போய் விட, அது கண்ட ஹநுமான் மிகக் கூச்சமுற்றுக் குதித்து விதிர் விதிர்த்த கையினையுடையனாய், உலகெல்லாம் ஒருங்கே துடைக்கும் மாருதமானது பிரளயத்தினது வருகையையெதிர்பார்த் துழல்கின்றதோ வென்னும்படியான பெரிய சுவாசத்தையும், சந்திரன் தனக்குப் பகை யென்பதாகக் கருதி அதனை யிரு பிளவாக்கி யருந்துகின்றானோ என்னும்படி இரு கடைவாயிற் றோன்றும் வக்கிர தந்தங்களையும் பெற்று மந்திரத்தால் தடைப்பட்ட நாகம்போலவும், யுகமுடிவின் வரவு பார்த்துப் பொங்காமல் அடங்கி நிற்கும் கடல் போலவும் அசையாமல் துயில்கின்ற தன்மையனான இவன் ராக்ஷஸ ராஜனான இராவணனாகத்தா னிருக்கவேண்டும் என்று எண்ணிக்கொண்டு கண்களில் நெருப்புப்பொறி பறக்கக்

கனன்று அவன் சமீபத்திற்சென்று பார்த்துப் பத்துத் தலைகளு மிருபது புஜங்களு மிவனுக் கில்லையென்பதாகத் தனக்குண் டான கோபமாகிய வடவாமுகாக்கினியை அறிவென்னும் பெரிய கடலால் அவித்தடங்கினான். அடங்கி, ஸ்ரீ ராகவன் புகழையே கர்ணாமிர்தமாகப் பருகும் பண்புடைய கபிநாயகன், இவனெவனாகினும் ஆகுக, இவன் தொலைய இன்னுஞ் சில நாள்தான் இருக்கின்றது என்பதைச் சிந்தித்து அவன் உறை விடத்தைக் கடந்து மாட கூடங்கள், மாளிகை வரிசைகள், மகளிர் நடனம் புரிகின்ற அரங்குகள், அம்பலங்கள், தேவால யங்கள், வித்யாசாலைகள், கான சபைகள் முதலிய எல்லாவிடங் களையும் நாடிக்கொண்டு வாயில் வழியாகவும் சாளரங்களின் வழியாகவும், வழிக்குத் தக்கபடி சிறிதாகவும் பெரிதாகவும் உரு வத்தை யெடுத்துக்கொண்டு காற்றோடு காற்றாயும் புகையோடு புகையாயுங் கலந்து, அணுவிலும் மேருவிலும் ஒரு படியாக விளங்கும் தனது நாயகனான கோதண்டபாணியைப் போலச் செல்வதாயினான். சமீரணன் தனயன் இவ்வாறு எல்லாப் பக் கங்களிலுந் தேடிப் பின் மடந்தையர் யாரையுங் காணாங் கருத் தினனாய்ச் சென்று முதலில், வேந்தர் வேதியர் விண்ணுளோர் மண்ணுளோர் எல்லாரும் புகழும்படி பிறந்தவனான புண்ணரி யாத்துமாவாகிய விபீஷணனுடைய அரண்மனையுட் புகுந்து அந்நகரில் அரக்கருக்குத் தெரியாமல் வேறு வடிவத்தோ டிருப் பது அருமையென்று கருதித் தருமந்தான் இவ்வாறு ராக்ஷஸ சரீரங்கொண்டு மறைந்து வாழ்கின்றதோ என்னும்படி அங்கே துயில்கின்ற வீபீஷணனிடஞ் சென்று, அவனியல்பு இன்ன தென்பதைத் தன் உணர்வால் அறிந்து, இவன் மகா குணசாலி யென மகிழ்ந்து, அப்புறம் போந்து நொடிப்போதில் கோடிக்கு மேற்பட்ட மாடங்களிற் கிட்டி, அங்குள்ள அரம்பையர் முதலாக

வுள்ள எல்லா மங்கையர்களையும் பார்த்துத் திரும்பி, இந்திரன் சிறையிருந்த வாயிலிடத்தே வந்து, அங்கு ஆயுதங்களை யேந்திய கையினராய் யுத்தவிஷயமான கதைகளைச் சொல்லிக்கொண்டிருக்கின்ற லக்ஷக் கணக்கான ராக்ஷஸர்களின் காவலைக் கடந்து உட்புகுந்து, அங்கே அநேக ஸ்திரீகளின் மத்தியில் துயில்கின்ற இந்திரசித்தைக் கண்டு, அவன் அழகையும் பராக்கிரமத்தையும் பலவாறு பாராட்டி யுரைத்து, இங்கே வீணே நிற்பது தகுதி யன்றெனத் திரும்பி ஆயிரக் கணக்கான மாளிகையிடங்களில் சென்று தேடினான். அக்ஷன் மாளிகையையும், அதிகாயன் கோயிலையும், தம்பியர்கள் இல்லத்தையும், சேனைத் தலைவர்களின் மனைகளையும் தொடர்ந்து பார்த்தான். பின்னர் மூன்றாணிற்கு நடுவி லுள்ளதாகிய அகழியைக் கண்டு அதன் விஸ்தாரத்தையும், வாஸனையையும், அழகையும், பக்ஷிஜாலங்களும் யானைகளும் அதிற் கிரீடிப்பதையும், நவரத்னங்களா லான அதன் கரையின் காந்தியையும், அக் காந்தியால் அவ் வகழி நீர் பன்னிறமுற்றுப் பாற்கடல்முதல் எல்லாக் கடலும் ஒன்று சேர்ந்தனபோல விளங்குவதையுங் கண்டு பெருவியப்பெய்தி அவ் வகழியைக் கடந்து, அவ் வர்த்த ராத்திரியில் காலனும் வெருவி யோடுகின்ற பயங்கரமான ராக்ஷஸ வீதியிற் புகுந்து தான் ஒருவனாகவே பன்னிரண்டு யோஜனை தூரமுள்ள மூன்று லக்ஷம் வீதிகளையும் தேடினான். அப்போது எல்லாத் தொழிலாளிகளும் தங்கள் வியாபார மொழிந்து தூங்கினார்கள். நியமமுடையவர்களாய், நிறைந்த ஞானத்தையுடைய உத்தமர்களும் யோகிகளும் துயின்றார்கள். மதங்கொண்ட களிறும் உறங்கின. பித்தரும் மயக்கமுற்றுத் தூங்கினார்கள். ஊர் காப்பாளரது பறையே யெங்கும் முழங்கின. அன்பரைப் பிரியாத மாதர்களில் ஊடினவர்களை யொழிய மற்றையோர்

காம சுகத்தை நுகர்ந்தவர்களாய் மெய்மறந்து பரவசராய் நித்திரை போனார்கள். பகைவர்களது சோர்வு கண்டு வருந்துகின்றவர்களைப்போல நெய் குறைந்து இழிய எரியும் விளக்குக்களைத் தென்றற்காற்று அணைத்துவிட ரத்ன தீபங்கள் எங்கும் பிரகாசித்துக்கொண் டிருந்தன. அப்பொழுது அம் மதிலகத்தில் அரசர் வாழும் தெருக்கள் கோடியையும் விரைவிற் சென்று ஒவ்வொன்றையும் நன்றாகப் பார்த்துத் தேடிப் பின்னர், தீயவனை இராவணனது இருக்கைக்குச் சுற்றிலு மிருப்பதோர் அகழியைக் கண்டு அவ் வகழியின் மதிலையுந் தாவிக் கடந்து உள்ளே பிரவேசித்தான். அங்கே தசகண்டனுடைய பொன்மனை சந்திரனாக அம் மனையைச் சுற்றி நக்ஷத்திரங்களைப் போலச் சூழ்ந்துள்ள மங்கைமார்களது இருப்பிடத்தை நண்ணினான். மதி கண்டு கலங்கும்படியான மாசற்ற முகத்தையுடைய யக்ஷ கன்னிகைகள் எய்தி வாழும் தெருவெல்லாஞ் சென்று தேடினான். சிலர், இராவணன்மேல் வைத்த சிந்தையராய்க் கண் கொட்டாமல் சித்திரம்போல இருப்பதையும், மாரனுக்கு அஞ்சியோ கனவின் பயன் வேண்டியோ வுள்ளமின்றிச் சிலர் கண் மூகிழ்த்து உறங்குவதையும், மன்மதன் கணைகள் பாய்ந்த கொங்கைகளை யுடையராய்ப் பெருமூச்செறிந்து, 'அழுது செய்வதென்ன? அரக்கனை யெழுதலாமா?' என்று சிலர் எண்ணுகின்றதையும், சிலர், 'எனக்கான தொன்றும் சொல்லமாட்டாயா?' என்று கண்ணீர் ததும்பப் பாவைபோலப் பூவையோடு புலம்புகின்றதையும், சிலர் தென்றலால் மெலிந்து தமது கொங்கைகளைப் பார்த்துப் பாதகன் தோள்களை நினைந்து சோர்ந்து சோர்ந்து உயிர் துடிக்கின்றதையும், சிலர், பத்மராக மிழைத்த சயனத்தில் செவ்வானத்திலொளிருந் திங்கள்போலக் கிடந்து திகைப்பதையும், சிலர் தெய்வ மங்கையர் பரப்பிய

ஹம்ஸ தூளிகா மெத்தையிற் கிடந்து புரண்டு யாமேளாசையென்னுந் தேள் கொட்டத் தியங்கி வருந்துவதையும், சிலர் கைகலையைப் பறித்த கொடியோனது தோளின் சந்தனத்தைத் தமது முலைத்தடத்திலே கண்டு குலாவுகின்றதையும், சிலர், தன் கை நரம்பினுல் ஆனந்தத் தாண்டவம் புரியும் உமாபதியின் புகழைப் பாடிய பாவியினது புகழைப் பாடுவதையுங் கண்ணுற்று அவ் விராவணனது குலப் பெண்கள் வாழும் இடங்களையும் எய்தி நாடினுன். அங்கே விளக்கின்றி விரியிருள் பருகி விளங்கும் மணிக ளிழைத்த மாடங்களில், நாயகன்பாற் சென்ற மனத்தினராய்த் தனியே கிடந்து சிலர் வருந்துவாரையும், சிலர் எரி போல் விளங்கும் செம்பட்ட மயிரில் புகையென வண்டு மொய்க்க மலர்ப்பள்ளி பகையெனத் துறந்து, பளிங்காற் .செய்யப்பட்ட பள்ளியிற் கிடந்து காமத்தால் வெதும்புவாரையும், சிலர் தமது கரிய மேனி ஆகாயமாகவும், முத்தாரம் அவ் வாகாசத்தில் விளங்கும் நக்ஷத்திரங்களாகவும், இடைமின்னற்கொடியாகவும், கண்கள் மேகமாகவும், செம்பட்ட கூந்தல் செவ்வானமாகவும், நெற்றி சந்திரனுகவுங் கொண்டு அந்திமாதையொத்து விளங்குவாரையும், சிலர் வண்டுகளொலிக்கக், குழல் சோர நிலாமுற்றத்திருந்து நக்ஷத்திரங்களைப் பிடுங்கி அம்மானை யாடுவாரையும், சிலர் சுரநதி குளிர்ப்பிலது என்று எண்ணி மேகத்தைப் பொதுத்து மஞ்சனமாடுவாரையும், சிலர் தமக்கு நாயகர் அன்போடு தந்ததென்று ஸர்ப்பராஜனது சிரோ ரத்னத்தை மாத்திரம் வைத்துக்கொண்டு, மற்றுள்ள வித்யாதரர்களது முடியையும், ஆபரணத்தையும் பந்தயம் வைத்துச் சூதாடுவாரையும், சிலர் அரம்பை மாதர்களை யாடல் கண்டிருப்பாரையும் சிலர் காத லகத்தைச் சுடலால் தூக்கம் பிடியாமல் வீணையுங் குழலும் தமது கண்டமும் வேற்றுமை தெரியாமல் அமிர்தகப்

பார்வோரையும், சிலர் கூனிலுள்ள கள்ளை யுண்டு துகில் விலகி யிருப்பதையு முணராது குழறுவாரையும் கண்டு, அவ்வரக்கர் மாதர் தெருவைக் கடந்து, சித்த கன்னிகைகள் வாழு மிருக்கை யை யடைந்து ஆராய்ந்து, பின்னர் அதனைக் கடந்து வித்தியா தரமாதர்கள் வாழும் உறையுளை யுற்றான். அங்கு அரக்கன் வரக் காணுமற் சிந்தை தம் இடையினு நடுங்கத் தடுமாற்ற முற்றுப் பாடலாகிற பாம்பு தம் செவியுற் புகப் பொறுமல் வருந் துகின்றவர்களையும், துஷ்டனை அரக்கனுக்குப் பரிகின்ற நெஞ்சினர்கள் இவர்களென்று சந்திரனது கிரணங்கள் தமது முலைகளைச் சுடக் கொடிபோற் றுடிக்கின்றவர்களையும் நோக்கி, அங்கிருந்து திரிலோகாதிபதியாக விளங்கும் ராக்ஷஸனது பெருங்கோயிலுக்குப் போக விருக்கையில் இடையில் மயன் மகளான மண்டோதரி வாழும் மணிமாடத்தைக் கண்டான். கண்டு தன் கண்களை மனத்தொடுங் கூட்டி யோஜித்தான். நான் தேடி வந்ததற்குக் காரணமான பொருளை முடிவிற் காண் பவனுனேன். எல்லாவற்றிலும் இம் மாளிகை சிறந்து காணப் படுகின்றது; எங்கள் நாயகனுக்கு உயிரினுஞ் சிறந்த தேவியா ரைக் கொண்டுவந்து வைத்திருக்கிற இடம் இதுவேயோ ? குல மணிகளாலான மற்றைய எல்லா மனைகளிலும் இது திருமாலின் திருமார்பில் விளங்கும் கௌஸ்துபமணிபோலச் சிறந்து தோன் றுகின்றது என்று வியப்புற்று உள்ளே சென்று அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி முதலான தெய்வ மங்கையர் கள் கூடிச் சிலர் மன்மதனது அம்பறுத்தூணி போன்று விளங் குந் தளிரடியைப் பிடிக்க, சிலர் சிலர் சாமரை வீச, கரும்பினும் இனிய சொல்லியர் சிலர் வீணை வாசிக்க, தென்றல் ஸுககர மாக வந்து தவழ இவ்விதமான தன்மையோடு ரத்ன தீபங்களும் தன் மேனியின் காந்தியால் ஒளி மழுங்கும்படி துயில்கின்ற தையலைக் கண்டு ராஜ சோபையுள்ள அந்த ஜானகி இவள்தான்

என்று மாறுபடக் கருதித் தன் மனத்திலெழுந்த கோபாக்கினி தன்னுடலைச் சுட மிகுந்த துன்பமுற்றவனாய், எலும்புகளா லான இச் சரீரத்தா லடையக்கூடிய பலனை இழந்திட்டேன்; என் செய்வேன்! ஒழியட்டும்; ஸ்ரீ ராகவனிடத்துள்ள அன் பென்னும் பாசத்தைக் குடிப்பிறப்பென்பதனோடு மொழித்துத் தனது தெய்வக் கற்பு நீங்கிய மாதரசி யிவளாயின் காகுத்தன் புகழும், பொலிவும், யானும், இவ் விலங்கையும், அரக்கரும் இன்றோடு ஒழிந்தோம் என்று சொல்லி மனங் கரைந்துருகிச் சிந்திப்பான்:—ஸீதை மனிதத் திருக்கோலங் கொண்டவள்; இவளோ மனுஷ்ய ஜாதியின் வேறாகக் காண்கின்றாள்; யக்ஷ கன்னியோ, அஸுர நங்கையோ, யாரோ ஸந்தேகிக்கத் தக்க வளா யிருக்கிறாள். திவ்ய பரிமளமுள்ள மாலையைத் தரித்த ஸ்ரீ ராமன்மேற் காதல்கொண்ட காரிகையார்க்கு மகரத்வஜனான மன்மதன் பக்கத்தில்தான் மனந் திரும்புமா? இதென்ன வீணான ஸந்தேகம். நாம் இவ்விதம் நினைத்ததும் பெருந்தவறு என்று தெளிந்தான். உத்தம லக்ஷணங்கள் சில காணப்படினும் அவை பூரணமாக விருக்கவில்லை. மேலும் அதி ஸமீபத்தில் மிக்க துன்பம் விளையப்போகின்ற தென்பதை இவள் சரீரமே நன்கு தெரிவிக்கின்றது. மலர்க் குழல் சோர வாய் குழறிப் பிதற்றுகின்றாள். இதை யுணரின் இவள் கணவன் இறந் தொழிவான் என்பதும், அழிவு இந் நகரத்துக்கு வந்துவிட்ட தென்பதுந் தோன்றுகின்றது, என்றெண்ணி அவ்விடம் விட்டுப் பெயர்ந்து மேருவும் குன்றிமணி யென்னும்படியா யுயர்ந்ததோர் மாளிகையிற் சென்று புகுந்தான். புகுந்ததும் பூமி யதிர்ந்தது. மலைகள் பொடியா யுதிர்ந்தன. நிருதர் மங்கையர்க்குக் கண் புருவம் தோள் எல்லாம் வலப்புறம் துடித் தன. மின்ன லின்றியும் வானம் இடித்தது. மங்கள கலசங்

கள் வெடித்தன. இவற்றையெல்லாம் மாருதி நோக்கி யிரக்க முற்றுக் கலங்கி 'அந்தோ! இந்நகரத்தைவிட்டு லக்ஷ்மி விலகிப் போவாளென்று தெரிகிறது. என்செய்யலாம்! எக்குலத்தவ ராயினும் யாவராயினும் புண்ணிய பாப கர்மங்கள் எல்லார்க்கு மொன்றே. ஊழ்வினையினும் வலியது ஒன்றுமில்லை' யெனச் சிந்தித்து, அங்கு வெள்ளிய காந்தி வீசுவதோர் மண்டபத்திற் பாற்கடன்மீது கருங்கடல் கிடந்ததுபோலும் பண்பினை யுடையனாய், மலைமேல் இளஞ்சூரியன் உதித்தாற்போன்று தோன்றும் இரத்தின கிரீடங்கள் மற்றும் பல ஆபரணங்களோடு கூடி யிர வென்னும் பொருளே யில்லாம லழித்து விளங்க, இரணியனைக் கொன்ற வலிய நரசிங்கம் பல தலையுங் கையுங்கொண்டு மேரு வின் குகையிற் றுயில்வதுபோலத் தூங்குகின்றவனும், அரம்பை யர்கள் ஆயிரக் கணக்காய் அணியாக எதிரே நின்று பொற்கவரி வீச, இளந் தென்றலோடு விரவிவந்த கற்பகத் தேன்றுளி மெல்லென மேலே விழும்போதெல்லாம் ஸீதையை நினைந்து நினைந்து உயிர் தளர்கின்றவனும், மனம் முதலான கரணங்களை யெல்லாம் ஜானகிபாற் போகவிட்டுப் பாம்பு நீங்கிய புற்றைப் போலப் பாழ்பட்ட நெஞ்சையுடையவனும், வாரி வாரித் தின்ற தேவர்களுடைய புகழ் தெவிட்டிப்போய்க் கடைவாய்களின் வழியாக வழிகின்றதோ வென்னும்படி விளங்குகின்ற வெள் ளிய கோர தந்தங்களை யுடையவனும், புஷ்ப சயனம் வெந்து பொறி யெழும்படி வெதும்புகின்ற மேனியில் நீர்க்குமிழிபோல் வேர்வை பொங்கப், பூமாலை வண்டோடு கரிந்துபோம்படி சுவா சம் விடுகின்றவனும், மும்மூர்த்திகளுடைய ஆயுதத்தையும் வாய் மழுங்கப்பண்ணின மார்பையுடையவனும், பகைவர்களது முடிகள் பட்டுப்பட்டுத் தழும்பேறிய பாதங்களை யுடையவனு மான இராவணனைக் கண்டான். பத்துத் தலைகளும் இருபது

கைகளு மிருப்பது தெரிந்து கோபத் தீ பொங்க விழிகளிரண்டும் கீண்டு பிதுங்கச் சொல்லுவான் :—"வாள்போலும் கண்களையுடையவளான ஸீதையை வஞ்சித்த துஷ்டனுடைய மணிமுடிகளை எனது காலா லுதைத்துத் தள்ளித் தலைகள் பத்தையும் தகர்த்தெறிந்து என் பராக்கிரமத்தைக் காட்டேனாயின் நான் அடியவ னுகேன். தேவியாரைத் தூக்கிவந்த இவ் வரக்கன் என் கண்ணெதிர்ப்பட்டும் பிழைப்பானோ? தலைகளை யுதைத்துருட்டித் தோள்களையு மொடித்து வீசி இவ் வூரையும் முடித் தொழித்தால் பின் வருவதெல்லாம் வரட்டும்" என்று தீர்மானித்துப் பல்லை நெறு நெறெனக் கடித்துக் கைகளையும் பிசைந்துகொண் டெழுந்து யோஜிப்பான்:— "இவ் விதஞ் செய்யும்படி ஸ்ரீராகவனது கட்டளை யில்லை. ஒன்றைச் செய்யத் தொடங்கி மற்றொன்றைச் செய்தல் உணர்வுடையோர்களுக்கு அழகன்று. பின் இது ஒரு பெரும் பிழையாக முடியும். நீல கண்டனை ருத்திரனைப் போலப் பராக்கிரமமுள்ளவர்க ளாயினும் பெரியோர்கள் பூர்வாலோசனையில்லாமல் ஒன்றையுஞ் செய்யார்கள்" என்று, காலம் நோக்கிக் கரைகடவாது அடங்கியிருக்கும் கடலைப்போலச் சாந்தமுற்று, "மேலும் வைதேகியாரைச் சிறை வைத்த கொடிய கண்டகனை ஒரு குரங்கு தொலைத்துவிட்டதென்றால் அது ரகுவீரனது வில்வன்மைக்குங் குறைவாகும்" என்று சிந்தித்து, ராவணன் காமத் தாற்புரள்கின்ற நிலைமையைக் கண்டு ஸீதை நன் னிலைமையிலிருக்கின்றாள் என்பதுந் தெரிந்தவனாய், இனி யிங்கிருந்து யாதொரு பயனுமில்லை யென அவ்விடம் விட்டுப் பெயர்ந்து அப்புறம்போய்ச் சிந்திப்பான்: "அந்தோ! இந்நகரில் மைதிலியார் இல்லை. கற்பழியாக் குலமகளைத் துஷ்ட ராக்ஷஸன் கொன்றானோ, கொடுந்தொழிலால் தின்றானோ, அன்றி வேறு

எங்கேனும் வைத்திருக்கின்றனரோ, இருக்குமிடம் இன்ன தென்று ஒரு விதத்தாலுஞ் சிறிதுந் தெரியக்கூடவில்லையே, என் செய்வேன்! பிராணனைப் போக்கினால் லல்லாமல் இக் கொடுந்துயரம் ஒருபோதும் நீங்காது. ஸ்ரீ ராமனோ கண்டு வருவான் என்றிருப்பான். கபி நாயகனான ஸுக்கிரீவனோ நிச்சயம் ஸீதையைக் கொண்டே வருவான் என்றிருப்பான். யான் செய்த காரியமோ இவ்விதமாயிருக்கின்றது. குறித்த நாளின் எல்லையுங் கடந்துபோயிற்று. கற்புடையாளை இன்னுங் கண்டபாடில்லை. உயிர்விடத் துணிந்த அங்கதாதிகளைத் தடுத்து அங்கே யிருத்தி இங்கே வந்த நான், எண்ணி வந்த காரியங் கைகூடப் பெறாமல் தவிக்கின்றேன். புண்ணியமென்பது என்னைவிட்டு விலகிப் போயிற்று. இருந்தால் காணாமற் போவேனா? ஐயோ! வீணே எழுநூறு யோஜனை தூரமுள்ள இந்த நகரைச் சுற்றித் திரிந்தேன். நான் காணாத பிராணி கிடையாது. என் நாயகன் தேவி யொருத்தியைமட்டும் யான் காணேன். இது என் தீவினையே. உவர்க்கடல் தாவி இடர்க் கடலில் வீழ்ந்து அழிகின்றேன். தீய அரக்கனைப் பிடித்துவந்து மலைபோலுள்ள கையால் இரத்தங் கக்கும்படியாக அடி அடி யென்று அடித்து ஸீதையைக் காட்டென்று சொல்லலாமா, இராவணனும் இவ்வூரும் வெந்து அழியும்படியாகக் கொள்ளியை வைத்துக் கொளுத்திவிட்டுச் செல்லலாமா; ஸீதை யிருக்குமிடம் இன்னதென்று தேவர்களைக் கேட்போமென்றாலோ இந்தக் கொடியோன் உயிரோடிருக்கும்வரையில் சொல்ல மாட்டார்களே. மற்றையோர்கள் எப்படிச் சொல்லப்போகிறார்கள்? இந் நகரைக் கடலிற் கரையாமல் இந்த சரீரத்தை வைத்துக்கொண்டு என் உழல்கின்றேனோ தெரியவில்லை. கழுகரசனான சம்பாதி திருவினைய உத்தமியை இங்கே கண்டேனென்

ளுன். அவன் வார்த்தையும் பொய்யாகப் போயிற்றே. யாது செய்வேன்."—என்றிவ்வாறு கலங்கி வருந்தி, எள்ளிடமும் பாக்கியில்லாமல் எங்கும் பரந்துநிற்கும் தனது ஹிருதயகமல வாஸியான பரந்தாமனைப்போல எல்லாப் பக்கமும் சென்று தேடிக்கொண் டிருக்கையில் பக்கத்தே ஒரு மலர்ச் சோலையைக் கண்ணுற்ருன்.

'பக்கத்தேயுள்ள இவ் வழகிய சோலையிற் சென்று தேடு வேன். அங்கே காண்பேனேல் என் சிறுமை தீர்ந்தது. கண் டிலே னென்னிற் பின்னர் நான் செய்யற்குரியது ஒன்றுமில்லை. இம் மலையில் இவ் விலங்கையை மோதியழித்து என் பிராண னையும் விட்டுவிடுவேன்' என்று தீர்மானித்து ஸ்ரீராகவனது தூதன் அச் சோலையிற் புகுந்தான். வானவர்கள் பூமழை சொரிந்து மகிழ்ந்தார்கள். இது

காட்சிப்படலம்.

நிற்க. அன்று கொடிய விராவணன் அங்கு சிறை வைத்த தெய்வக் கற்புடைய வைதேகியாரது நிலைமையையும் சிறிது சொல்வோம். அரக்கியர்கள் பலர் நெருக்க அங்கிருந்த பூங் குழற்பாவை கல்லில் முளைத்து என்றும் ஒரு துளி ஜலமேனும் கண்டறியாத அமிர்த சஞ்சீவியைப் போன்றவளாய்த் தனது இடைபோல மற்றுள்ள அங்கங்களும் மெலிந்து தோன்றினுள். தூக்கமென்று கண்ணிமைத்தலையுந் துறந்து வெயிலிடை வைத்த விளக்கைப்போல ஒளி மழுங்கினவளாய்க், கூரிய பற் களையுடைய பல புலிக்கூட்டங்களுக்கு மத்தியில் அகப்பட்டுக் கொண்ட ஒரு சிறிய மான்பேடைபோல நடுங்கினுள். விழுதல் விம்முதல், மெய் வெதும்புதல், வெருவல், எழுதல், ஏங்குதல் இரங்குதல், ஸ்ரீராமனை யெண்ணி யெண்ணித் தொழுதல், சோருதல், நடுங்குதல், துயர்கொண்டு நெட்டுயிர்ப்பெறிதல், அழுதல் என்னும் இவற்றையன்றி மற்றொன்றையும் செய்ய

வறியாது தியங்கினாள். பொன்மூலைத் தடங்களில் வீழ்ந்து அருவியாய்ப் பெருகி யோடும்படித் துவாரமுள்ளனபோல ஓயாமல் எப்போதும் நீரைச் சொரிந்துகொண்டே யிருந்த தன்மையால் ஸீதையின் கண்கள் உள்ளபடி அப்போது மழைக்கண்களாகவே விளங்கின. நீருண்ட மேகம், அஞ்சனம் இவைமுதலான அதிகமுங் கரிய பொருளைக் கண்டதும் ஸ்ரீராமன் திருமேனியை யொப்பிட்டுக் கண்ணீர் கடல்புகும்படி யழுதழுது சோர்வுற்றுத் தம்மில் ஒத்த அன்புடையரான தம்பதிகள் ஒருவரையொருவர் விட்டுப்பிரிந்த பிரிவென்னுந் துயரே உருக்கொண்டு வந்தாற்போலத் துன்பமெய்தி வருந்தினாள். பவளத்தைக் கடைந்தெடுத்துச் செய்தாற்போன்ற திருக்கைகளையும் திருவடிகளையுமுடைய நாயகனை கார்மேகவண்ணனை நினையும்போதெல்லாம் நெடிய கண்களினின்றும் பெருகுகின்ற நீரினால் நனைந்தும், துயரோடு நெட்டுயிர்ப்பெறியும் சரீரத்தின் வெம்மையால் உலர்ந்தும் ஒரு நிலையாயில்லாத துகிலையுடையவளாயும், சூர்ய குலத்தின் மேன்மையையும் தனக்கு வந்த அபவாதத்தையும் பார்த்துச் சுருதி நாயகனை ஸ்ரீராமன் நிச்சயம் வருவான் என்னும் நம்பிக்கையால் திசைகளையெல்லாம் அளந்துகொண்டிருக்கின்ற கண்களை யுடையவளாயும், வெள்ளிய சந்திரனை முற்றிலும் விழுங்கி உமிழ்ந்திட்ட ராகு போல நீண்டு ஜடையாகத் திரண்டு கீழ் வீழ்ந்து புரள்கின்ற கூந்தலையுடையவளாயும், உடுத்திருக்கின்ற பாலாவி போலும் இழையறியப்படாத அழகிய துகிலைத் தவிர வேறொன்றையும் அறியாதவளாயும், நிர்மலமாகத் தெளிந்த நீரில் மூழ்கப்பெறாத ஹம்ஸம் போன்றவளாயும், பாற்கட லமிர்தத்தைக் கொண்டு அநங்கன் அரிதாகத் தீட்டிய சித்திரமானது புகை படிந்தாற் போன்ற தோற்றத்தை யுடையவளாயும், நாளத்தை விட்டுப்

பிரிந்த பங்கஜம்போல வாட்டமுற்று வருந்தினாள். "போன லக்ஷ்மணன்தான் ஸ்ரீ ராகவனைக் காணவில்லையோ? கடலுக்கு மத்தியிலிருக்கின்ற இவ்விலங்கைதான் அவர்களுக்குத் தெரியாதோ? திரிலோக கண்டகனை பாவி என்னை யெடுத்து வந்ததைத்தான் அவர்கள் உணரார்களோ?" என்று சொல்லி நெஞ்சம் புகைவாள். "மிகுந்த சீலனை இளையவனைப்பார்த்துப் பாவியான யான் அறியாமற் சொன்ன வார்த்தைகளைக்கேட்டு இப்படியும் உன்னைச் சொன்னாளோ? இனி அவள் ஸகவாஸம் எனக்கு வேண்டாமென என் ஆருயிர் நாயகன் என்னைக் கைவிட்டுவிட்டானோ? அன்றி ஊழ்வினைதான் இவ்வாறு முடிந்ததோ?" என்று சொல்லிச்சொல்லி நாவுலர்ந்து சித்தங் கலங்கி உயிர் பதைப்பாள். 'கொண்டுபோன இரக்கமற்ற வஞ்சனையரக்கர் இத்துணைக்காலம் வைத்திருக்கமாட்டார்கள்; கொன்று தின்றிருப்பார்கள், யாம் இனிப் போய்ச் செய்யத்தக்கதென்ன இருக்கிறது' என்று ஒழிவுகொண்டார்களோ? தம் குலத்துக்கேயுரிய க்ஷமாகுணத்தைத் தாமும் மேற்கொண்டு சாந்தங்கொண்டாரோ? என்னென்று எண்ணுவேன்? என்று துக்கிப்பாள். "பெற்ற தாயாரும் தம்பியும் திரும்பிவந்து பிரார்த்தித்து அயோத்திக்குத்தான் அழைத்துச் சென்றார்களோ? சக்கரவர்த்தி சொன்ன பதினான்கு வருஷம் வனவாஸஞ் செய்தல்லது திரும்ப ஸம்மதியாரே, ஏதோ நடந்திருக்கிறது" என்று படாதபாடெல்லாம் படுவாள். "பராக்கிரமமே உருவெடுத்து வந்திருக்கின்றதோ என்னும்படி வீரர்களாய், வரமும், மாயமும், வஞ்சனையும் பெற்று முன்பு எதிர்த்துப் போர்புரிந்தவர்களைப் போல இன்னும் யாராவது யுத்தத்திற்கு வந்துவிட்டார்களோ?" என்று கரன் வரக்கண்டு நடுங்கியதைப்போல நடுங்கிக் கவலையை யடைவாள். ராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்துகொள் என்ற

போதும் இதை விட்டு வனவாஸத்துக்குப் புறப்படு என்ற போதும் ஒரே மாதிரியாய்ச் சித்திரத்தி லெழுதிய தாமரை மலர் போலப் பிரஸன்னமாக விளங்கிய முகத்தை நினைந்து தபிப்பாள். கங்காதரனது மேருவரையாகிய வில்லை ஓர் இமைப் போதில் இரண்டாயொடித்தெறிந்த புஜங்களை நினைந்து மெலிவாள். இந்திரனுக்கு இடுக்கண் விளைத்துக் கொண்டிருந்த தீயோர்களான கரன்முதலானவர்களைப் பதினாலாயிரம் சேனையோடு மூன்று நாழிகையில் தொலைத்த வில்வன்மையைப் புகழ்ந்து கொண்டாடி வெதும்புவாள். கங்கையில் தோணி தள்ளிய ஒரு ஏழை வேடனான குகனைப்பார்த்து 'என் தம்பி உன் தம்பி, நீ எனக்குத் தோழன், இச் சீதை உனக்குக் கொழுந்தி முறையினள்' என்று சொல்லிப் பாராட்டிய உத்தமமான ஸ்நேக தர்மத்தை நினைந்து மயங்குவாள். தன் பிரிவாற்றாத பரதன் பொன் முடி சூடாமல் தன்னைப்போல வல்கல ஜடாதாரியாக வெளிப்பட்டு வந்த தீவினைக்கு நாயகன் இரங்கி யேக்கமுற்றதை யெண்ணி யிரங்குவாள். அயோத்தியை விட்டுப் புறப்பட்டபோது ஒரு பிராமணருக்குக் கோதானம்பண்ணி அவரது கரையில்லாத ஆசையைப் பார்த்து இறைவன் சிரித்த செய்தி நினைந்து அழுது சோகமுறுவாள். ஒரு பாணத்தை இந்திரன் புதல்வனான காகாஸுரன் மேல்விட அது அவனது ஒற்றைக் கண்ணைப் போக்கினதல்லாமல் காக சமூகத்திற்கே ஒரு கண் இல்லாமற் செய்த வெற்றியைப் பாராட்டித் தலைமேற்கொண்டு புகழ்வாள். விராதனை வதைத்து அவனது சாபத்தையுமாற்றிய தன் இன்னுயிர்க் காந்தனாகிய ஸ்ரீ ரகுவீரனையே அனவரதமும் நினைந்து உணர்வொடுங்கித் தேம்புவாள். இவ்வாறு ஜானகி சொல்லற்கரிய துன்பத்தை யனுபவித்துக் கொண்டிருக்க, அங்கு, திரிஜடை யென்னும் இன்சொல்லாளை யொழிய மற்

திருந்த தீவினை யரக்கியரெல்லாரும் நடு நிசியாய் விட்டதால் மெய் மறந்து தூங்கினார்கள். அப்போது அன்பினால் தாயினு மினியவளான திரிஜடையை நோக்கி, 'பரிசுத்தமுடைய அம்மா! நான் சொல்வதைக் கேள்' என ஸீதை சொல்லலுற்றாள்:—"எனக்கு நலந்தான் வரப்போகிறதோ; அன்றி, நான் செய்த தீவினையின் பயனாக இன்னமும் துன்பந்தான் விளையப் போகின்றதோ, இன்னது வருமென்று தெரியவில்லை. புருவம், கண் எல்லாம் இடந் துடிக்கின்றன. ஸ்ரீ விசுவாமித்திர மாமுனிவரோடு சக்கிரவர்த்தி குமாரர் மிதிலைக்கு வந்தநாளில் இவ்வாறே இடதுபக்கந் துடித்தது. இதையுங் கேள்; என் பிராண நாயகன் ராஜ்யத்தையெல்லாந் தம்பிக்குக் கொடுத்து வனம்புகுந்த நாளிலும், நஞ்சுபோன்ற கொடியோன் காட்டில் வஞ்சனைபுரிய வந்த காலத்தும் வலமே துடித்தது. இப்போது இடந்துடிப்பதால் அஞ்சாதே யென்று என்பா லிரக்கமுற்று யாவர் வருவார்கள்? ஆராய்ந்து சொல்வாய்." என்றலும் திரிஜடை மிக்க பிரீதி யுடையவளாய் "இப்போது உண்டான சோபனங்கள் மிகவும் நன்றாயிருக்கின்றன. அதிசீக்கிரத்தில் உன் நாயகனை யடையப் பெறுவாய். மேலும் பொன்னிறமான வண்டொன்று உன் காதில் மெல்ல வந்து ஊதிப்போகின்றது. இதனையாராயின் உன் பிராணநாத னிடத்திலிருந்து யாராவது தூது வருவார்கள் என்பது நிச்சயம். தீயவர்களுக்கு இனித் தீமைவந் தெய்துமென்பதூந் திண்ணம். மற்றும் என் வார்த்தையை ஸாவதானமாகக் கேள். இராவணன் ரக்தவர்ணமான ஆடையை யுடுத்துக்கொண்டு எண்ணெய்த் தலையோடு கழுதையும் பேயும் பூண்ட தேரிலேறித் தென்றிசையிற் போனதாகக் கனாக் கண்டேன். அவன் மக்களும் சுற்றத்தார்களும் அத் திசையே போனார்கள். போனவர்களில் ஒருவராவது திரும்பி

வரவில்லை. இரண்டு சிங்கங்கள் பல புலிகளைத் திரட்டிக் கொண்டுவந்து வரம்பில்லாத பல மத யானைகள் உறையுங்காட் டைச் சுற்றிலும் வளைந்து நெருக்கிப் பிணக்காடாம்படி கொன் றன. அங்கிருந்த அழகியதோர் மயிலும் அவ் வனத்தைவிட்டு விலகிப் பறந்து போயிற்று. ஆயிரந் திருவிளக்கினுடைய பிர காசத்தைக் கொண்டதான மிக்க ஒளியை யுடைய ஒரு விளக்கைக் கையிலெடுத்துக்கொண்டு சிவந்த மேனியையுடைய ஒரு நங்கை இராவணன் மனையிலிருந்து புறப்பட்டு என் பிதா வான விபீஷணனுடைய கிருகத்தில் பிரவேசித்தாள். அவள் அப் பொன்மனையில் புகுந்ததாக ஸ்வப்னங் கண்டுகொண் டிருக்கிற மத்தியில் நீ என்னை யெழுப்பினாய்'' என்று சொல்ல லும், ஸீதை, 'அம்மா! குறையையும் இன்னதென்று கண்டு சொல்' என்று பிரார்த்தித்தாள். திரும்பவும் அந்த திரிஜடை யென்னும் மென்சொல்லாள் ஸீதையைநோக்கித், 'தோகையே! கொடிய விஷம்போல யாவரும் கண்டு நடுங்கும்படியாகத் தோன்றும் பல உற்பாதங்களையும் கேள். இராவணன் வளர்க் கும் வைதிகாக்னியானது நிஷ்காரணமாய்த் தானாகவே யவிந்து போயிற்று. ரத்ன தீபங்கள் விளங்கும் அவன் அரண்மனையும் இடிவிழுந்து இடிந்து போயிற்று. பெண்யானைகள் மதநீரைப் பெருக்குகின்றன. பேரி யடிக்காமலிருக்கத் தானாகவே இடி போல் முழங்குகின்றது. ஆகாசம் மேகமின்றி நிர்மலமாய் இருக்கையிலும் அண்டம் வெடித்தாற்போல் அதிர்கின்றது. நக்ஷத்திரங்கள் உதிர்கின்றன. பகலில்லாதிருக்க இராத்திரியி லும் சூரியன் தோன்றுகின்றான். மைந்தர்கள் சூடிய கற்பகப் பூமாலை துர்க்கந்தம் வீசுகின்றது. இவ்வூரும் மதிலும் ஒருங்கே சுழலத் திக்கெல்லாம் எரிவதாயின. மங்கள கலசங்கள் சிந்து கின்றன. பெரிய நிலை விளக்குக்களை இருள் மூடி யவிக்கின்

றது. தோரண கம்பங்கள் துண்டுதுண்டாய் முறிகின்றன. யானைகள் கொம்பொடிந்து காணப்படுகின்றன. பூரணகும்பங் களில் கள்ளுப் பொங்கி வழிகின்றது. சந்திரனைப் பிளந்து கொண்டு நக்ஷத்திரங்க ளெழுகின்றன. மங்கையர்களுடைய மங்கலத் தாலிகள் தாமாகவே அறுந்து கொங்கையில் வீழ்கின் றன. மண்டோதரியின் கூந்தல் குலைந்து விழுந்து பக்கத்தே யுள்ள விளக்கிற் பட்டுப் பொசுங்கித் துர்க்கந்தம் வீசுகின்றது. இவைகளைத் தவிர பிரமாதமான அனர்த்தங்கள் உண்டாகப் போகின்றன வென்பதற்கு வேறு காரணமும் வேண்டுமோ." என்று சொல்லிக்கொண் டிருந்தாள். இந்த ஸந்தர்ப்பத்தில் ஸ்ரீராமதூதனை ஹநுமான் அவ்விடத்திற்கு எய்தி நோக்கிக் கொண்டிருந்தான். அப்போது அங்கே தூங்கிக்கொண்டிருந்த ராக்ஷஸிகள் கண் விழித்தெழுந்து மழு சூலம் முதலிய ஆயுதங் களை யெடுத்துக்கொண்டு ஸீதையைச் சூழ்ந்து நின்றார்கள். வயிற்றில் வாயுடையவர்களும், வளைந்த நெற்றியிலே கண்களை யுடையவர்களும், பற்களுக்கிடையில் யானை யாளி முதலிய மிருகங்கள் தூங்கக் குகைபோன்ற வாயையுடையவர்களும், இருபது கையும், ஒரு தலையுமுடையவர்களும், இருபது தலை யும் இரண்டு கையுமுடையவர்களும், பர்வதம்போல் ஸ்தனங் களை யுடையவர்களும், பயங்கரமான தோற்றமுடையவர்களும், சூலம், வாள், தோட்டி, தோமரமுதலிய ஆயுதங்கள் பிடித்த கையுடையவர்களும், விஷமே யுருவு கொண்டது போன்ற மேனியை யுடையவர்களும், யானை, குதிரை, வேங்கை, கரடி, யாளி, பேய், நரி, நாய் இவற்றின் முகத்தை யுடையவர்களும் முதுகில் முகமுடையவர்களுமாய்ப் பெண்ணென்னும் பெயர் கொண்டு திரிகின்ற அவ் வரக்கிகள் அழகனது தேவியைச் சூழ்ந்து கொள்ள, அத் தேவியும் உரையழிந்து அக் கொடி

யோர்களது முகத்தைப்பார்த்துத் தேம்பி யழுதாள். நாயகன் தூதனும் விரைவில் அங்கே வந்து ஓர் மரத்தின் கிளைமே லிருந்துகொண்டு, ராக்ஷஸிகள் பலர் அயில் முதலான ஆயுதங் களை யேந்திக்கொண்டு கூட்டமாய் நெருங்கித் தூங்காமல் விழித்துக்கொண்டிருப்பதன் காரண மென்னவென்று அக் கூட்டத்தை நோக்கினான். கரிய மேகத்தைக் கிழித்துக் கொண்டு ஒளிர்கின்ற மின்னலைப்போல அக் கருநிறத் தரக் கியரது கூட்டத்தில் ஸ்ரீ ராகவனுக்கு எல்லாப்படியாலு மேற்ற வளான ஜாநகியைக் கண்டான். 'ராக்ஷஸிகள் சுற்றிலுமிருந்து காக்க, கண்ணீராகிய தடாகத்தில் விளங்கும் இம் மடவன்னம் பூங்கொடியாகிய ஸீதையாகத்தா னிருக்கவேண்டும். தர்மம் இன்னும் அழியவில்லை. யானும் உயிர் பிழைத்தேன். தேடி னேன், கண்டுகொண்டேன், இவள் தேவிதான், ஸந்தேகம் இல்லை' என்று ஆடினான், பாடினான், அங்கும் இங்கும் பாய்ந் தோடினான், உலாவினான், ஸந்தோஷமென்னும் மதுவைப் பானம் பண்ணிக் களித்தான். 'நிர்த்தோஷமான இத் திருவுரு வத்தின் இலக்ஷணங்கள் வள்ளல் சொன்ன வாசகத்திற்குச் சிறிதும் மாறுபடவில்லை. கள்ளன் ராவணன், ஐயோ! கமலக் கண்ணனை என் நாயகனது உள்ளத்தில் உவந்து வாழ்கின்ற இந்த அரிய உயிரை இங்கேயா ஒளித்து வைத்தான்!' என்று இரங்கி யேங்கினான். "மூவுலகையும் முறைகெடச்செய்த பாவி யான ராவணனது உயிரை வாங்குவதற்காகச் செய்த ஏற்பாடு என்று தெரிந்துகொண்டேன். இதிற் சிறிதும் ஐயமில்லை. ஐயன் சேஷசயனத்தைத் துறந்து வந்த திருமாலே. இவள் கமலாஸனத்தை விட்டுப் பிரிந்த லக்ஷ்மியே' என்று தேறினான். மாசடைந்த மணிபோலு மிவள் வெண்கதிர்த் திங்கள்போலத் தேய்ந்து விளங்குகின்றாள். இவள் கற்புக்கும் காதலுக்கும்

சிறிதும் பங்கம் வரவில்லை' யென்று கொண்டாடினான். 'ஸ்ரீ ராக வன் புஜத்தையோ, வனிதையர் திலகமான ஸீதையின் மனத் தின் மாண்பையோ, ஜனகர்தம் குலத்தையோ, யாதைப் புகழ்வேன்' என்று ஸ்தோத்திரம் பண்ணினான். 'தேவர்களும் முறை தவறவில்லை. தெய்வத்தன்மை பொருந்திய வேதியரும் நெறிதப்பிப் போகவில்லை. தர்மத்திற்கும் லோபம் வந்துவிட வில்லை. இனிச் செய்யற்கரியதும் என்ன இருக்கிறது. எம் பிரானுக்கே யுரிய என்னடிமையுங் கெட்டுப்போக வில்லை' என்று ஆனந்தக் கூத்தாடினான். 'ஒப்பற்ற லோகமாதவாகிய இவளது கற்பு சிறிதாவது நழுவுமாயின் அப்போதே ஸ்ரீ ராம னது கோபமென்னும் ஸமுத்திரமானது பொங்கிவர யுகமுடிவு வந்துவிடுமென்று எண்ணினேன். இனி உலகெல்லாம், பல நாள் வாழட்டும்' என்று வாழ்த்தினான். 'இந் நங்கை தோன்ற லால் குடிப்பிறப்பு நாணம் என்னும் இவ்விரண்டும் மேன் மையை யடைந்தது. இவள் இங்கு இவ்வாறு இருப்பதைக் காண ஸ்ரீ ராகவன் தவம் புரியவில்லையே' என்று ஸீதையின் கற்பின் நிலைமைகண்டு மனம் பூரிப்பான். 'தருமந்தான் காத்த தோ, குணமில்லாக் கசடனாகிய ராவணனது பாபகர்மந்தான் காத்ததோ, அன்றிக் கற்பென்பதுதான் காத்ததோ, கொடிய ராக்ஷஸிகளின் கையிலகப்பட்டு ஸகிக்க வொண்ணாத துன்பத் துக் குள்ளான இவள் இங்ஙனம் உயிர் தரித்திருப்பது மிகவும் அருமை! மிகவும் அருமை!!' யென்று வியப்படைந்து மகிழ் வான். 'பிறரெவர்க்கும் கிட்டற்கரிய பெரிய ஸம்பத்தைப் பெற்று அல்லும் பகலுமாகத் தேவர்கள் பணி செய்ய வாழும் இவர்கள், தீவினை மிகுதியால் இத்தோடு நாசத்தையடையப் போகிறார்கள். அறத்தைத் தீவினை வெல்வதென்பது எங்கா வது உண்டா?' என்று இவ்விதமெல்லாம் எண்ணி அச்

சோலையின் மீதே நின்றான். அப்போது அங்கே நிகழ்ந்த தென்னவெனில அப் பூஞ்சோலையி னிடத்தை நோக்கித் தசமுகன் புறப்பட்டு வந்தான்.

சிகரங்களோடு கூடிய அழகிய நெடிய மலையெல்லாம் ஓரிடத்தில் திரண்டனவற்றை யொப்ப, வயிரமிழைத்த மகா குண்டலங்களின் ஒளி வீசப்பெற்ற திண்ணிய இருபது தோள் களும் பக்கத்தே விளங்க, கருங்கடலிற் றோன்றும் சூரியன் போலத் தலைதோறும் ஒளிர்கின்ற ஒப்பற்ற பத்து மகுடங்களும் இளவெயிலைப் பரப்ப இரவும் பகலாம்படி வந்தான். ஊர்வசி உடைவாளை யெடுத் துக்கொண்டு தொடர, மேனகை வெற்றிலை மடித்துக்கொடுக்க, செருப்பைத் தாங்கிக்கொண்டு திலோத்தமைசெல்ல, அரம்பை மாதர்கள் பக்கத்தே சூழ்ந்துவரப், பச்சைக் கற்பூரஞ்சேர்ந்த சந்தனக் கலவையும் மலர்களு மொன்றுசேர்ந்து வீசுகிற பரிமள மானது திக்கஜங்களினுடைய மூக்கிலே போய்ப் புக, நங்கை யர் பலர் விளக்கேந்தி வர, மேலே யணிந்துகொண்டிருக்கிற ஆபரணங்களினது காந்தி யிருளையெல்லாம் வாரி விழுங்க, அன்னங்கள் பல திரண்டுவந்தாற் போல நூபுரம் மொலிக்க, கிண்கிணியும் மேகலையும் சப்திக்க, இவ்வித சம்பிரமத்தோடு வருவதை இந்திரன் முதலான தேவர்கள் கண்டு இவன் இப் படி நடுநிசியில் கண்விழித்துக்கொண்டு வருகிறது சந்திரவத னத்தையுடைய அருந்ததியான ஸீதை யிருக்கும் சோலைக்கோ, அல்லது வேறு எவ்விடத்திற்கோ, என்ன அபிப்பிராயமோ, என்று மனங்கலங்கி இமையாத தங்கள் கண்களையும் மூடிக் கொண்டு உயிரெல்லாம் ஒடுங்கி நின்றார்கள். தசக்கிரீவனும், நீலமானதோர் மலையில் நீள ஒடிவருகின்ற அருவியைப்போலப் பால்நிறமுள்ள வெண்பட்டாலான உத்தரியம் விளங்க, மே

நிந்தனைப்படலம்.

கத்தைக் கிழித்துக்கொண்டு தோன்றும் மின்னற்கொடிபோல் மார்பில் யக்ஞோபவீதம் பிரகாசிக்கத், தோள்கள் தோறும் அணிந்து பொலிகின்ற வயிரங்களிழைத்த மகரகேயூராதி ஆப ரணங்கள் நக்ஷத்திரங்களையும் மற்றுள்ள கிரகங்களையுமொத்து ஒளி செய்யத், தாள்களி லணிந்துள்ள வீரக்கழலின் காந்தி பூமி யெல்லாம் தவழ, புன்னகையோடு கூடிய முகம் நிலவோடு கூடிய இருளைப்போலப் பொலிந்து தோன்ற, அரையில் தரித்த பீதாம்பரமானது கரிய வரையைச் சுற்றிய வெயிலைப்போன்று தோன்ற, விரல்களி லணிந்துள்ள மோதிரங்களின் பிரகாசம் அக் கற்பகச்சோலை முழுவதையும் அழகு செய்ய, சன்னவீரத் தோடு கோத்திருக்கின்ற முத்துமாலையானது ஊழிக்கால முடி விலே தனித்து நிற்கும் பொன்மலையில் தொத்திக்கொண்டிருக் கும் நக்ஷத்திரங்களையும் கிரகங்களையும் நிகராக விளங்க, ஆதித்தன் பன்னிருவரில் இருவர் நீங்கலாகப் பதின்மர் ஒன்று சேர்ந்து உதித்தாற்போலக் கிரீடங்கள் ஒளி வீச, பர்வதம்போற் றிரண்ட தோள்களையுடைய இரணியனைப் பிளந்து கொன்ற நரசிங்கத்தினது காலடியைத் தன் கரத்தாலளைந்த யானையைப் போன்று,த் தமது கொம்பொடிந்து பரிபவப்பட்டு விலகி நிற்கும் யானைகளெல்லாம் அச்சமுற்று நடுங்க, அரம்பைமாதர்களும், வித்தியாதர ஸ்திரீகளும், நாக கன்னிகைகளும், ராக்ஷஸமாதர் களும் மற்றும் குவிந்த கொங்கைகளையுடைய செங்கனிவாய்க் குதலைச்சொல் மங்கையர் பலரும் மலையைச் சுற்றித் திரியும் மயிலினம்போலத் தோன்ற, ஒரு பக்கம் வேணுகானம் செய்ய, ஒருபால் மாதர்கள் பாட, ஓர்புறம் கின்னரர்கள் புற்றிலுள்ள பாம்பும் அமிர்தத்தை யுகுக்கும்படி நாகசுரம் வாசிக்க, சாமரை விசிறிமுதலியவற்றை வரிசையாக ஏந்திக்கொண்டு மின்னிடை மெல்லியர் பலர் மேகத்தைக் கண்ட களிமயில்போல் நடக்கத்

தெய்வமங்கையர்கள் இசைமுறை தவறாமல் பாடிக்கொண்டு நர்த்தனம்புரிய, மன்மத பாணங்கள் தைத்து வேகின்ற புண்ணில் வேல் நுழைந்ததுபோலச் சந்திரனது பசிய கிரணங்கள் பாய, மந்தமாருதங் கொண்டுவந்து தூளிக்கின்ற கற்பகமலரின் தேனானது யுருக்கிய செம்புபோலத் தெறிக்க, மாலை, சந்தனம், பூண் முதலியவற்றை யேந்திக்கொண்டு கற்பக விருக்ஷமும் இருநிதியும் பின் தொடர்ந்துவர, பாற்கடலின் அலை கரிய மலைமேல் மோதுவதுபோல் சாமரை வீச, மாசு நீங்கிய மதிபோல வெண்கொற்றக்குடை மேலே விளங்க, தன்னைத் தாங்கமாட்டாமல் அனந்தன் தலை தடுமாற, பூமிதேவி முதுகு நொந்து புலம்ப, கேடகம், மழு, எழு முதலிய ஆயுதங்களையெல்லாம் தாடகையினும் வலி படைத்த அரக்கியர் பலர் தலைதோறுஞ் சுமந்து செல்ல, தனது சுவாஸத்தின் கொதிப்பால் தளிர், பூ, கிளை, வேர் முதலியவெல்லாம் மணியாலும் பொன்னாலுமாகிய அச் சோலையின் மரமெல்லாம் எரிந்து கரியாக, திருமகளான ஜாநகி இருக்குமிடந் தெரிந்திருக்கவும் திகைப்புற்ற சிந்தையால், இழந்த மணியைத் தேடிக்கொண்டு நுழைந்து நுழைந்து வெளிப்படும் பல தலையுள்ள நாகம்போல இடங்கள்தோறும் புகுந்து புகுந்து புறப்பட்டுக்கொண்டு அவ்வலிய ராக்ஷஸ ராஜன் வருகின்றதை அஞ்சனை சிறுவன் கண்ணுற நோக்கி இவன் எண்ணமும், செயலும் மேலே நடக்கிற காரியமும் இன்னதென்று இப்போது தெரியுமென்று ஸ்ரீ ராகவனுடைய சரணாரவிந்தங்களைத் தியானித்துக்கொண்டு அங்கு ஸமீபத்தில் வந்து மறைந்துகொண் டிருந்தான். அப்போது அந்த அரக்கன் எல்லாரையும் தூரத்தே நிறுத்தித் தான்மாத்திரம் பெண்களின் குலதீபமாகிய ஜாநகியிருந்த இடத்தை நோக்கி வந்தான். அம்மெல்லியல் கொடிய

பற்களையும் எரிகின்ற விழியையு முடைய கொடுஞ்சினங் கொண்ட ஒரு பெரும்புலி தன்னை விழுங்கவரக் கண்ட மான் பேடைபோலக் கரைந்து நடுங்கினாள். கூசி யாவி குலைகின்ற ஸீதையையும், ஆசையால் உயிரழிகின்ற இராவணனையுங் கண்டு மாருதி தத்தளிக்கிற உள்ளமுடையவனாய் வருத்த முற்று 'வாழி ஜாநகி, வாழி இராகவன், வாழி அந்தணர், வாழி நல்லறம்'என்று பன்முறை வாழ்த்தினான். அப்போது அரக்கன் வைதேகியின் அருகிற்சென்று, "எப்போது என்மீது கருணை வைக்கப்போகிறாய்? குயிலே! சொல்." என்று விஷத்தை அமிர்தமென்று வேண்டுகின்றவனைப் போலச் சொன்னான். ஈசனுக்குக்கூடச் சிறிதுந் தாழாத மனமுடைய அத் தீயோன் ஆசையும் நாணமுந் தன்னைத் தாக்க வலிகுன்றிக் கூசிக் கூசிச் சொல்வதானான்.—"காதளவும் ஓடிய கயற்கண்ணாய்! இன்று நாளையென்று வீணே நாள்களெல்லாம் வியர்த்தமாய்க் கடந்து போகின்றன. மன்மத பாணங்களால் நான் கொலையுண்டு இறந்தபின் என்னைக் கூடப்போகிறையோ? மூவுலகையும் அரசாள்கின்ற எனது ஆஜ்ஞையில் உன்னாலுண்டான கலகத்தை யல்லது வேறோர் குறையையுங் காணேன். ஏ, பூங் குழற் பொற்கொழுந்தே! புகழ்தங்கிய எனது மிக்க செல வத்தை யிகழ்ந்து காடுறையும் மனிதர்களோடு திரும்பிப் போய் வாழும் வாழ்வும் ஒரு வாழ்வாகுமா? குவிமுலையாய்! பல நாள் மெய்வருந்தித் தவம் புரிகின்றவர்க ளெல்லாரும் இச்சிக்கின்ற பேறு எதுவெனில் என் வார்த்தையைச் சிரஸா வகிக்கின்ற தேவர்களோடு ஸமமாக வீற்றிருக்கும் இன்பமேயாகும். அப் படியிருக்க, நீயேன் அற்ப வாழ்வை யிச்சிக்கின்றாய்? வீணையும் கிளியும் மயங்கும்படியான மழலைச்சொல் மங்கையே! எல்லாம் படைத்த அந்த நான்முகன் உன்னிடையோடு அருளையும்

படைக்க மறந்தான் போலும். சென்ற நாளும், போன இளமையும் திரும்ப வருமா? வீணே நாளெல்லாம் பாழாகக் கழிந்தால் பின்னர் எப்போது ஸுகத்தை யநுபவிக்கப்போகின்றாய்? சொல்வதைக் கேள், வீணே துன்பத்தி லாழ்ந்து க்லேசப்படாதே. என்னுயிர்க்கு முடிவு வந்தாலும் வரட்டும். அது ஒரு பெரிதன்று. காமநலங் கனிந்த ஒப்பற்ற உன்னைப் போன்ற ஒரு சுடர்க்கொடி இவ்வாறு மனம் வேறுபட்டுத் தனியேயிருந்து வருந்தி மாள்வது அழகன்று. ஏனெனில், என் போன்றவர்கள் பிறப்பினும் பிறப்பார்கள். நீ மாயின் உன்னோடுகூடவே அழகும் காமநலமும் மாய்ந்தேபோகு மல்லவா? பெண்மையையும், மனத் திண்மையையும், சிவந்த வாய், கரிய கண் முதலியவற்றையும் ஒழுங்காக நன்கு படைத்த அக்கமலாஸனன் கருணையோடு கூடிய ஈகைத்தன்மையை மாத்திரம் ஸ்ருஷ்டிக்காமல் விட்டுவிட்டது மிகவும் அநியாயமானதாக இருக்கிறது. ஏ! பைங்கிளியே! இறக்குங்காலத்தில், 'ஆ, ஸீதா! லக்ஷ்மணா!' என்று அலறி வீழ்ந்த மெய்க்குரல் கேட்டும் இன்னமும் காணலாமென்றிருப்பது என்ன பேதைமை. நீ செய்த புண்ணிய கர்மங்களெல்லாம் தம் பயனீந்திய இன்ப வாழ்வை உனக்குக் கொடுக்க வருகிறபோது வேண்டாமென்று இகழ்தல் கூடுமா? நீயே யோஜித்துப் பார். மிக்க எனது செல்வத்தையெல்லாம் பெற்றுப் புகழ்பெறவேண்டியது போக வேண்டாமென்று உதறித்தள்ளி இகழ்ச்சியை யெய்தல் தகுமா என்பதையும் ஆலோசனை செய். தேவர்கள் கைகூப்பித் தாள் வணங்கும் எனது திரிலோகாதிபத்யத்தை இவ்வாறு விலக்கினால் நின்னிலும் மதியற்றவர்கள் யார்? ஏந்திழையே! என் செல்வத்தையெல்லாம் பெற்றுக்கொண்டு எப்படியாவது என்னை அருள் செய்." என்று முடியின்மேல் குவித்த கையையுடைய

வனுய் அக் கொடியோன் பழியைச் சிறிதும் பாராதவனுய்ப்பூமி யில் வீழ்ந்து ஸீதாதேவியைப் பணிந்தான். பழுக்கக் காய்ச்சிய சலாகைபோன்ற இவ்வார்த்தைகள் படுமுன்னரே ஸீதையின் செவிகள் தீய்ந்தன. மனமுங் கலங்கித் திரிந்தது. கண்களில் இரத்தம் பாய்ந்து சிந்திற்று. ஸீதை அவ் வஞ்சகனது மனம் நல்வழியில் திரும்பக்கூடிய மாதிரியாகக் கற்புடைய உத்தம ஸ்திரீகள் சொல்லக்கூடிய பின்வரும் வார்த்தைகளைச் சொன் னுள்.—"ஏ, துரும்பே! மங்கையர்க்குக் கலங்காது உறுதியாய் நிற்குங் கற்பினுஞ்சிறந்த பூஷணமுமுளதோ? இல்லறநெறியில் நிற்கும் மாதர்களுக்கு அடியோடு கேட்கத் தகாத இவ் வார்த் தையை இனி யுரையாதே. நான் சொல்வதைக் கேள். தீய சிந்தையை விட்டு நல்லவனுய் நடந்து பிழை. ஆரியனுன ஸ்ரீராகவனது பாணம் எப்படிப்பட்டது? மேருவை யுருவிப் பாயும்,விண்ணைப் பிளக்கும்,மூன்றுலோகத்தையும் நாசமாக்கும், இத் தன்மை தெரிந்தும் ஏனே கண்டதையெல்லாம் பிதற்றி உன் தலைகளை யிழக்கப் பார்க்கிருய்? அச்சங்கொண்டதினுலல்லவா மாயமானை முன்னே விடுத்துப் பிறகு நீயும் ஒருவருமில்லாத காலத்து உருமாறி வந்தாய். பிழைத்துப்போக வேண்டுமென் றிருந்தால் இவ்விதம் அடாததைச் செய்ய நினையாதே. என் மீது நோக்கமுண்டாவது உன் குலத்துக்கே நாசம் விளைவிப் பதற்காக வென்று நினை. சடாயுவோடு எதிர்த்து நிற்கச் சக்தி யில்லாது தரையில் வீழ்ந்த நீயா என் நாயகன் முன்னர் நிற்கத் தகுந்தவன்? கங்காதரன் கொடுத்த வாளின் வலியால் ஜடாயுவை ஜயித்தாய். அவ் வாயுதமாத்திரம் இல்லாதிருக்கு மாயின் அன்றைக்கே நீ அக் கழுவிற்கு இரையாகியிருக்கமாட் டாயா? நீ வாங்கிய வரத்தையும் வாழ்நாளையுங் கண்டு யமன் தான் பயப்படுவான். ஸ்ரீராமபாணமும் பயப்படுமோ? உன்

வரங்களுக்கு ஸ்ரீராகவனது பாணத்தைத் தடுக்கச் சக்தியுமுண்டோ? நீ கைலையைப் பறித்த நாளில் பாதத்தின் ஒருசிறு விரலைச் சிறிது ஊன்றி உன்னைக் கதறச் செய்தவனது மேருவாகிற வில் என் நாயகன் தோள்வலிக் காற்றமாட்டாது ஒடிந்து வீழ்ந்த ஓசையை நீ கேட்டிருக்கவில்லையோ? மலையையெடுத்தேன், திக்கஜங்களை வென்றேன், என்று இப்போது பிதற்றுகின்ற நீ இளையவன் வில்லுங்கையுமாயிருந்த அப்போது என் வரவில்லை? மதியற்றவனே! வெட்கமின்றி இன்னமும் வெளிப்பட்டுத் திரிய உனக்கு எப்படி மனந்துணிந்தது? அற்பனுன நீ இங்கே மறைந்திருக்கும் செய்தி என் கோமானுக்குத் தெரிந்த அன்றே இந்நகரமும் நீயும் அழிந்துபோவது மட்டுமன்று, ஊழியுந் திரியுமென்பதைத் திண்ணமாகக் கொள். கொடியவனுன நீ ஒரு தீங்கைச் செய்யப்போக வள்ளலது கோபத்தால் உலகத்திற்கு என்ன வந்து விடுமோ என்றல்லவா நான் இப்போது பயப்படுகின்றேன். அட, கெடுவாய்! துஷ்டா! திரிமூர்த்திகளி லொருவனுகவா என் நாயகனையும் நினைத்தாய்? நல்லது, இவர்கள் மனுஷ்யர்கள்தானே என்று சொல்லுவையாயின் கார்த்தவீரியன் யாரால் தொலைந்தா னென்பதையும் ஞாபகப்படுத்திக்கொள். இளையவனொருவனே உலகெல்லாம் அழிக்க வல்லவன். ஏ, பாதகா! இப்போது இப்படித்தான் இருக்கும். பின்னர் யுத்தம் வருங்காலத்தில் என் வார்த்தையின் உண்மை நீயே தெரிந்துகொள்வாய். நீதியற்றவனே! நன்றாக நினைத்துப் பார். எல்லாவுலகமும் உனக்குக் கீழ்ப்படிந்து ஏவல் செய்ய இவ்வளவு செல்வம் உனக்கு எப்படி வந்தது?—நீ செய்த தருமத்தாலேயோ, அல்லது பாபத்தாலேயோ? வீணே எல்லாச் செல்வத்தையு மிழந்து குலத்தோடு நசித்துப் போக வழி தேடிக்கொள்ளாதே. ஞானமற்ற பேதையே!

தருமத்தின்மேற் காதல் வையாதே. அகஸ்தியர் முதலாக வுள்ள முனிவரெல்லாம் என் நாயகனை யடைந்து, 'கோவே! இழிதொழி லரக்கர்க்குப் பயந்து நாங்கள் தவம் புரியவில்லை• நீர் அவர்களைத் தொலைத்து எங்களைக் காத்தருளல் வேண்டும். உம்மால் அவ்வரக்கர் மாள்வது நிச்சயம்' என்று சொன்னார்கள். நானே நேரிற் கேட்டுக்கொண்டிருந்தேன். நீயும் அதற் கேற்றபடியாகச் செய்துகொண்டாய். உன்னையும் உன் பராக்கிரமத்தையும், உன் வாழ்நாளளவையும், சேனையின் பெருமையையும் முனிவர் சொல்லக் கேட்டபின்னும் உன் தங்கை மூக்கையும், தம்பியர்களது தலைகளையுஞ் சின்னபின்னஞ் செய்த அவ் விஷயத்தையுஞ் சிறிது சிந்தனை செய். உன்னை வாயில் இரத்தம் பெருகும்படியாகக் குத்துக்குத்தென்று குத்திச் சிறையிட்டவன் யாவன்?—அந்த மிக்க வலியையுடைய கார்த்த வீரியனது தோள்களை யறுத்துத் தள்ளினவன் யாவன்?—அப் பரசுராமன் யாருக்குத் தோற்றோடினான்? அந்த என் மணவாளனது திறத்தை நீ யறியாயோ? நீசா! கடிக்கும் பாம்பாயினும் மந்திரத்துக்குக் கட்டுப்படும். நீ எதிலுங் கட்டுப்படாது தீமை பெருக்கித் திரிகிறாய். இது அடுக்கும், இது அடாது, என்று நியாயமான காரணங்களைக் காட்டி உன்னை யிடிப்பாரில்லை. இருக்கின்ற சில விவேகிகளும் தீர யோஜித்து உன்னை முடிக்க வழி தேடிவிட்டார்கள். ஆகவே முடிவன்றி முடிவதுமுண்டோ?" என்றறிவு புகட்டக் கேட்டவுடன் இராவணன் இருபது கண்களிலும் அனற்பொறி பறக்க மலைகளெல்லாங் கீழ்விழும் படி உரக்க இரைந்து திட்டினான்; காமன் சக்தியையும் அதிக்கிரமித்துக் கோபம் பொங்கிவிட்டது. 'இரண்டாகப் பிளந்து தின்றுவிடுகிறேன்' என்று எழுந்தான். காதலொருபக்கம் இழுத்ததால் ஒன்றுஞ் செய்யாமற் பெயர்ந்தான். அப்போது

அங்கே மரத்தின்மேலிருந்து பார்த்துக்கொண்டிருந்த வாதாத்மஜன், "அருந்ததிக்கற்புடையளாகிய எனது நாயகன் தேவியை நீசன் தொடுவதற்கு முன்பாக உதைத்துக் கொன்றுவிட்டுப் பின் வருவதையும் பார்த்துக் கொள்வேன். இவனோ தனியாக விருக்கிறான். ஆதலால் தலைகள் பத்தையுங் கடித்துக் கீழே விழும்படி தாக்கிப் பரிசுத்தையான மாதவத்தரசியையும் ஸாவதானமாகக் கொண்டு போவதே நலம்" என்று நினைந்து கைகளைப் பிசைந்துகொண்டிருந்தான். அப்போது அவ் வாளரக்கன் ஊழித் தீயைப்போலப் பொங்கிய கோபத்தை நீண்ட காதலாகிய கடலாலவித்துத் திரும்பவுஞ் சொல்லத்தொடங்கினான். 'உன்னைக் கொல்வதாக எழுந்தேன். கொல்ல மனம்வரவில்லை நீ சொன்னவைகளுக்கு ஸமாதானமும் சொல்லவேண்டுமோ? இன்னது முடியும், இன்னது முடியாது, என்பது எனக்குக் கிடையாது. வெல்வதும் தோற்பதும் எனக்கு ஓர் விளையாட்டு. உன் நாயகனுக்கு அஞ்சினேன் என்றாய். உனக்கு உயிரினிற் சிறந்தவனை ராமனை நான் கொன்றுவிடுவேனாயின் நீ உன் பிராணனைப் போக்கிக்கொள்வாய். அப்போது என் பிராணனும் நீங்கும், என்பதை நன்றாக எண்ணித்தான் நான் வஞ்சனை புரிந்தேன். மற்றைப்படி என்னை யெதிர்த்து யுத்தத்திற்கு வரத்தக்கவர் யாரிருக்கிறார்கள்? திரிமூர்த்திகளும் எனக்குப் பயந்து வலியொடுங்கிக் கிடக்கின்றார்கள். ஆனபோது ஒரு மனிதன் எனக்கு எவ்வளவு? இப்போதே யிங்கு வரச்செய்து குற்றேவல் புரியச்செய்கிறேன் பார். அற்ப மனிதர்களாயினும், உன்னைக் கொண்டுவந்து தந்தார்களே என்பதை யுணரும் போது உயிர்க்கொலை செய்யத்தக்கவரல்லர் என்று விடுத்தேன். உனக்கு இஷ்டமாயின் இதோ நொடிப்போதில் தொலைத்து விட்டு வருகிறேன். என்னை இன்றென்று

தெரியாமல் வாயில் வந்ததையெல்லாஞ் சொன்னாய். பார், இப்போதே அயோத்திக்குச் சென்று பரதன் முதலாக அங்குள்ள எல்லாரையுங் கொன்று பின் மிதிலையிலுள்ளவர்களையும் வேரோடு களைந்துவிட்டு உன் பிராணனையும் எளிதாக வாங்கிவிடுகிறேன்.” என்று கோபித்துப் பொங்கித் தன் வாளையுருவிக்காட்டி, ‘இதென்னவென்று பார்த்துக்கொள். இதற்கே நீ யிரையாகப் போகிறாய்’ என்று அதட்டிவிட்டு அவளையே மனத்தில் வைத்தவனாய்த் திரும்பி, அங்குள்ள அரக்கியர்களை நோக்கி, ‘பயமுறுத்தியோ, அன்றி நயமாக அவளுக்குத் தேறுதல் சொல்லியோ வனிதா ரத்னத்தை என்பால் வரச் செய்யாமற் போனால் நானே உங்களுக்கு நஞ்சென்று வைத்துக் கொள்ளுங்கள்’ என்று அவர்களுக்கும் அச்சத்தை மூட்டினவனாய்ப் போய்விட்டான். அவ் வரக்கிகளுட் சிலர் கண்ணில் நெருப்புச் சிந்தி ஜாநகிக்கு முன்னே வந்து நின்று, சூலம் வேல் முதலியவற்றை வீசிக், கொல்லுங்கள் தின்னுங்கள் என்று வைது பயமுறுத்தினார்கள். ‘சிருஷ்டி கர்த்தாவாகிய சதுர்முகன் வம்சத்தில் பிறந்த ஐயன் ராவணன், ஆயிரம் வேதம் வல்லவன், மகா புத்திமான்; உன்பால் மெய்யன்பு வைத்தான்; தவிர அவன் செய்யும் இழிவான காரியமென்ன?’ வென்று புத்திமதி சொன்னார் சிலர். ‘உலகிலுள்ள மனுஷ்ய சமூகமெல்லாம், பெண்ணில் கொடியாளே! உன்னோடு நசிக்கும்படி துன்பப்படுத்துகின்றாய். மன்னன்முன்பு புண்ணிற் கோலிட்டதுபோலச் சொல்லி அவனது உண்மையான பராக்கிரமம், செல்வம் முதலியவற்றை யறியாமல் கெட்டுப் போகிறாய்’ என்று நிந்தித்துரைத்தார் சிலர். ‘புக்க வழிக்கும் பிறந்தவழிக்கும் தீமை வைக்கக் காரணமாய் வந்து தோன்றினாய். அடீ, உணர்விலி! இனி நீ வாழப்போகிறதில்லை. சொல்லிவிட்டேன்.”

என்று கோபித்துச் சொன்னார் சிலர். இவ்வாறு, கொல்லவும் தின்னவும் மேல்விழுகிற ராக்ஷஸிகளுடைய பயங்கரமான வடிவையும், மதியில்லாத் துஷ்ட அரக்கனது ஏவலையும் பார்த்து கண்ணீர்சொரிந்து ஸீதையும் அழத் தொடங்கினள். இவ்விதம் நிகழுங்காலத்தில் ஆங்கிருந்த திரிஜடை, 'நான் தான் முன்னே கண்ட கனவையும் அதன் பலனையுஞ் சொன்னேனே, தெரிந்தும் வீணுக்கேன் ஸீதையை உபத்ரவிக்கின்றீர்கள்' என்றாள். மதிமிக்கவளான அத் திரிஜடை சொல்லக் கேட்டு அரக்கியரெல்லாம் தூர விலகி, 'அம்மா! தெரிந்து கொண்டோம், இனி ஒன்றுஞ் செய்யவில்லை' யென்று ஜானகியை யொன்றுஞ் சொல்லிப் பயமுறுத்தாமல் அப்புறம் போனார்கள். வைதேகியும் உயிர் வந்து வருத்தமுற்றிருந்தாள்.

அஞ்சனை மைந்தனும், 'காண்பதற்குத் தக்க காலம் இதுதான்; ஜானகியார்க்குக் காதலுண்டாம்படி தூண்ட முயல்கின்ற கொடிய அரக்கிமார்களும் இரக்கமுற்றுப் பிரிந்திருக்கின்றார்கள்; இவர்களைத் தூங்கச்செய்யவேண்டுமென்று ஒரு மந்திரத்தை யுச்சரித்தான். உடனே அத்தீயோர்களும் கீழேமயங்கி வீழ்ந்து அயர்ந்து உறங்கினார்கள். இவ்விதம், தூங்காத அவ்வரக்கிகளும் மெய் மறந்து தூங்குவதைக்கண்ட மைதிலி மிகவுந் துயரமுற்று ஒரு விதத்தாலும் தனக்கு உய்யும் மார்க்கத்தைக் காணாதவளாய் மனமுருகி நைந்து, அச்சத்தையு மெய்தி, நீங்காத ஸ்ரீ ராமபக்தியினால் பின் வருமாறு பலபலவற்றைச் சொல்லிக்கொண்டு அதிகமாங் கிலேசித்தாள்.—'தெய்வமே! மேகமும், கடலும், இருளும் போன்றவனான ஸ்ரீ ராகவன் என் ஆருயிரைக் காக்கும் காலம் எப்போதோ! அவன் கோதண்டத்தினது இடிபோன்ற குணத்தொனியும் நான் கேட்கக் கிடைக்குமோ! உரையாய்;' என்று

திருவாழிகாட்டுபடலம்.

மூர்ச்சிப்பாள். 'ஏ கல்லா மதியே! கதிர்வாள் நிலவே! செல்லா இரவே! சிறுகா இருளே! எல்லாம் எனையே வெறுக்கின்றீர்கள். என் நினைவே யில்லாத வில்லாளனைச் சிறிதும் வருத்தாமல் இருக்கின்றீர்கள். இது உங்களுக்கு அடுக்குமா?' என்று மனங் கரைவாள். 'ஏ, வீரா! என் பிராண நாயகா! நீர் என்னைத் தேடிக்கொண்டு வராமல் இருக்கமாட்டீர் என்னும் உறுதியால் கோடிக்கணக்கான துன்பங்களையெல்லாம் பட்டு வருந்துகின்றேன். இப்படி யடியோடு என்னைக் கைவிட்டதை நான் சிறிதும் அறியேனே' என்று மயங்குவாள். 'காட்டிற்கு நீ வர வேண்டாம். இங்கேயே என் தாய்மார்கட்குப் பணிவிடை செய்துகொண்டிரு. பதினான்கு வருஷத்தையும் பதினான்கு நிமிஷமாகக் கழித்துவிட்டுவருகிறேன், விசாரப்படாதே' என்று தேற்றினீரே, இப்போது சிறையிருந்து தவிக்குந் தருணத்தில் நெஞ்சாலும் நினையாமல் இருக்கின்றீரே! இது தானா உமது கிருபை? உம்மையே நம்பியிருக்கின்ற எளியேனை இப்படி வதை செய்யலாமா?' என்று குறைவாள். 'ஏ, மனமே! ஏ, பிராணனே! ஏ நாணமே! ஏன் வீணுக்கு என்னோடிருந்து போராடுகிறீர்கள்? நாயகனைக் காணும் வரையில் எங்காவது போயிருங்கள். இருந்தால் எனக்கு வரும் பழிச்சொல்லை நீங்களும் அடையும்படி நேரும்' என்று சொல்லி வெறுப்பாள். ஏன் போகமாட்டேனென்கிறீர்கள். முடியா முடிமன்னன் தன் பிரிவாற்றாமல் முடிய, உலகமெல்லாம் துக்க ஸாகரத்தில் மூழ்கி வருந்தக் கொஞ்சமும் இரக்கமின்றிக் காட்டுக்கு வந்த கொடியவர் வருவாரென்று குலாவுகிறீர்களோ? அந்த எண்ணம் வேண்டாம். விட்டுவிடுங்கள். அப்போதில்லாத இரக்கமா இப்போது புதிதாக வரப்போகிறது? என்று மனம் நோவுவாள். என இவ்விதமாகவெல்லாஞ் சொல்லிச்சொல்லி யுயிர் விம்மி மனம்

அழிகின்ற மின்னற்கொடியை யொத்த ஸீதையானவள், உயிர் துறந்தால்தான் புகழுண்டாகும். இருந்தால் இப்படித் துன் பத்தை யனுபவிக்கத்தான் வேண்டும் என்று நிச்சயித்துக் கொண்டு *சொல்லுகின்றாள்,—நானும் வீரக் கழலை யணிந்த திருவடிக் கமலங்களையுடைய ஸ்ரீ ரகுவீரனைக் காணவேண்டு மென்னும் பேராசையால், பொறையாகிற குணமோவென் னும்படி யிருந்து பலவிதத் துன்பங்களையும் பொறுத்து இது வரையிலும் என் பிராணனைக் காப்பாற்றி வைத்திருந்தேன். என்ன பிரயோஜனம்? ராக்ஷஸர்களே நிறைந்த இப்பெரிய நக ரில் பலகாலம் சிறையிருந்த என்னைப்பரிசுத்தாத்மாவாகிய அவன் நீண்டுவனோ? பிறனொருவன் இச்சித்தான் என்று தெரிந்திருந் தும் உயிரை வைத்துக்கொண்டு அத் தீயோன் சொல்லத் தகா தனவற்றைச் சொல்ல அவற்றையும் காதாற்கேட்டு இத்தனை நாள் இங்கே யிருந்தேனென்றால் என்னிலும் பொல்லாத ராக்ஷஸி வேறு எங்கே யிருக்கின்றாள்? நானே நீங்காத பழிக்கு உள்ளாய்விட்டேன். குடிப்பிறப்பும் நாணமும் இருந்து ஆவ தென்ன? கற்புடைய மடந்தையர்களைப்பற்றிக் கூறும் கதைக ளில் என்னைப்போல வீட்டையும் விட்டு நாயகனையும் பிரிந்து வாழ்ந்தவர்களென்று ஒருவராவது உண்டா? எப்போது இப் பெரும்பழிக்கு உள்ளானேனோ அப்போதே உயிரை விடவேண் டியவள். உலகமெல்லாந் தூற்றும்படி மதிகேடியாய் இப்படி எதற்காக வாழ்கின்றேனோ தெரியவில்லை. ஒருவேளை சுவர்க் கத்தை யடையலாமென்றோ? அதெப்படி கிடைக்கும்? நாயகர் களைப் பிரிந்து வாழ்ந்தவர்களுக்குச் சுவர்க்கமுமுண்டோ? மன் னனை மாயமானின் பின்னாகப் போக்கி, இளையவனையுங் கண்டபடி வைது போ என்று துரத்தி, நஞ்சையொத்த இவன் மனையில் புகுந்த இந் நங்கை, இக்கொடியவள், இந்த ஸீதை

உயிரோடிருப்பதை உலகந்தான் எப்படி ஸகிக்கும்? "மயிர்நீப் பின் வாழாக் கவரிமா வன்னார்—உயிர்நீப்பர் மானம் வரின்." என்ற முதுமொழியின்படி உயிரினும் மானத்தையே பெரி தாகக்கொண்ட கற்புடைய மங்கையர்களுக்கு முன்பாகக் 'கார் மேகவண்ணனை கணவனைப் பிரிந்து கள்வர்களான அரக்கர்க ளுடைய ஊரில் வாழ்ந்தவள் இவள்' என்று எல்லாரும் ஏசும் படியாக நான் எப்படிப்போவேன்? மேலும், அற்புத பராக்கிரம சாலியான ஸ்ரீராகவன் இவ் வரக்கர்களையெல்லாம் தன் வில் லுக்கு இரையாக்கி என்னைச் சிறைமீட்டநாளில் என்னைநோக்கி, 'நீ திரும்பவும் என்னோடு வரத்தக்கவ ளில்லை' என்று சொல்லின் அவ் வீரனுக்கு நான் என் கற்புடைமையை எவ்விதங் காட்டு வேன். ஆதலால் பிராணனை விட்டுவிடுவதுதான் ந்யாயமாகத் தோற்றுகிறது. என்னைச் சாகவொட்டாமல் தடுத்து நின்ற ராக்ஷஸிகளும் ஏதோ செய்திருந்த தவத்தின் பயனாக இப் போது மயங்கித் தூங்குகிறார்கள். இதைவிட்டால் இனி வேறு சமயம் கிடைக்காது.' என்று உயிர்விடத் துணிந்து பூக்களால் அழகுபெறத் தோன்றுகின்ற ஒரு குருக்கத்திமரச் சோலைக்குள் எழுந்து போனாள். இதனை மரக்கிளையின் மீதிருந்த ஹநுமான் கண்டான். வைதேகியாரது மனக் கருத்தும் இன்னதென்பதை யும் ஆராய்ந்து தெரிந்துகொண்டான். திடுக்கிட்டுப்பயந்தான். திருமேனியைத் தீண்டி விலக்கக் கூசினவனாய்த் தேவநாயக னை ஸ்ரீராகவன் தூதன் நான் என்று சொல்லிக்கொண்டு உயிர்விட எண்ணியிருந்த மயிலனையாளது திருவடிகளைத் தொழுதுகொண்டு எதிரே தோன்றி, "அடியேன் ஸ்ரீராமனது கட்டளையின்படி இங்கே வந்தேன். லோகமெங்கும் உம்மைத் தேடிக்கொண்டு போயிருக்கிறவர்கட்கு ஓர் அளவில்லை. அவர் களில் நான் மிக்க தவம் பண்ணினவனா யிருந்தபடியால் இங்கே

வந்து, பெண்கள் நாயகமே! தாமரைபோற்சிவந்த உமது திரு வடிகளைக் காணும் பாக்கியத்தைப் பெற்றேன். நீர் இங்கே யிருக்கிறீ ரென்பதை நுமது பிரிவாற்றாமல் துக்கித்துக்கொண் டிருக்கிற புருஷோத்தமனான ஸ்ரீ ராமன் அறியவில்லை. அறிந் திருந்தால் அரக்கர்கள் அடியோடு மாய்ந்திருக்கமாட்டார்களா? தாயே! என்னை யாவனோ வென்று ஸந்தேகிக்கவேண்டாம். ஆரிய புருஷனான தாசரதி உமக்கு நம்பிக்கை வரும்படியாகச் சில அடையாளங்களைச் சொல்லியிருக்கின்றான். அவற்றைக் கரதலாமலகம் போல ஐயமறக் கேளும். வேறு விதமாக யாதொன்றும் நினையாமலிருக்கப் பிரார்த்திக்கின்றேன்." என்று சொல்லி வணங்கினான். அவ்வாறு ஹநுமான் தொழுதுகொண் டிருப்பதை நோக்கி இரக்கமும் கோபமுமெய்தி, 'இவன் அரக்க னல்லன். பஞ்சேந்திரியங்களையும் நிக்கிரகித்த முனிவனாகவோ அல்லது ஒரு தேவனாகவோ இருக்கவேண்டும். இவன் எண்ண மும் நல்லதாகக் காணப்படுகிறது. நிதானமாகவும், அழகாக வும் வார்த்தை சொல்லுகிறான். பரிசுத்தனாகவும் களங்கமற்றவ னாகவும் தோன்றுகிறது' என்று எண்ணினாள். 'இவன் அரக்க னாகவே யிருக்கட்டும்; ஒரு தேவனாகவே யிருக்கட்டும்; அன்றி வலி படைத்த வானர வீரனாகவே யிருக்கட்டும். தவிர, கொடு மையோ, இரக்கமோ, இவன் எண்ணம் எப்படியாகவேண்டு மானாலும் ஆகட்டும். ராக்ஷஸ பூயிஷ்டமான இவ்விலங்கையில் இங்கே வந்து பிராணத்தியாகம் பண்ணப்போகிற சமயத்தில் எம்பெருமானுடைய திரு நாமத்தைச் சொல்லி என் ஹிரு தயத்தை உருகப் பண்ணினான். இழக்க விருந்த உயிரையும் தந்தான். இதன்மேலும் ஒருவன் செய்யக்கூடிய உதவி மற் றென்ன விருக்கிறது' என்று நினைத்து ஹநுமானை நன்றாகக் கடாக்ஷித்து, 'இவன்பால் எனக்கு மனம் இரங்குகின்றது.

மனக் கபடமுள்ள ராக்ஷஸர்களில் ஒருவனல்லன். ஸாவதான மாக நல்லவார்த்தைகளைச்சொல்லிக் கண்ணீர் நிலத்தில் வீழ்ந்து பெருகப் புலம்புகின்றான். ஆதலில் பிரச்னம் பண்ணுவதற்குத் தக்கவன்தான்' எனத் தேறி, ஹநுமானை நோக்கி, 'ஏ, வீர! நீ யாவன்' என்று கேட்டாள். அப்போது தலைமேற் குவித்த கையையுடையவனான ஹநுமான், 'அன்னையே! உம்மைப் பிரிந்தபின்பு தூயவனான ஸ்ரீ ராகவன், சூரியனது புத்திரனும், வானர கணங்களுக்கெல்லாம் நாயகனுமான ஸுக்ரீவன் என் பவனைச் சிநேகிதனாகக்கொண்டு, அவன் தமயனும் இந்த இரா வணனைத் தன் வாலினால் இறுகப் பிணித்துத் திசைதோறுஞ் சென்ற வெற்றிவீரனுமான வாலி யென்பவனை ஒரே பாணத் தாற்கொன்று, அவனரசை அச் சுக்கிரீவனுக்குக் கொடுத்தருளி னான். அடியேன் அவ்வானர நாயகனுக்கு மந்திரித் தொழில் புரிபவன். வாயுவினது புத்திரன். என் பெயர் ஹநுமான் என்று சொல்வார்கள். எழுபது வெள்ளங்கொண்ட வானர சேனைகள் உமது நாயகனுக்குக் குறிப்பறிந்து குற்றேவல் புரி கின்றன. அவைகளில் அடியேனு மொருவன். மற்றைய ஒவ்வொரு வானரமும் கையால் உலகத்தைக் கல்லி யெடுக்க வும், காலால் கடலைக் கடக்கவும் சக்தியுள்ளது. அவைகள் இப்போது ஸப்த ஸாகரம், அவற்றாற் சூழப்பட்ட ஸப்தலோகம் பாதாளம், சுவர்க்கம் என்னும் இவ் விடங்களிற் சென்று உம்மைத் தேடிக், காணமற்போனால் பின் அண்டத்துக்கு அப் புறத்திலும் போய்த் தேடுவதாக ஒரு தவணையையும் பெற்றுக் கொண்டு போயிருக்கின்றன. இழிதொழி லரக்கன் உம்மை யெடுத்துப்போனபோது எங்கள் மலையோரமாக விட்டுவிட்டுப் போன அணிகலன்களது அடையாளத்தைக் கொண்டு அவ் விஜய ராகவன் என்னை இந்தத் தக்ஷிணதிசைக்குச் செல்லும்

படி ஆஜ்ஞாபித்தருளினான். அம்மகாபுருஷனது கிருபை வீண் போகுமா? பொன்னே! நீர் கழற்றி யெறிந்துபோன அத் திரு வாபரணங்களை ஸ்ரீராகவன் முன்பு கொண்டுபோய்க் காட்டிக் கொடுத்தகாலத்தில் அவருக்குண்டான நிலைமையை என்ன என்று சொல்வேன்! அவற்றையே தன் உயிர் நிலையாகக் கொண்டு இத்தனை நாளும் ஜீவித்து வருகின்றான். உண்மையை யுணரின் அத் திவ்ய விபூஷணங்களே உமது மாங்கல்யம் விளங்கும்படி ஸ்ரீராமனது பிராணனைக் காத்தன வென்று கொள்ளவேண்டும். இது நிற்க. இரண்டு வெள்ளஞ் சேனை யோடு தென் திசைக்கு வந்த வாலி மைந்தனான அங்கதன் என்னை யிவ் விலங்கைக்குப் போகும்படி கட்டளை யிட்டான். அடியேன் என் புண்ணிய மிகுதியால் இங்குவந்து நும் சரணங் களைக் கண்டுய்யும் பேறு பெற்றேன்." என்று விண்ணப்பஞ் செய்து இரங்கி யழுதான். இவ்விதம் அவ்வாயுஸுதன் விடையளிக்கக் கேட்ட மைதிலி மிகுந்த ஸந்தோஷமடைந்து துக்கத்தால் மெலிந்த தன் சரீரம் பூரித்தவளாய் 'நான் உய்யுங் காலமும் வந்ததோ!' என்று அருவிபோல் நீர் பெருகும் கண் களையுடையவளாய் ஹநுமானை நோக்கி, 'ஐயனே! ஸ்ரீராகவ னது திருமேனியை நீ யறிந்தவிதம் எப்படி? எனக்கு நன்றாகத் தெரியச் சொல்' என்று கேட்க மாருதி விண்ணப்பஞ் செய்வ தானான்.—"அவன் திருமேனியோ உபமானங்களாற் சொல்லித் தெரிவிக்கக் கூடிய தன்மையுள்ளதன்று. தத்தங் குணங்களி னாலே பூர்ணமானவையாயுள்ள எல்லாஉவமைகளும்இலக்ஷணக் குறைவுள்ளனவாகவே தோற்றும். எனினும், தாயே! நான் சொல்வது குறைவாயினும் நீர் முன்னர்ப் பார்த்திருக்கின்ற ஞாபகத்தினால் நான் சொல்லும் உபமேய வஸ்துக்களைக் கண்டு கொள்ளும். சிவந்த தளங்களையுடைய தாமரைமலரைத் தாள்

களுக்கு ஒப்பிடுவர் எல்லா மறிந்த தேவர்கள். அதனினும் குறைவு வேறொன்றுமில்லை. நாயகனது திருவடிகளின் தன்மையைக் குறித்து நாடுவோமானால் பவளக்கொடியும் நீலோத்பலம்போலக் கறுத்துத் தோன்றும். கற்பகத்தின் அரும்பும் இளங்கொடிப் பவளமுங் கிடக்கட்டும். அவை பிரயோஜனம் அற்றன. ஒளியுள்ள கால்விரல்களுக்கு உதயசூரியனது இளங்கிரணங்கள் ஒருபோது ஒத்தாலும் ஒக்கும். மங்கையர் சிகாமணியே! வேறெதுவும் நிகராகாது. கால் நகங்களுக்கோவெனில் சிறியவும் பெரியவுமாய் மாசற்ற சந்திரனுண்டானால் உவமை சொல்லலாம். ஒளிமிகும் வயிரங்களோவெனில் அவை விளைவாகக்காணப்படவில்லை. நிலத்தோடு பொருந்தாமலும் பொருந்திக் காடு புகுந்து வருந்தியும், ஆனதுபற்றியே நூலையும் மாறுகொண்டதாய்ப் புவனமெல்லாம் ஒருங்கே புணர்வதான அவ்வடிகளின் மேன்மையை யுரைக்க வொண்ணுமோ! அன்னமே! அப்புருஷோத்தமனது கணைக்காலுக்கு அம்புக்கூட்டை யொருபடியாக வுவமை கூறுதலும் பொருந்தாது. பக்ஷிராஜனான கருடபகவானது கழுத்தும், மதகரியின் துதிக்கையும் நாணினவென்றால் தொடைகளுக்கு வேறுவமையு முண்டோ. வலமாகச் சுழித்தோடுகின்ற கங்கையினது சுழி யென்றலும் புன்மையாம். தாமரைப் பூவோடு உலகெல்லாந் தந்த திருவுந்திக்கு மகிழம்பூவை நேர் சொல்லலாம். வேறோர் உவமையும் உலகிற் பொருந்துமோ? ஒப்பற்ற மரகத மலையும் அஞ்சும்படி அகன்றுயர்ந்த திருமார்பினிற் பிரிவற வாழ தவம்புரிந்தாளென்னில் லக்ஷ்மியினும் செல்வம் பெற்றவர்கள், என் குல தெய்வமே! யாவரிருக்கிறார்கள்? தளங்களோடு கூடிய மலரென்று கருதி வண்டு எப்போதுஞ் சுற்றிக்கொண்டிருக்கின்ற திருக்கரங்களுக்கு ஐராவதத்தின் கரத்தைச் சிறிது நேராகச் சொல்லலாம்; வேறோர்

உவமை சொல்லத் தகுமோ? ஹிரண்யனுடைய வச்சிரம் போன்ற வலிய சரீரத்தைப் பிளந்த சாகஸமான வியாபாரம் நிச்சயமானதன்றென்பார் உளராயின் அவரது ஐயத்தை முகிழ் போன்ற கை நகங்கள் நீக்கிவிடுந் தன்மையா யிருக்கின்றன. திரட்சியும், காந்தியும், திருமகளின் சேர்க்கையும், மேரு மலை யான வலிய வில் முறியும்படி நாண் ஏறிடுந் தன்மையும் பெற்று, ஒன்றையொன் றொத்த பர்வதங்களிரண்டில்லையெ னின் புஜங்களுக்கு வேறு எதனை யொப்பிடுவேன்? சேஷ சாயியின் இடது திருக்கரத்தில பாஞ்சஜன்யமொன்று இருக்கும் போது கடலிற் கிடக்கும் சங்கமும், இளமை பொருந்திய கமுகும் திருக்கழுத்துக்கு ஒப்பாம் என்னும் அறிவிலார்க்கு உடம்பட வொண்ணுமோ? ஆரிய சிரேஷ்டனது திருமுகத் தைக் கமலமென்பேனுயின் கண்களுக்கு வேறு எதனை உவமை யாகக் காட்டுவேன்? தண்மதி யென்று முகத்தைச் சொல்லு வோமெனில், விளக்கமுற்ற அவன் சரீரம் மெலிந்துதேய்தலால் சொல்லக் கூடியதாக இருக்கவில்லை. அமலனது செவ்விய வாயை நீர்நிலையி லலர்ந்து தோன்றும் நளினமென்று சொல்ல மனம் நாணமுறுகின்றது. இரக்கத்தோடு கூடி யமிர்தஞ் சுரக் கின்ற வார்த்தையைத்தான் பேசாதென்றால் மந்தஹாஸமுந் தோற்றுமலிருக்கிற பவளத்தை எப்படியதற்கு ஒப்பிடுவேன். முத்துக்களோ, நிலாவின் துண்டுகளோ, அமிர்தத்தின் துளி களோ, தர்மத்தினது வித்து முளைத்த அங்குரமோ, வேறு சிலவோ, ஸத்யமென்னும் மரத்திற் பூத்த பூங்கொத்தோ யாதென்று பல்லுக்கு உவமை சொல்லுவேன்? நன்னிலத்தில் தோன்றின இந்திரநீலத்திலுண்டான சுடரும், மரகதத்தினது நீங்காத உயர்ந்த ஜோதியினது திரளும் வேண்டும்படியான நிற முள்ளதாய் இந்திரகோபமென்னும் பூச்சியைப் பற்றவந்த பச்

சோந்தியெனினும் பொருந்தாது விளங்குகின்ற வள்ளலின் திருமூக்கிற்குப் பின்னும் உவமை சொல்லமுடியுமோ? காட்டில் கரன்முதலானவர்களது கவந்தங்களும், பல பேய்களும், கையிலுள்ள சிலையும், முனிவர் கூட்டங்களும், தர்மமும், அரக்கர் குலம் வேரோடு தொலைந்ததென்னுங் கருத்தால் நான்கு வேதங்களும் கூத்தாடும்படி வளைத்த புருவத்துக்கு, அம்மா! நீயே உவமை கண்டுகொள்ள வேண்டும். மறுவையும், வளர்வு தேய்வையும், பாம்பினால் பற்றப்படுந் துன்பத்தையும், இறப்பையும் பிறப்பையும் தீர்வுற்று எட்டாம் நாளில் தோன்றும் சந்திரன் மாலையை யணிந்த இருளின்கீழ் நெடுங்காலமும் நிற்கப் பெற்றால் அவனது நெற்றியைச் சிறிது நிகராகப் பெறுமென்று சொல்லலாம். நீண்டு, குழன்று, நெய்த்து, இருண்டு, நெறிந்து, செறிந்து, நீலம் பூண்டு, புரிந்து, சரிந்து, கடைசுருண்டு, அகிற் புகையும், பூவும் வேண்டுவன வல்லவெனத் தெய்வமணங் கமழும் அழகிய தலைமயிர் இப்போது ஜடையாக இருக்கின்றதென்னின் மேகமென்று ஒப்புச்சொல்லுதல் இழிவன்றோ. ஸ்ரீதேவியோடுபூதேவியும் பொருந்தும்படி எல்லைகொண்ட பெருஞ்செல்வம்வந்தகாலத்தும் அச்செல்வம் நீங்கித்துன்பந்தரும் வனம்புகும்படி வந்தகாலத்தும் வேறுபடாத அவனது நடையை இழிவான ஒரு விருஷபத்தினிடத்தி லுளதென்றால் அவ்வித நடையுள்ள மத்தகஜம் தன்னை யேன் ஒப்புச் சொல்லவில்லையென்று வருந்தாதோ. இவ்விதம் மொழியக் கேட்டு அனலிலிட்ட மெழுகு போலத் தன்னை யறியாமல் சோர்கின்ற பிராட்டியை வாயு புத்திரன் வணங்கி, "நாயகனுர் சொன்ன குறியையும் அடையாளங்களான சொற்களையும், தோகை யன்ன நடையாய்! கேட்பாயாக" வென்று சொல்லத் தொடங்கினன். 'வனத்தில் மார்க்கங்கள் நடத்தற்கரியதாயிருக்கும், ஆதலால் தாயார்க்

குப் பணிவிடை செய்துகொண்டு இங்கேயே யிரு என்று சொல்ல அச்சொல்லுக்கு உடுத்த துணியோடும் உயிர்போன உடலோடும், எடுத்த கோபத்தோடும் பக்கத்தில் வந்து நின்றதையும், செல்வத்தையெல்லாம் நீங்கி வனவாஸம் புறப்பட்ட நாளில் நகரத்தின் மதிலைக் கடந்து வாசலில் வருவதற்கு முன்னே இன்னுங் காடு எவ்வளவு தூரமிருக்கிறது? என்று இசைத்ததையும், ஸுமந்திரனைப்பார்த்துக் கிளிகளையும் பூவைகளையும் நன்றாக வளர்க்கும்படி என் தங்கையார்க்குச் சொல் என்று சொன்னதையும் ஸீதைக்குச் சொல். மீட்டும் வேறொரு வார்த்தையும் வேண்டுவதில்லை' யென்று சொல்லித் தனது திருநாமம் தீட்டியதும், செய்தற்கரியதுமாகிய இதை 'ஸீதையினிடம்கொடு' என்று கொடுத்தருளினனென ஒருதிருவாழியைக் காட்டினன். அதனை ஸீதையும் பார்த்தாள். போன வுயிர் திரும்பவும் வரப்பெற்றவர்களைப் போலவும், இழந்த மணியைக் கண்ட நாகம் போலவும், கைவிட்ட தனத்தை மீளவும் கண்டெடுத்தவர்களைப்போலவும், குழந்தையைப் பெற்ற மலடியைப் போலவும், சொல்லுதற்கரிய மகிழ்ச்சி கொண்டவளாய் அம்மோதிரத்தை வாங்கினள். முலைக்குவையில் வைத்தாள், சிரஸால் தாங்கினள், மலர்க் கண்களில் ஒற்றினள், உடம்புபூரித்தாள், மெலிந்தாள், குளிர்ந்தாள், வெதும்பி யேங்கினள், பெருமூச்செறிந்தாள், மோந்து பார்ப்பாள், முலைகளால் இறுகத் தழுவுவாள், கண்களில் பெருகுகின்ற நீரைத் துடைத்துக் கொண்டு தழும்புபட நோக்குவாள், பேச ஆரம்பிப்பாள், ஒன்றும் பேசமாட்டாள், விம்முவாள், விழுங்க நினைப்பாள். ஸீதாதேவிக்கு அம்மணியாழி பசியால் வருந்துவார்க்கு அமிர்தம் போலவும், இல்லறத்தார்க்குக் கிட்டற்கரிய நல்விருந்து போலவும், சாகக்கிடக்கின்றவனுக்கு ஸஞ்சீவிபோலவும், விளங்கிற்று.

இத்தகையளாய்க் கண்களில் நீர் ததும்பி முத்துதிர்வது போல முலைமுகட்டில் விழ உரை குழறி, "ஏ, உத்தமா! முதல்வன் தூதனாக வந்து என் உயிர் தந்த உனக்கு யான் செய்யுங் கைம்மாறுமுண்டோ? என் அப்பனே! அருளின் வாழ்வே! நீ இம்மையும் மறுமையும் இசையோடு எனக்குக் கொடுத்தாய். ஏ. வீரா, நிர்க்கதியாயிருந்த என் துயரந்துடைத்த வள்ளலே! நான் கற்புடையளாயின் நீ என்றும் இப்படியே சிரஞ்சீவியாய் வாழவேண்டும் என்று ஆசீர்வதித்துப் பின்னரும் மாருதியை நோக்கி "நற்குணமுடையோய்! ஸ்ரீ ரகுவீரன் இப்போது எங்கே யிருக்கிறார்? இளையவரோடு உன்னைச் சந்தித்தது எங்கே? அடியாள் இங்கிருக்குஞ் செய்தியை யார் சொல்லத் தெரிந்தார்" என்று கேட்க ஹநுமானும் சொல்லத் தொடங்கினான். "மானாக மாய உருக்கொண்டுவந்த மாரீசனென்னும் அரக்கன் ஸ்ரீ ராகவனது பாணத்தா லடிபட்டுக் கீழே விழுந்தருணத்தில் உம்மை மயக்குதற்காக "ஆ, ஸீதா! லக்ஷ்மணா!" என்று சொல்லி யழைத்து உயிர்துறந்தான். அதுகண்டு இதனால் ஏதேனுந் தீங்கு விளையவுங்கூடும் என்று கருதி ஸ்ரீ ரகுவீரனும், இக்குரலை இளையவன் கேளாதிருக்கவேண்டுமென்னும் அபிப்பிராயத்தோடு குணத்தொனி செய்துகொண்டே வரும்போது வழியில் இலக்ஷ்மணனைக் கண்டு, நடந்த விஷயங்களைக் கேட்டு மனங்கலங்கி விரைவாக நீர் இருந்த சோலைக்கு வந்து பார்க்க உம்மைக் காணாமல் மிகுந்த துன்பத்தை யெய்தி பின் அங்கிருந்து புறப்பட்டு, அன்னையே! உம்மைக் காடு மலை நதி முதலிய இடங்களிலெல்லாம் நாடிக்கொண்டு இயந்திர வடிவம்போலச் செல்லும்போது அங்கே தன்னுயிரைப் புகழுக்கு விற்ற ஜடாயுவைச் சந்தித்து அவன் மேனியை நோக்கித் துயரமுற்று, "எந்தையே! இவ்விதம் உமக்கு நேர்ந்த

தன் காரணம் என்ன" என்று வினவலும், அக்கழுகின் வேந்தனும், சுந்தரி! உம்மை இலங்கைவேந்தன் செய்த வஞ்சனைகளைச் சொல்லச்சொல்ல ஸ்ரீ ரகுவீரனுக்கு உலகம் வெந்தன என்னும்படி கோபத்தீ பொங்கிவிட்டது. பின் பிதாவாகிய அக்கழுகின் வேந்தன் ஆற்றுதல்செய்யச் சினந்தணிந்து, "அந்த இராவணன் எவ்வழியாகச் சென்றான்? அவன் இருப்பிடம் யாது?" என்று கேட்க ஜடாயுவுஞ் சொல்லத்தொடங்குகையில் விதியின் கொடுமையால் அக்கழுகரசன் திடீரென லோகாந்தரத்தை யடைந்துவிட்டான். வில்வீரர்களான இருவரும் மிகுந்த துயரத்தையெய்தி அப்பிதாவான ஜடாயுவுக்குச் செய்யவேண்டிய பிதிர்க்கடன்களை யெல்லாம் நன்றாகச் செய்துவிட்டு அவ்விராவணனைத் தேடிக்கொண்டு காடு மலையெல்லாம் கடந்து சென்றார்கள். அங்கு ஓரிடத்திலும் அவனைக் காணுமற்போகவே ஸ்ரீ ராகவன் அழலுற்ற மெழுகுபோல மனம் உருகி உன்மத்தனைப்போல, "கோதாவரியே! என் பவளக்கொழுந்தைத் தேடிக்கொண்டுவா," "குன்றமே! என் பூங்கொம்பைக்காட்டு" என்று புலம்புவான். மான்கூட்டங்களைக்கண்டு 'உம்போல மாரீசன் மானாக வந்ததனாலல்லவோ என்மான் பிரிந்து போனாள்' என்று சினங்கொண்டு உயிரழிந்து மூர்ச்சிப்பான். தம்பியின் அமிர்த வசனங்களால் மீண்டும் உயிர்பெறுவான். இவ்விதமாக வழி நெடுகக் கண்ணீர் சிந்திக்கொண்டே நாங்களிருந்த மலையை நாடிவந்து அங்கே எங்கள்நாயகனான ஸுக்கிரீவனோடும் நட்புக்கொண்டபின் அவன் தமயனான வாலியைக் கொன்று அவ்வரசைச் சுக்கிரீவனுக்குக் கொடுத்தருளி அக்கிஷ்கிந்தையில் ஆறுமாதகாலம் இளையவனோடிருந்தான். பின் உம்மைத் தேடிக்கொண்டு வானரசேனைகள் நாற்புறமும் போக அடியேன் இத்தக்ஷிண திசையை நோக்கி வந்தேன்" என்று நடந்ததை

யெல்லாம் விண்ணப்பஞ்செய்தான்.

இவ்வாறு சொல்லக்கேட்ட வைதேகி, ஆரிய சிரேஷ்டனை ஸ்ரீராகவனது வருத்தத்தை நினைந்து துன்பமும் உவகையுங்கொண்ட உள்ளத்தை யுடையவளாய், ஹநுமானை நோக்கி "ஐயனே! நீ கடத்தற்கரிய ஸாகரத்தை எப்படிக் கடந்துவந்தாய்" என்று வினவ, "அம்மா! உம்முடைய நாயகனாது திருவடிக் கமலங்களையே யெப்போதுந் தியானம்பண்ணிக்கொண்டிருக்கின்றவர்கள் மாயையாகிற பெருங்கடலை யெப்படி அதிஸுலபமாகத் தாண்டிவிடுகின்றார்களோ அப்படியே அடியேன் இக்கடலை எளிதாகத் தாவிவந்தேன்" என்று மாருதி விண்ணப்பஞ் செய்தான்.

விசுவரூபப்படலம்.

"இத்தனை சிறியதோர் சரீரத்தைக்கொண்டு கடலைத் தாண்டுவது எப்படி? தவத்தால் ஆகியதோ? அன்றி மந்திரஸித்தியினால் இயன்றதோ?" என்று மந்தஹாஸந்தோற்ற மகிழ்வோடு மைதிலியார் திரும்பவுங் கேட்க, வாதாத்மஜன் வானத்தின் முகடு தன்னை முட்டும்படி யுயர்ந்து, பொன்மலையான மேருவின்கண்ணுள்ள மரங்களில் மின்மினிக் குலங்கள் மொய்ப்பன போல உரோமங்களில் நக்ஷத்திரங்களெல்லாந் தொத்திக்கொண்டிருக்க, காதிலணிந்துள்ள குண்டலங்களிரண்டும் சந்திர சூரிய மண்டலங்களை மாறுகொண்டு விளங்கப் பொன்மலைபோல் விசுவரூபங்கொண்டு நிற்பதைத் தனது மலர்க்கண்களாற் கண்டு, உலகளந்த நாயகனும் இவன் வடிவைக்காணின் நாணமுறுவான் என வியந்து, ஹநுமானது திருவடியையேனும் முற்றுங் காணமாட்டாத ஸீதை, 'அரக்கர் இனி மாண்டார்கள், என்று மனங்களித்து, "ஐயனே! எனக்கு மிகவும் அச்சமாயிருக்கின்றது, இவ்வுருவத்தை யொடுக்கிக்கொள்" என்று கூறினாள். ஹநுமானும் பிராட்டியின் அருள்கொண்டு

தன் முன்னேய வடிவங்கொண்டு நின்றான். பின் வைதேகி மாருதியை நோக்கி, 'புருஷோத்தமனை ஸ்ரீ ராகவனது; அருளும் புகழும் அழிவின்றி என்றும் நிலைநிறுத்தற்கு நீ ஒருவன் தோன்றினாய். ஏ, வீரா! நின் பெருமைக்கு ஏற்ப இப்பகைவரது இலங்கை ஏழு கடலுக்கும் அப்புறத்ததாகாமல் இருந்ததும் இழிவன்றோ?' என்றும். 'அறிவும், உருவும், ஆற்றலும், செயலும், தேற்றமும், தோற்றத்தின் நெறியும், கல்வியும், நீதியும், இவ்விதமாயின் நான்முகன் முதலானவர்களுங் குணங்களாற் குறைந்தவர்களென்றல்லவோ சொல்லவேண்டும்' என்றும், பலவாறு புகழ்ந்து 'ராக்ஷஸர்களின் கூட்டத்தையும், ஸ்ரீ ரகுவீரனுக்கு இளையவனைத்தவிர வேறு துணையில்லாத பிழையையும் நோக்கி மனமுடைந்தேன். இந்த ஹநுமான் என் கோமானுக்குத் துணைவனாயினனென்றால் இனி அரக்கர் என்ன செய்யமுடியும் என்றும், மாயச் சிறையினின்றும் மீண்டேன் என்னை இவ்விதமான துன்பத்துக்குள்ளாக்கிய அரக்கர்களையும் குலத்தோடு வேரறுத்தேன். என் நாயகன் மலரடிகளையும் பூண்டேன். இனிப்புகழன்றிப் புன்பழியொன்றுந் தீண்டேன்' என்றும் மனமகிழ்ந்திருந்தாள். வாயு ஸூதனும் வானரஸேனையின் மிகுதியையும் அவற்றின் பராக்கிரமத்தையும் படைத்தலைவர்களின் பெயரையும் ஸீதைக்கு விளங்க வுரைத்துக் கொண்டிருந்தான்.

ஸ்ரீதேவிபோலு மிவள் மிகுதியுந் துன்பத்தையே புகல்கின்றாளாதலின் ஸ்ரீ ராகவனது இன்னுயிரனைய பிராட்டியைக் கொண்டுபோவதே காரியமெனக் கருதிப் "பொற்கொடியே! அடியேன் வார்த்தையைக் கேட்டருளல் வேண்டும். இராவணனை இப்போது வெல்ல நினைத்தல் தகுதியன்று. அதைப்பற்றிப் பலவிதம் யோஜனை

சூடாமணிப்படலம்.

பண்ணுவதிலுங் காரியமில்லை. ஸ்ரீ ராமன் ஸந்நிதியில் உம்மைக் கொண்டுபோய்விட்டுத் திருவடி தொழுவேன். அதற்கு இதுவே ஏற்ற சமயம். மென்மயிர்பொருந்திய என் தோளில் எழுந்தருளி யிரும். நல்ல நித்திரை யுண்டாம்படி யசையாமலும், மத்தியில் தங்காமலும் இமைப்போதில் இறைவன் வஸிக்கும் குன்றிற்போய்க் குதிக்கின்றேன். இச்செய்தி தெரிந்து அரக்கர்கள் தொடர்ந்தாலும் அவர்களைக் கொன்று என் சினத்தைப் போக்கிக்கொள்வேன். நுமது நிலைமை தெரிந்தும், பூங்குழலே! சாகாவரம்பெற்ற நான் வெறுங்கையோடு போகேன். இலங்கையோடும் எடுத்துப்போவென்றாலும், இப்போதே பெயர்த்து என் வலது கையில் வைத்துக்கொண்டு தடுக்கவருகிற ராக்ஷஸர்களையும் இடக்கையால் கொன்று ஸ்ரீ ராகவனது திருவடிகளைச் சென்று வணங்குவேன். அன்னையே! இது எனக்கோர் பொருட்டன்று. அருந்ததியே! நீரே சொல்லும். அழகன் பாற்சென்று, 'நின் அருமந்ததேவி வஞ்சகர்களது சிறையில் இருந்து யாதோர் பரிகாரமுங் காணமல் வருந்துகின்றாள்' எனச் சொன்னால் என்னடிமை யென்னாகும்? சரீரத்திற் சிறிதுங் காயமின்றிச் சென்று பகைவர்கள் பராக்கிரமத்தைப் பரக்கப், பரக்கப் பேசுவேனா? 'கண்டுவந்தேன், கொண்டுவரவில்லை, என்னுயிரையே பெரிதாகக் கருதினேன்' என்று உரைப்பேனா? எதைச் சொல்லுவேன்? 'இலங்கையை உருக்கி எரியாக்கி அரக்கர்களையும் ஒருங்கே தொலைத்துச் சீக்கிரஞ் செல்' என்றாலும் இப்போதே அதனைச் செய்கின்றேன். எதற்கும், பிறைபோலும் நெற்றியை யுடைய நேரிழையே! உம்மோடு சென்று ஸ்ரீ ராமனது சிந்தைத்துயரைத் தணித்துவிட்டுப் பின் ஆராய்ந்து அரக்கர்குலத்தை அடியோடும் அறுத்து உலகத்தை ரக்ஷித்தல் நலமாமென்று தோற்றுகிறது. இனி வேறொன்றுஞ்

சொல்வதற்கில்லை. அடியேனுக்கு இப்பேறு லபிக்கும்படி அனுக்ரஹிக்கவேண்டும். சீக்கிரம் என் தோளில் எழுந்தருளும்.'' என்று ஹநுமான் விண்ணப்பஞ்செய்து பிராட்டியின் திருவடிகளை வணங்கினான். இவ்விதம் நன்மொழிகளை விளம்பிய தாய் நாடிய கன்றுபோன்றவனான மாருதியைப் பார்த்து வைதேகி பின் வரும் வார்த்தைகளைச் சொல்லலானாள். "இது உனக்கு அரியதன்று. நின் ஆற்றலுக்கு எற்றதே. நன்றாகவே ஆலோசனை செய்தாய். எண்ணியபடியே செய்வாயென்பதிலும் ஸந்தேகமில்லை. எனினும், என் பேதமையோடுகூடிய அற்பமான பெண்புத்தியால் இது தகாதெதன நினைக்கின்றேன். கடலின் மத்தியில் உன்னைத் தொடர்ந்துவந்து அரக்கர்கள் பாணந் தொடுப்பார்களானால் நீ அவரோடு போர்புரிவாயா, என்னை ரக்ஷிப்பாயா, இரண்டையுஞ் செய்யமாட்டாமல் தனியாயிருந்து வருந்தும்படி நேரிடும். மேலும், ஹவிஸ்ஸைக் கவ்விவந்த நாய் என்னும்படி என்னை யெடுத்துவந்த அரக்கர்கள் நினைத்த வஞ்சனையை ஆண்மக்களான நீங்களும் நினைக்கலாமா? என் சரீரத்தி லாசை வைத்த அரக்கனது விழிகளைக் காகங்கள் கொத்தித் தின்னும்படி ஸ்ரீ ரகுவீரன் தன் விற்றொழிலைக் காட்டினாலன்றி நான் உயிரோடு வாழ்வேனென்பதை விட்டுவிடு; நாணில்லாத அரக்கியர்கள் தங்கள் மங்கலநாணை யிழந்து வருந்தும்போதுதான் நான் பெற்ற நாணமும் மாண்புடையதாகும். பொன்மலையாலான இவ்விலங்கை அரக்கர்களது எலும்புமலையாலானதாக ஆகாமற்போனால் நான் எனது இற்பிறப்பையும் ஒழுக்கத்தையும், இழுக்கில்லாத கற்பையும் பிறர்க்கு எப்படிக் காட்டுவேன். துஷ்டர்கள் வஸிக்கும் இவ்விலங்கையை மாத்திரமேயன்று. எல்லா வுலகங்களையுமே என் சொல்லினாற் சுட்டெரித்திருப்பேன். அது, தூயனான ஸ்ரீ ரகுவீரனது வில்

னுக்கு மாசென்று மதித்தல்லவோ அங்ஙனம் செய்யாமல் பொறுமையோடிருந்தேன். மற்றொன்றும் நீ கேட்கவேண்டும். ஸ்ரீ ராகவன் மேனியையல்லாமல், பஞ்சேந்திரியங்களையும் நிக்ர கித்தவனாயினும் நின்னையும் ஆணென்றே கூறுதலால், இவ் வுருவைத் தீண்டுதல் கூடுமோ? இராவணன் என்னைத் தீண்டி யிருப்பானாயின் இத்தனைநாள் உயிரோடிருப்பானோ? முன்ன மேயே மாய்ந்துபோயிருப்பானே. அதனாலன்றோ அக்கீழ்மை யோன் நிலத்தோடுங் கீண்டுகொண்டுவந்தான். மேலும் 'மன மில்லாத மாதரை மெய்தீண்டினால் தலை வெடித்து எரிந்து போவாய்' என நான்முகன் கொடுத்த சாபமும் அவனுக்குண்டு. அதனாலேயே நான் இதுகாறும் உயிர்பிழைத் திருந்தேன். இப்படி இராவணனுக்கு ஒரு சாபம் இருப்பதாக ஸத்யவிரத னான விபீஷணனுடைய புத்திரியாகிய திரிஜடை யென்னும் நங்கை யென்பாற் கருணைகூர்ந்து சொல்லி என் மனத்தடுமாற் றத்தைப் போக்கினாள். நான் இச்சாபமிருப்பதை யெண்ணி யும், தர்மம் தவறிப்போகாது என்பதை நம்பியும், நாயகனது பராக்கிரமத்தைப் பார்த்தும், என் தூய்மையைக் காட்ட நினைந்தும் இத்தனைநாள் இங்கே யிருந்தேன். இராவணன் பெயர்த்துக்கொண்டுவந்து இங்கே வைத்ததும் இளையவனாற் செய்யப்பட்ட பர்ணசாலை யென்பதை ஐயனே! நினது மெய் யுணரும் கண்களால் நன்றாகப்பார்த்துத் தெரிந்துகொள். நான் இச்சோலையைவிட்டு ஒருபோதும் அப்புறம்அடிபெயர்ப்பதில்லை. ஸ்ரீ ராகவனது திருமேனியை யொத்து விளங்கும் இத்தாமரைத் தடாகத்திற்குமட்டும் எப்போதாவது போவதுண்டு. அதுவும், சோர்ந்துபோகின்ற ஆவியைக் காக்கவேண்டுமென்னும் துணிவி னாலேயயன்றி வேறில்லை. ஆதலால், ஐயனே! இது காரியம் அன்று. வேதநாயகன்பால் விரைவில் திரும்பிப் போதலே

நலம்." இவ்வாறு பூவையன்ன அப்பூங்கொடி புகலலும், கோ
தற்ற குணநிதியான வாதாத்மஜன், "நன்று! நன்று!! தேவ
நாயகன் தேவியினது தவத்தொழில்" என்று மனங்களித்து
ஸ்தோத்திரம் பண்ணி ஜாநகியைப் பார்த்து, "அம்மா நீர் சில
பகல் இங்கே தங்குவதால் உலகத்திற்கே க்ஷேமம் பிறப்பதற்குக்
காரணமாயிற்று." என்றுசொல்லித் திரும்பவும், "தாயே உமது
பிரிவாற்றாமல் மருள்கின்ற ஸ்ரீ ரகுகுலவீரனுக்கு அடியேன்
சென்று சொல்லும் வாசகம் யாது? அருளவேண்டும்" என்று
அடியிணைகளைத்தொழுது பிரார்த்திக்க மைதிலி கூறுவதானாள்:
"இன்னும் ஒருமாதந்தான் இங்கே உயிரோடிருப்பேன். பின்
உயிர்தரித்திரேன். இதை மனத்தில் வைத்துக்கொள். ஸ்ரீ ராக
வனுக்கு நான் ஏற்ற தாரந்தான் அல்லவென்றாலும், தயை
யென்னும் ஈரந்தான் அவர் மனத்திலில்லையென்றாலும் தன்
வீரத்தைக் காத்தல்வேண்டுமென்று வேண்டிக்கொள். ஒருமாதத்
திற்குள் எனக்குமுடிவென்று தீர்ந்துகிடக்கின்றது. அதற்குள்
ளாக இங்கே வரவில்லையென்றால் கங்கையாற்றில் அடியேனுக்
கும் தன் செங்கையால் கர்மங்களைச் செய்துவிடும்படி சொல்.
சிறந்த எனதுமாமியார்மூவர்க்கும், 'ஸீதை அங்கேயிலங்கையில்
இறந்துவிட்டாள், இறக்கும்போது உங்களைத் தொழுதாள்,
என்று இந்த வார்த்தையை நாயகன்பால் அருளின்மையால்
மறந்துபோனாலும் ஐயனே! நீ மறவாமற் சொல்லவேண்டும்.
மிதிலையில்என்னைப் பாணிக்கிரகணஞ் செய்துகொண்டதினத்
தில் 'இந்தஜன்மத்தில் இரண்டுமாதர்களை மனத்தாலும் தொட
மாட்டேன்' என்ற திவ்யமான ஒருவரத்தை எனக்குத் தந்ததை
யுந் திருச்செவிபற்றும்படி சொல். இருக்கும் நாளெல்லாம் இங்
கேயேயிருந்து மாய்ந்துபோனாலும் மீண்டும் வந்து பிறந்து தன்
திருமேனியைத் தீண்டும்படியாக ஓர் வரந்தரவேண்டுமென்று

வேண்டிக்கொண்டாள் என்பதையும் விளம்பு. என்பிதா, மாதா, பந்துக்கள் எல்லாரையும் நான் நமஸ்கரித்ததாக அவர்களுக்கு மறந்துபோகாமற் சொல்லு. ஸ்ரீராகவன் அரசு வீற்றிருந்து ஆள்கின்ற அழகையும், பட்டத்துயானையின்மீதேறித் திருவீதியில் எழுந்தருளுங் கோலத்தையும் நான் காணக் கொடுத்து வைக்கவில்லை; எனினும், ஏ, கபியின் மன்னவா! நீ என் இன்னுயிர்க் காந்தனுண சுந்தரத்தோளுடைய பெருமானை எப்போதுங் கூடவேயிருந்து காத்துக்கொண்டுபோய்த் திருவயோத்திக்கு அரசனும்படி செய்யவேண்டும்." இத்திறம் ஜாநகியுரைக்கக்கேட்டு, "அம்மா! நீர் இன்னும் துன்பம் ஒழிந்தபாடில்லை. இவையெல்லாம் என்ன வார்த்தை. 'தேவர்களுக்குப் பகைவர்களான இராக்ஷஸர்களை அடியோடும் படுத்தாள். தீவினையைத் தடுத்தாள். தக்கவர்களான ஸாதுக்களை இடர்க்கடலினின்றும் எடுத்தாள். எல்லார்க்கும் வாழ்வைக் கொடுத்தாள்' என்று இப்படிப்பட்ட புகழை நீர் பெறப்போகின்றீர். சிலநாள் நீர் துயரத்தை யனுபவித்ததனுலல்லவோ நல்லறம் தழைத்தோங்கக் காரணமாயிற்று. கண்டகர்களுடைய இரத்தவெள்ளத்தில் பேய்கள் மூழ்கக்கண்டு தேவர்கள் ஆனந்த ஸாகரத்தில் மூழ்குவதை நீர் அதிஸமீபத்தில் பார்க்கப்போகின்றீர். ராக்ஷஸிகள் சூல்கொண்ட தங்கள் வயிற்றிலடித்துக் கொண்டு அறுத்தெறிந்த தாலியாகிற பொன்மலை வாலியுங் கடக்கமுடியாததென்று சொல்லும்படி உயர்ந்துகிடப்பதையும், அரம்பையர்களாடிய அரங்கில் குரங்குகளாடுவதையும், தீவினையையுடைய அரக்கர்களாகிய கரியின்மத்தியில் ஜாநகியென்னும் ஒரு தணல் தங்கலால் பொன்மயமான இலங்கை ஸ்ரீராமபாணமென்னுங் காற்றுல் உருகியோடுவதையும், உமது கற்புடைய மேனியைநோக்கிய கொடியோன்தலைகளில் காக்கைகள் தாவிக்

கண்களைப் பிடுங்கித்தின்பதையும், அரக்கருமரக்கியருமிருந்து ஸுகானுபவஞ்செய்த கற்பகச்சோலையில் குரங்குகள் ஒன்றின் வாலை ஒன்று பிடித்துக்கொண்டு கூட்டமாய்க் குளிப்பதையும், நீர் சீக்கிரத்தில் காணப்போகின்றீர். அதிகமாய்ச்சொல்வதேன்? ஒருமாதகாலம் வேண்டுவதன்று. நான்போய் வீரனைக்காண்பதே குறை. பின் ஒரு க்ஷணமும் தனித்திருக்க மனந்துணிவரோ? கணக்கற்ற வானரவீரர்கள் இந்நகரைச் சூழ்ந்துவருங்காலத்தில் ஸ்ரீ ராகவனை என்முதுகிலும்,இளையவனை அங்கதன்தோளிலும் கண்டு களிக்கப்போகின்றீர். வீணே துயரப்பட்டு மனந்தளர வேண்டாம். குறிப்பிட்டதினத்தில ஸ்ரீ ராகவன் இங்கேவந்து சிறைமீட்கவில்லையென்னின் பிறகு பாவமும்பழியும் பெறுதற்கு இராவணன் அவனேயாவான். இக்கொடிய அரக்கன் இராம ஞவான்" என்று இவ்விதம் வாயுஸுதன் ஜாநகிக்கு மனத்திட னுண்டாம்படி நன்ருக மொழிந்தான். ஆக, இம்மொழிகளைக் கேட்டு மனமுவந்து தோகையும் சில வார்த்தை சொல்வதானாள்: "ஐயனே! நீ விரைவிற்செல்வாயாக. இனி யான் நீயனவொன் றையுஞ்சொல்லவில்லை. ஆகாயத்தையளாவிய சித்திரகூடபர் வதத்திலிருக்கும்போது என்னைஓர்காகம்தன்நகத்தாலளைந்ததை யும், அதுகண்டு கோபித்து ஸ்ரீ ராகவன் பக்கத்தே கிடந்ததோர் துரும்பைப் பாணமாக விட்டதையும், அதுகண்டு நடுங்கி அக் காகம் பிர்ம்மலோகமெல்லாஞ்சென்று திரிந்து தன்னைக் காப்பா ரின்மையால், 'ஐய! நின்சரணஞ்சரண்' என்று பூமியில் வந்து வீழ்ந்துவணங்க, வள்ளல்மகிழ்ந்து அவன் கண்ணுேடுபோகென விட்டதையும், அதுமுதல் மற்றுள்ள காகங்களுக்கும் ஒரு கண் தொலைந்ததையும் அடையாளமாகச் சொல். நான் என் உயிர் போல்வளர்த்த கிளிக்கு யார் பெயரை வைக்கலாமெனக் கேட்க, 'என் அன்னை கேகயன் புத்திரியின்பெயரை வைப்பாய்' என்று

அன்போடுசொன்ன வார்த்தையையும் ஞாபகப்படுத்து" என்று உரைத்து இனி இத்தனை யடையாளங்கள் வேண்டுவதில்லை யெனத் தன் திருத்துகிலில் முடிந்துவைத்திருந்த சூடாமணி யைக் கையிலெடுத்து ஹநுமானுக்குக்காட்டி, "இது என் கண் மணியொப்பது, ஆடையில் முன்னம் முடிந்துவைத்திருந்தேன். நாடிவந்து என் உயிரையளித்த தீரா! இதைப் பேரடையாள மாகக் கைக்கொள்' என்று சொல்லிக்கொடுக்கக் கூந்தலாகிற மேகத்தினிடையில் விளங்கும் சூரியன்போலும் அச்சூடாமணி யை ஹநுமான் தொழுதுவாங்கித் துணியில் பத்திரமாய்முடிந்து கொண்டு ஸீதையை மூன்றுதரம் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ் கரித்தான். வைதேகியும் அன்போடு ஆசீர்வதித்தாள். மாருதியும் விடைபெற்றுக்கொண்டு சென்றான்.

அச்சோலையிலிருந்து வடதிசையை நோக்கிப் புறப்பட்ட ஹநுமான், 'அல்பமான ஒரு காரியத்தை முடித்துக்கொண்டு போவது தகுதியன்று' எனப் பின்னுஞ்செய்தற்குரியதோர் காரி யத்தை யோஜிக்கலானான். "அற்பர்களான அரக்கரைக்கொன்று இலங்கையைத் தகர்த்துக் கடலில் வீசியெ றிந்து பாழாக்கி, இராவணனையும் என் வா லால் இறுகப்பிணித்துச் சிறையிலிட்டு, அவன் கண்பார்க்கவே அவன் மனைவியான மண்டோதரியையுஞ் சிகையைப்பிடித்து இழுத்துவந்து சிறைவைத்துவிட்டு, மிருகாக்ஷியான ஜாநகியை ஸ்ரீராகவன் ஸந்நிதியில் கொண்டுபோய்ச் சேர்க்கவில்லையென் றால் என் அடிமையால் என்ன பிரயோஜனம். இவ்வனத்தை அழிப்பேன்; அழிக்கும் ஓசை காதிற்பட்டதும் என்மேல் அரக் கர்கள் சினங்கொண்டுவருவார்கள். வந்தவர்கள் ஒருவரும் திரும் பாதபடி எல்லாரையுங் கொல்வேன். கொன்றால் பின் இராவ ணனே வருவான். அப்போது அவன் தலைகளையும் உருட்டித்

பொழிலிறுத்தபடலம்.

தள்ளி என் கோபத்தை ஒருவாறு தணித்துக்கொள்வேன்." என்று நினைத்துத் தன் பெரிய வடிவத்தை யெடுத்துக்கொண்டு உலகத்தைத் தன் கொம்பின்முனையிலே யேந்திநின்றஆதிவராக மூர்த்தியைப்போன்றவனாய் அச்சோலையைத் துவைக்க வாரம்பித்தான். நொடிப்போதில் அச்சோலையின் மரங்களெல்லாம் முரிந்தும், நெரிந்தும், பிளந்தும், பொடிந்தும், முறிந்தும், தகர்ந்தும், எரிந்தும், சரிந்தும், சின்னபின்னப்பட்டுத் தொலைந்து போயின. ஹநுமானால் வீசியெறியப்பட்ட மரங்களிற்சில திசை முடிவிற்சென்று வீழ்ந்து அங்குள்ள திக்கஜங்களுக்கு ஆகாரமாயின. சில வானஞ்சென்று அங்குள்ள நந்தனவனத்தையுமழித்தன. சில அரக்கர் மாளிகையின்மேலும், மலைகளின்மீதும் விழுந்து அவற்றைப் பொடியாக்கின. சில வித்யாதரர்களது நகரத்திலும் சில யக்ஷர்களது மலையிலும்விழ, அவற்றின் மலர்களை அங்குள்ள மாதர்கள் கூடிப்பறித்துக் குழலிலணிந்து களித்தார்கள். சில தருக்கள் கடலில்விழ அங்குள்ளமீன்கள் அம்மரங்களிலுள்ள வண்டையும், கிளிமுதலிய பக்ஷிகளையும், தளிர், பூ, காய், கனி தேன்முதலியவற்றையும் விழுங்கித் துள்ளின. சில மீன்கள் அம்மரத்தால் தாக்குண்டு இறந்தன. யாதாயினும் ஒரு தோஷத்தால் பூமியில்வந்து தோன்றினவர் பின் அத்தோஷந் தீர்ந்து ஞானம்பெற்று வீடடைதல்போலத் தேவலோகத்திலிருந்து இலங்கைக்குக் கொண்டுவரப்பட்டிருந்த கற்பகவிருக்ஷங்கள் ஹநுமானால் திரும்பவும் அந்தப்பொன்னுலகம்போய்ச் சேர்ந்தன. இவ்விதம் வீசியெறியப்பட்டமரங்களால்மதில்களும் மாடங்களும், மற்றுள்ள கட்டடங்களும் நெரிந்து பொடியாக அவ்விலங்கை பெரும்பாலும் பாழடைந்து தோன்றிற்று. இதற்குள் சந்திரனும் இனி நாம் இங்கிருந்தால், "ஸீதைகாரணமாக என்னைச் சுட்டாய் பகைவர்களான தேவர்கள்முன்யாகச் சோலை

யையழித்து நாசமாக்குவதையும் பார்த்துக்கொண்டிருந்தாய்" என்றுசொல்லித் தன்னை யிராவணன்பிடித்து உபத்ரவிப்பான் என்று நடுக்கமுற்றவன்போல மேல்கடலில்வீழ்ந்துமறைந்தான். தீயவர்களான அரக்கர்கள் காக்கும் அச்சோலையில் ஸ்ரீ ராகவன் பிரிவாற்றாமல் துக்கித்துக்கொண்டிருக்கும் வைதேகியார் தங்கியுள்ள அம்மரமொன்றைத்தவிர மற்றெல்லாமரங்களும் ஒழிந்து போயின. அவ்வொருமரம்மாத்திரம் உலகமெல்லாம் அழிவுற்ற காலத்து எம்பெருமானைத்தாங்கிக்கொண்டுநிற்கும் ஆலிலையைப் போலத் தனித்து விளங்கிற்று. சூடாமணியென்னும் உயிரினைத் தன் உயிரொப்பவனான நாயகனுக்கு அடையாளமாக அனுப்பி விட்டாளாதலால் ஸீதை இப்போது வறியவளாயிருக்கின்றாளென்று கருதி ஸமுத்திரராஜனால் கொடுக்கப்பட்ட சிகாமணி போலச் சூரியனும் உதயமாயினான். இதற்குள்ளாக ஹநுமானும் அச்சோலை முழுவதையும் அழித்தொழித்துவிட்டு உலகளந்த நெடுமால்போலவும், கடலின் மத்தியில்விளங்கிய மந்தரபர்வதம் போலவும், ஸர்வஸம்ஹாரகாலத்தில் விளங்கும் ருத்திரன்போலவும் விளங்கிக்கொண்டிருந்தான். இங்ஙனம் நிகழுங்காலத்தில் அரக்கியர்கள் எழுந்து கோபம்பொங்கினவர்களாய்ப் பொன்மலை போல அங்கே நிற்கும் ஹநுமானைப் பார்த்து, அச்சமுற்று, "இவன் யாரென்று உனக்குத் தெரியுமா?" என்று ஸீதையைக் கேட்டார்கள். அதற்கு அச்சேயிழை, தீயவர்கள் தீயவற்றைச் செய்தலைத் தீயவர்களே அறிவார்களல்லாமல் தூயவர்களும் அறிவார்களோ? உங்கள் மாயம் யாருக்கு என்னதெரியும்? பொன் மானைக்கண்டு 'இது அரக்கர்கள் செய்த மாயம்' என்று இளையவனான லக்ஷ்மணன் சொல்லவும் நான் கேளாமல் மெய்யான பொன்மானென்றே ஆசைகொண்டேன். இப்படிப்பட்ட எனக்கு என்ன தெரியப்போகிறது" என்றாள். என்றலும்

உடனே அந்த ராக்ஷஸிகளெல்லாம் வயிற்றிலடித்துக்கொண்டு மலை கடல்முதலியவெல்லாங் குலையும்படிபோடினூர்கள். மாருதி அச்சோலையின் பக்கத்துள்ளதோர் பொன்மயமான ஹோமமண்டபத்தைக் கண்டு அதனுயர்ச்சியையும், காந்தியையும் நோக்கி வியப்புற்று, இராவணன் பூர்வம் வெள்ளிமலையை வேரோடும் அள்ளினனென்னக்கேட்டு அத்தொழிலுக்கு இழிவுண்டாம்படி மேருவென்னும் பொன்மலையை யெடுக்கின்ருனே வென்னும்படிமலைபோலுயர்ந்த அந்தஹோமமண்டபத்தைப்பறித்து இலங்கைமேல் வீசினுன். வீசுதலும் மாடங்கள் பல இடிந்து பொடியாயின. சில பிளவுண்டன. அதுகண்ட அரக்கர்களு மனங் கலங்கி யச்சமுற்ருர்கள். இங்கே சோலையைக் காத்துக்கொண்டிருந்த தேவர்கள் பயந்து நடுநடுங்கித் துணியில் நீரைவிட்டுக்கொண்டுகால்கள் தடுமாற்றமுறவோடிப்போய்ச் சிங்கம்போன்ற கோபத்தையுடையவனுன இராவணன் பாதத்தில்வீழ்ந்து, "ஏ, ராஜ! இனி எங்களாற் காக்கமுடியாது. வலிய குரங்கொன்று வந்து நமது சோலையை நெருப்பிற்பட்ட பஞ்சென்னும்படி இருந்தஇடந்தெரியாமல் முற்றும் பாழாக்கிவிட்டது. மற்றும் அது செய்த காரியத்தைச் சொல்லுத லெளியதன்று. காலாலுங் கையாலும் அச்சோலையைப் புல் கூடப் பாக்கியில்லாமல் அழித்து நாசம்பண்ணிப் பொன்னுலான ஓமமண்டபத்தையும் பறித்துவீசி, சில இடந்தவிர இலங்கையையுஞ் சிதைத்துவிட்டது" என்றுகூறி முறையிட்டார்கள். அதுகேட்ட இராவணன், 'இத்தனையுஞ்செய்தது ஒரு குரங்குபோலாம்! இராக்ஷஸர்பராக்கிரமம் நிரம்பவும் நன்ருயிருக்கின்றது! இவ்விதம் மூடருஞ் சொல்லமாட்டார்கள்' என்று புன்னகைசெய்தான். பின்னும் அத்தேவர்கள், "ஐய! அதன் வலியை யென்னென்று சொல்வோம். அக்குரங்கைப்பூமிதான் எப்படிச்சுமக்கின்றதோ தெரிய

வில்லை. திரிமூர்த்திகளிலொருவனென்று உவமை சொல்வதும் இழிவாகும். அக்குரங்கு இன்னும் அங்கேயிருக்கின்றது. வந்து பார்க்கவேண்டும்" என்றார்கள். ஹநுமானும், பூமி பிளவுபட திக்கஜங்களும் தேவர்களும் அச்சமுற்று ஓட, அரக்கியர்கள் கருப்பங்கலங்கி வருந்த, அண்டம் வெடிக்கப் பேரொலிசெய்து முழங்கி அட்டஹாஸம்பண்ணிக்கொண்டிருந்தான்.

அவ்வித மெழுந்த ஓசையானது, இடி முழக்கத்தையும் ஸமுத்திரகோஷத்தையும், ஸ்ரீராகவன் ஹரதனுசைப் பங்கஞ் செய்தகாலத்தில் எழுந்தவொலியையும்போன்று இராவணனது இருபது காதுகளிலும் நுழைந்தது. அப்போது அத்தீயோன் பொறாமைபொங்கிய மனத்தனாய்ப் பெருவலியரக்கர்கள் பலரை யேவி, சீக்கிரம்போய் அக்குரங்கைக் கொல்லாமல் பிடித்துவா ருங்கள் என்று ஆக்ஞாபித்தான். அக்கணமே அக்கிங்கரர்கள் சூலம், வாள், முசலம் முதலிய ஆயுதங்களைப்பிடித்த கையும், ஆலாஹலம் போன்ற மெய்யுமுடையராய் உலகத்தையழிக்கும் ஊழிக்கா லத்துக் கடல்போல எழுந்துசென்று, வில்லேந்திய கார்வரை வருவதுபோலு வந்து வடிவழிந்த பொழிலைச்சுற்றிலும் வளைந் தார்கள். உயர்ந்த புகழுடையோனான ஹநுமானும் இவ்விதம் வரவேண்டுமென முன்னங் கருதினவனாகையால் அவ்வரக்கர் களைக்கண்டு மிகவுங் களிப்பையடைந்தான். அக்கிங்கரர்கள் பகலும் இருளும்படி நெருங்கிக் காற்றினும் விசைகொண்டு முடுகிவந்து, 'இவன்தான், இவன்தான்' என்றுசொல்லி விஷம் போற் சுடர்விடுகின்ற ஆயுதங்களை ஹநுமான்மீது பிரயோகித் தார்கள். தர்மாத்மாவான ஹநுமான் கடல்கடையும் மந்தரபர் வதம்போல அவ்வரக்கர்களின் நடுவிலே நின்று மலையருவி போலத் தோள்களினின்று இரத்தம்பெருகுமாறு மலையெல்லாம்

கிங்கரர்வதைப்படலம்.

தவிடுபொடியாம்படி விழுகின்ற இடியும் திடுக்கிடும்படி அவ்வரக்கர்களைப் படீரென அறைந்து கொன்றான். கண், கால், தலை, பல், கை முதலிய வவயவங்களை யிழந்து சின்னபின்னட்பட்டுப் பயங்கரமாய்ப்பெருகி யாயுதங்களை யிழுத்துக்கொண்டோடுகின்ற இரத்தவெள்ளத்தில் கிடந்து பலர் இறந்தார்கள். ஹநுமான் விசையாக வீசுதலால் சிலர் பக்கத்துள்ள மலையில் அறைபட்டும், சிலர் கடலில்வீழ்ந்தும், மாண்டார்கள். வாலினாற் சுற்றி வீசப்பட்ட அரக்கர்கள் சிலர் பம்பரம்போற் சுழன்று கலங்கி மாய்ந்தார்கள். இவ்விதமாக மாருதி தாள்களாற் பலரையும், கைகளாற் பலரையும், விழியாற் பலரையும், குன்றுகளாற் பலரையும், அவ்வவர் வாள்களாற் பலரையும் ஒழித்திட எங்கே பார்த்தாலும் மூளையும், நிணமும், இரத்தமுமாய்ப் பரவி அவ்விலங்கையானது ஹநுமானு லலைப்புண்டு வாய்தோறும் இரத்தத்தை யுமிழ்வதுபோல மிகவுங்கோரமாயும் பயங்கரமாயுங் காணப்பட்டது. வாயுஸுதனால் விசையாக வீசியெறியப்பட்ட அரக்கர்கள் வந்துவிழுதலால் மாளிகை பல மறிந்தன; கோபுரம் பல தகர்ந்தன; குதிரைகள் பல அவிந்தன; தங்கள் வீட்டைத் தங்களுடம்பாலேயே சிலர் தகர்த்தார்கள்; தங்கள் மாதரைத் தங்கள் காலால் சிலர் வதைத்தார்கள்; தங்கள் பிள்ளைகளைத் தங்கள் ஆயுதத்தாற் சிலர்கொன்றார்கள்; இவ்விதம் வீசிவீசி யெறிந்ததால் அவ்விலங்கையி லோரிடந்தப்பாமல் எங்கேபார்த்தாலும் கையுங், காலும், தலையுங்கிடந்து, துர்க்கந்தம் வீசின. உயிர்கவரும் காலனும் ஒய்ந்துபோய் வருத்தமுறச் சிறிதும் வருத்தமின்றிக் கபிநாயகன் யாவரையுங் கொன்று கொன்று குவித்து மேகத்தின்மத்தியில் சூரியன்போலவும், கடலின் நடுவில் மந்தரம்போலவும், பாம்பின் இடையில் கருடன்போலவும், யானைகளின் மத்தியில் சிங்கம்போலவும் விளங்கினான். இவ்வாறு

ஐயன் செருவிளைத்த அழகைக்கண்டு புகழ்ந்து தேவரும், முனிவரும், மகளிருஞ் சொரிந்த புஷ்பங்கள் மாருதி புயத்தில்வீழ்ந்து புண்ணோ பூவோவென்று தெரியாமல் பொலிவுற்றன. இவ்வளவாக அஞ்சனைசிங்கன் சிறிதும் உடல்வெயர்க்காமல் இதனை ஒரு விளையாட்டாகக்கருதி மகிழ்ந்திருந்தான். வந்த அரக்கர்களும் அஞ்சியோடாமல் போர்புரிந்துமாண்டுதம்மைவீரரெனக்காட்டிப் புகழ்பெற்றார்கள். இவ்வாறு வந்த கிங்கரர்கள் ஓர் மாத்திரைப் போதில் மடிந்துபோனதைத் தேவர்கள் கண்டு நடுக்கமுற்றுப் பிந்துகின்ற கையுங்காலுமுடையராய்ப் பயமானது பிடரைப் பிடித்துத்தள்ள ஆயிரக் கணக்கான பிணக்குவைகளின்மேல் வீழ்ந்து மனமுளைந்து விரைவிற்போய் விம்மலினாலொன்றையுஞ் சொல்லமாட்டாமல் அக்கிங்கரர்கள் இறந்தொழிந்ததைச் சைகையினால் தெரிவித்துத் தரையில் காலதரிக்காமல் திசைகள் தோறுந் திரும்பிப்பார்த்துக்கொண்டு அங்கங்குலைய நிற்பதைக் கொண்டே ராக்ஷஸராஜனான இராவணன்நடந்தவற்றையறிந்து அவர்களைப்பார்த்து, "இறந்துபோனார்களா? என் கட்டளையையிகழ்ந்து துறந்து நீங்கிப்போனார்களா? நடந்தது என்ன? சொல்லுங்கள்." என்று வாய்தோறும் நெருப்புமிழக் கேட்க, அவர்கள், "கொடுஞ்சினங் கொண்ட அரக்கர்கள் சோர்ந்ததுமில்லை, யுத்தகளத்தை யஞ்சியோடவுமில்லை, பொய்ச்சாக்ஷி சொன்னவர் குலமானது எப்படி யழியுமோ அப்படி அக்குரங்கினால் அழிந்துபோனார்கள்" என்று சொன்னார்கள். அதுகேட்டு அங்கே தன் ஏவலின்படி வந்திருந்த திக்பாலர்களை நோக்கி நாணும் சிந்தையனாய், 'இன்னதென்று நீங்கள் அறியீர்போலும்' என்று சினங்கொண்டான். அவர்கள் மறுமொழிகூறாமல் அச்சத்தால் வாய்புதைத்துநிற்க, வணங்காமுடிமன்னனான ராக்ஷஸன், "அரக்கரைக்கொன்றுவிட்டது ஓர் குரங்குஎன்னும் இக்

கொடுஞ்சொல்லைக் கேட்டுவந்தீர்களா? அல்லது கண்டுவந்தீர்களா? சொல்லுங்கள்" என, "நாங்கள் பக்கத்தேநின்று எங்கள் கண்களினாலேயே கண்டோம். அக்குரங்கு ஓர்மரத்தினாலேயே யடித்து அரக்கரையெல்லாம் உயிருண்டது" என்று சொன்னார்கள்.

அப்போது அங்கு கூப்பிய கையோடுநின்ற சம்புமாலிஎன்பவனை நோக்கி, "சேனையோடுஞ்சென்று வளைத்து அக்குரங்கைக் கயிற்றினாற்கட்டிக்கொண்டுவந்து என் சினத்தைத்தணிக்க வேண்டும்" என்று இராவணன் கட்டளையிட்டான். அவ்விதம் ஏவப்பெற்றதில் மனக்களிப்புடையவனாய் விடைபெற்றுக்கொண்டு, அவ்விலங்கைவேந்தனது போர்ச்சினமே யுருக்கொண்டு போவதுபோல அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, இடிபோல்முழங்கும் இருபதினாயிரம் யானைகளும், முத்துமாலைகட்டிய பதினாயிரந் தேர்களும் நாற்பதினாயிரம் குதிரைகளும், தோமரம், வேல், வாள்முதலிய ஆயுதங்களையேந்திய புலியேறுபோன்ற எண்பதினாயிரம்பதாதிகளும் தன்னைச் சூழ்ந்துவரப் பொன்மயமான அவ்விலங்கை தகர்ந்துபோனதினாலுண்டான தூளியானது மலையெல்லாம் மேருவாகவும், நகரமெல்லாம் சுவர்க்கமாகவும், தோன்றும்படி எழுந்து பொங்கி யெவ்விடத்தையும் மறைக்க அமரர்களுக்கும் அச்சமுண்டாம்படி பெரிய ஆரவாரத்தோடும் ஒரு பொன்னெடுந்தேர்மீதேறிக் கண்கள் நெருப்புப்போலக்காந்தக், கவசங்கள் வெயில்வீச, கோரதந்தங்கள் ஒளிவிடவருகின்ற வீரனை சம்புமாலியை, அரக்கர் வந்திலர் என்று எண்ணி வழியை நோக்கிக்கொண்டிருந்த ஹநுமான் கண்டு மகிழ்ந்து திக்கஜங்கள் செருக்குநீங்க, நமனும் மனம் நடுங்க, நக்ஷத்திரங்கள் உதிர, பூமியும் மலையும் பிளக்கத் தோளைக் கொட்டிக் கர்ஜித்தான்.

சம்புமாலிவதைப்படலம்.

அரக்கர்களும் கடல்போலமுழங்கிப், பிணக்குன்றமும் இரத்த வெள்ளமுமாக இருந்ததால் நேரான வழியின்றிப் பிணங்களை யிடறிக்கொண்டே வர, அவர்களை யணிவகுத்து ஹநுமானைச் சூழும்படி யேவித் தனது தேரைச் செலுத்திக்கொண்டு சம்பு மாலியும் வந்தான். மாருதியும், தனது மெய்யிலுள்ள உரோ மங்களே சேனையாகவும், வாலும் நகமுமே படைகளாகவுங் கொண்டு எதிர்த்துநின்றான். அதுகண்டு அரக்கர்கள் கொடுஞ் சினங்கொண்டு ஹநுமான்மீது ஆயுதங்களைப் பிரயோகித்தார் கள். வாயுஸூதன் அப்படைக்கலங்களையெல்லாம் கையாற் பிசைந்தெறிந்துவிட்டு அங்கேகிடந்ததோர் எழுவைக் கையி லெடுத்துக்கொண்டு எல்லாரையும் யுத்தகளத்தில் வீழ்ந்தவியும் படி புடைத்தான். கொடி, கொம்பு, கை, கால்முதலியவற்றை யிழந்து யானைகள் மாண்டன. சுவர், பார், நுகம், சக்கரம், கொடுஞ்சில், குதிரைமுதலியன நெரிபட்டுத் தேர்கள் குலைந் தன. கால் முறிந்துங் கழுத்தொடிந்துங் குதிரைகள் பல கீழ் வீழ்ந்திறந்தன. கரியைக் கரியாலும், பரியைப் பரியாலும், தேரைத்தேராலும், அரக்கரை அரக்கராலும், தாக்கிக்கொன்று துகைத்துத்தள்ளித் தடுக்கவொண்ணாத பிரளய மாருதமும், இருவினையைத் துடைத்தோரதுஅறிவும், வேசையர் மனமும், காற்றாடியும் போன்றவனாய் அங்கே மாண்டுகிடந்தவற்றின் தலைகள்தோறுந் திரிந்துகொண்டிருந்த ஹநுமான், கண்கள் நெருப்புச்சிந்தக் கோபத்தோடுந் தனியே நின்ற சம்புமாலியை நோக்கி, "ஏ, உடன்வந்தாரைக் காக்கமாட்டாத பேடியே! ஒரு தேரும் ஒரு ஆயுதமுங்கொண்டுநிற்கும் எளியவனான உன்னைக் கொல்வது நீதியன்று. ஆகையால் நீ ஓடிப்போ" என்று இரங்கிக் கூறினான். அதுகேட்டு, "உன் கருணை நன்று! நன்று!!"என நகைத்துக் கோபங்கொண்டவனாய்ச் சம்புமாலி தன் வில்லை

வளைத்துப்பாணங்களைப்பொழிய வாரம்பித்தான். ஐயன் அந்தச் சரங்களையெல்லாம் காற்ருற்சிதறும் மழைபோலச் சிதறிப்போம் படியாகத் தன்கையிலுள்ள எழுவினுல்விலக்கியடித்தான். சம்பு மாலியும் அதுகண்டு அவ்வெழுவை ஓரம்பால் துணித்தெறிந்து விட, மாருதி பின் தன் கையினுல் அவ்வரக்கன் விடும் பாணங் களைத் தடுத்துக்கொண்டே தேரினுட் புகுந்து அவன் கையி லிருந்த வில்லைப்பிடுங்கிக் கழுத்தில் மாட்டி யிழுக்கவே ஒரு பெரிய மலைபோலச் சம்புமாலி தலைகீழாகத் தரையில் வீழ்ந்து உயிர்துறந்தான். அதுகண்டு, அங்கிருந்த தேவர்களோடிப்போய் இராவணனையடைந்து தொண்டைவிக்கிச் சொல்லமாட்டாமல் நடுநடுங்கி விம்மிக்கொண்டு நின்ருர்கள். தசக்கிரீவன் அவர் களைக் கண்டு நகைத்து, "அஞ்சாமற் சொல்லுங்கள்" என, "ஐயனே! அரக்கர்கள் அவிந்துபோனுர்கள். சம்புமாலியும் அவ் வொருகுரங்கினு லுயிர்துறந்தான்" என்ருர்கள். என்றமாத்தி ரத்தில் மிகுந்த கோபங்கொண்டு கண்களில் இரத்தங் குமிழி யிட்டுப்பாய, 'அக்குரங்கை யானே பிடிப்பேன்' என்று எழுந் தான். அதுகண்டு சேனைத்தலைவர் ஐவர் அவ்விராவணனை ஸமாதானப்படுத்தி நிறுத்தினுர்கள்.

"ஏ, திறலோய்! நீ குரங்கின்மேற் செல்வாயாயின் அருவி நீங்கிய மலைபோல மதப்பெருக்கற்றிருந்த திக்கஜங்களும் மத நீரைப் பெருக்கும். கைலையுந்துயர்நீங்கும். திரிமூர்த்திகளும் முகமலர்ச்சிகொண்டு மகிழ்வார்கள். மேலும் உனக்காளின்மை யுந்தோற்றும். ஆகலின் எம்மைச் செல்லும்படி விடையளிக்க வேண்டும்' என்று சொல்லிப்பிரா ர்த்திக்க அரக்கனு மதற்கிசைந் தான். ஐம்பெரும்பூதங்களையு மொத்தவர்களான அச்சேனுபதி கள் ஐவரும் இராவணனை வணங்கி விடைபெற்று அவ்விடம்

பஞ்சசேனுபதிகள்வதைப்படலம்.

விட்டுப்பெயர்ந்து ஐம்பதினாயிரந்தேரும், ஐம்பதினாயிரம் யானையும், பதினாயிரம் குதிரையும், அக்குதிரையின் பதினெண்மடங்கான பதாதியுந் திரட்டிக்கொண்டு கடலைப்போல் முழங்கி யெழுந்துவருவதை மாருதிகண்டு, 'அரக்கர்கள் இற்றைப்பகலோடொழிந்தார்கள்' என்றெண்ணித் தன்தோளை நோக்கி மனங்களித்திருந்தான். அரக்கரும் நெருங்கிவந்து ஆகாயத்தை யளாவநின்ற ஹநுமான்மீது படைக்கலங்களை யெறிந்தார்கள். ஐயனும் அவற்றைத் தினவுதீரச் சொறிந்தனவென்று கருதி யிருக்க, அரக்கர்கள் மிகக்கோபங்கொண்டு நெருங்கிவந்தார்களாக, இனி யிவர்களை யதிவிரைவிற் கொல்வேனென்று ஹநுமான் ஓர் எழுவைக் கையிலேந்திக் கரிகளையும் புரவிகளையும் துணித்து வீழ்த்தினான். தேரால் யானைகளையும், யானையாற் குதிரைகளையும் எற்றித்தள்ளினான். பல தேர்களைப் பொடியாக்கினான். கரங்களாற்பிசைந்தும், காலால் உதைத்தும், மிதித்தும், தேய்த்தும் அரக்கர்கள் பலரைக்கொன்று பிணமாக்கினான். ஹநுமானால் வீசியெறியப்பட்டுக் கடலில்வீழ்ந்து இரத்தத்தை யுமிழ்ந்துநின்ற குதிரைகள் பல, வாயால் அக்கினியைக் கக்குகின்ற வடவைபோலக் காணப்பட்டன. அவ்வாறு வீழ்ந்தழுந்திய தேர்கள் பல சூரியனதுதேரை யொத்துத்தோன்றின. வாலாற்சுற்றி வீசப்பட்டுக் கடலிலே வீழ்ந்து சுழன்ற அரக்கர்கள் வாசுகியால் சுழன்ற மந்தரபர்வதத்தைப்போன்று காணப்பட்டார்கள். இவ்விதம் அரக்கர்கூட்டத்தையெல்லாங்கொன்று நீக்கக்கண்டு, மிக்க வலிபடைத்தவர்களான ஐவரும் எதிர்த்துச் சென்று ஆயிரம் ஆயிரமாக அம்புகளை ஹநுமான்மீதுதொடுத்து விட்டார்கள். அஞ்சனைமைந்தனும் அவற்றைக் கைகளால்தடுத்து விலக்கி அவ்வைவர்களிலொருவனை எழுவினாலடித்துக் கொன்றான். ஒருவனைத் தேரோடும் விண்ணிலெறிந்து ஆவிபோக்கி

ஞன். இருவரைத் தேரோடும் அந்தரத்தில் தூக்கிக்கொண் டெழுந்துபோய் வாலினுல் அவர்கள் தாளையும் தோளையும் வரிந்து இறுக்க அவர்கள் உயிர்நீங்கிக் கீழேவிழுந்து மாண்டார் கள். குன்றின்மேற்பாயுங் கோளரிபோலத் தலையின்மீது குதித் தொருவனைத் தேரோடும் புவியிற்சாய்த்து மாய்த்தான். இவ் வாறு உயிர்துறந்தஅவ்வைவர்களும் ஐம்புலன்களாக, ஹநுமான் அப்புலன்களை வென்ற நல்ல அறிவைப்போலத் தோன்றினுன். அதுகண்டு அங்குள்ளவர்களிற் சிலர் விரைவாயோடிச்சென்று யிராவணனைக் கிட்டி "சேனை யொழிந்தது. ஐவர் தலைவரும் தொலைந்தார்கள். போனவர்களில் யாங்களேபிழைத்துவந்தோம். அதுவும் போர்புரியாமலிருந்ததினுலேயே. அக்குரங்கு எல்லா ரையுங்கொன்று போருக்குவருவா ரொருவருமில்லையென்பதா கச் சோம்பியிருக்கின்றது." எனச் செவித்தொளை தீயும்படி சொன்ஞர்கள்.

கேட்டதும் கோபத்தீ பொங்கப் போருக்கெழுந்த இராவ ணனை அக்ஷகுமாரன் தடுத்து, "தந்தையே! அஷ்டதிக்கையும் வென்ற நீ ஒரு குரங்கின்மேற் செல்லுதல் சிறிதும் தகாது. அடி யேனுக்கு இவ்வேலையைக் கொடுக்கவேண்டும்: திரிநேத்திரதாரி யான ஈசனே இக்குரங்கின் வடிவுகொண்டு வந்தனன் என்று லும் யான் போய் நொடிப்போதில் பிடித்துக்கொண்டு வருகின் றேன்" என்று சொல்லி விடைபெற்றுக்கொண்டு கரைகடந்து

அக்ஷகுமாரன் வதைப்படலம்.

பொங்குகின்ற பிரளயசமுத்திரத்தை ப்போன்ற பெரிய சேனையோடும் புறப்பட்டான். அப்போது தேரிற்பூட்டிய குதிரைகள் தூங்கி வீழ்ந்தன. இடதுதோளுங் கண்ணுந்துடித்தன. மேகம் இரத் தத்தைச் சொரிந்தது. இரவிலும் காக்கைகள் கத்தின. ஆகாய மும் காரணமின்றி யிடித்தது. இவ்விதமான தீய சம்பவங்களை

யும் பொருட்படுத்தாமல்வருகின்ற அக்ஷகுமாரனை வாயுஸுதன் கண்டு வியப்பெய்தி நின்றான். அக்ஷன் அவ்வானரவீரனை நோக்கி, "இக்குரங்கா, அரக்கரையெல்லாங்கொன்றது" என்று நகைத்தலும் உடனிருந்த சாரதி, "அப்பா! வீணே யிகழாதே. நம் மன்னவனை வென்ற வாலி ஒரு குரங்குதான் என்பதை மனத்துட்கொண்டு செல்" என்று அறிவுறுத்தினான். விஷம் போலு மெய்யையுடைய அக்ஷன் அவ்வுரையைக் கேளானாய்க் 'குரங்கென்னுங் கருவே யுலகிலில்லாம லொழித்துவிடுகிறேன்' என்று சினந்து அஞ்சனைமஞ்சனைச் சூழ்ந்து ஆயுதங்களை வருஷித்தான். அப்படைக்கலங்களெல்லாம் மாருதிமேனியிற்பட்டு முறிந்தன. முட்டிய யானைகள் மறிந்தன. குதிரைகளும் தேரும் மடிந்தன. அரக்கரும் ஆவிபிரிந்து இறந்தார்கள். நன்று யுலர்ந்த காட்டில் நெருப்புப்பிடித்ததைப்போல வாயுஸுதன் அச்சேனையிற்புகுந்து நொடிப்போதிற் கொன்றுகுவித்த அரக்கர்களுக்கு ஓர் எல்லையில்லை. யானை, தேர், குதிரை முதலிய வெல்லாஞ் சின்னபின்னப்பட்டு இரத்தம் ஆறுகப்பெருக அந் நகரமானது யமனால் கொள்ளை கொள்ளப்பட்டதென்னும்படி ஐம்புலன்களையும் வென்றோனான ஹநுமான் ஊழிக்காலத்துத் தோன்றுஞ் சூரியன்போன்றவனாய் என்பில்லாத புழுவைப் போன்றவர்களான அவ்வரக்கர்குழுவையெல்லாந் தொலைத்து வீழ்த்தினான். இவ்விதம் தயிரையும், பிரளயஸமுத்திரத்தையும் போன்றவர்களாய்வந்த பெருவலியரக்கர்களை மாருதி மத்தையும் ஊழித்தீயையும்போன்றவனாய்நின்று மாய்க்கப்பின் அக்ஷன்மாத்திரம் தனியாய்நின்று விழியில் எரியுகப்பொங்கி ஹநுமான்மீது பாணங்களைவிட்டான். வாயுஸுதன் கையே படையாகக் கொண்டு அவன்தேரிற்சென்று அக்ஷனை வாலாற்பிணித்துப்பற்களாதிரவும், மேகத்தினின்று நக்ஷத்திரங்கள் விழுவனபோலக்

குண்டலம் முதலிய மணிகள் சிந்தவும், குடல்கள் சரியவும் தன் கையாற் குத்தித்தள்ளித் தரையோடுதரையாம்படித் தேய்த்து விட்டான். அதுகண்டு அரக்கர்கள்சிலர் பயமுற்று ரத்தவெள் ளத்தில் மூழ்கி மறைந்தார்கள். சிலர் படைகளைக் கைவிட்டுக் கண்டகண்ட திசையில் ஓட்டம்பிடித்தார்கள். சிலர் மீனாய்க் கடலிற் புகுந்தார்கள். சிலர் பசுவாய் வழிதோறும் மேய்ந்தார்கள். சிலர் பறவையானார்கள். சிலர் மறையவர் உருவை யுற்றார்கள். சிலர் மங்கைவடிவங்கொண்டு குழலைவகிர்ந்துநின்றார்கள். சிலர், "ஐயா! நின்சரண்' என்று சரணம்புகுந்தார்கள். சிலர் தமது தாரமும் சுற்றமுந் தம்மைத்தேடிவர, 'யாங்கள் வானவர்கள், உங்கள் உறவினரல்லோம்' என்று ஓடிப்போனார்கள். சிலர் வண்டாய்ப் பொழிலில் மறைந்தார்கள். சிலர் மயிரைக் கறுக் கும்படி செய்து கோரப்பற்களையு மொடித்துவிட்டு யாங்கள் மனிதர்களென்று முறையிட்டார்கள். இப்படியாக அரக்கர்க ளவிந்ததுகேட்டு அரக்கியர்கள் வாய்விட்டழுத பேரோசை அண்டத்தைமுட்ட எழுவதாயிற்று. மண்டோதரியும் தன்மகன் மாண்ட செய்தியைத்தெரிந்து கண்ணில்நீர்பெருகக், குழல் புழு தியிற்புரள, இராவணன் காலில்வந்து வீழ்ந்து வயிற்றிலடித்துக் கொண்டு அலறியழுதாள். அவ்விலங்கையிலுள்ள யாவரும் புலம்பிக் கதறினார்கள். மனமகிழ்ச்சிகொண்ட தேவர்களும் மற் றையோரைப்போல அக்கொடியோன் பாதத்தில் வீழ்ந்து அழு தார்கள்.

தம்பியான அக்ஷன் இறந்தான்என்ற கொடுஞ்சொல்லா னது தன் நெஞ்சைச்சுட மிகுந்த கோபங்கொண்டவனாய்க் கண் களில் நெருப்புச்சிந்தத் திரிபுராந்தகனை உருத்திரனைப்போ லும் பராக்கிரமத்தையுடையவனை இந்திரஜித்தானவன் பேய் கள்பூட்டியதோர் தேரின்மீதேறிப் பன்னீராயிரம் யானைகளும்,

பன்னீராயிரம் தேர்களும், கணக்கிலகப்படாத பல படைவீரர்களும், மற்றும்பல அரக்கர்களும் வந்து திரண்டு தன்னைச்சூழ்ந்துவரத் தம்பியை நினையுந்தோறும் நீரை வடிக்குங் கண்களையுடையவனாய், 'மாயக்குரங்கால் வீரனை என் தம்பியோ தேய்ந்தான்! எந்தையின் புகழன்றோ தேய்ந்தது!' என்று புலம்பிக்கொண்டே அதிவிரைவில் இராவணனிருந்த இடத்திற்குவந்து அவனது தாளிணைகளில் வீழ்ந்து புரண்டான். தம்பிக்கு இரங்கினான். கொடியோனான தசக்கிரீவனும் அவனையெடுத்து மார்புறத்தழுவிக்கொண்டு அழுதழுது சோர்ந்தான். இந்திரஜித்து அங்ஙனம் அழுதுசோர்கின்ற பிதாவைவிலக்கி, 'எந்தையே! நீ உறுதியொன்றும் அறியாமலொன்றைச்செய்கின்றாய்; பின் மனமுளைந்து வருந்துகின்றாய். குரங்கினது ஆற்றலின்தன்மையை நீ நன்குணர்ந்தபின்னும் 'நீங்கள் செல்லுங்கள், நீங்கள் செல்லுங்கள்' என்று மேலும் மேலும் செலுத்தி அரக்கர்கூட்டத்தைக்கொன்றவன் நீயேயன்றோ. கிங்கரர், சம்புமாலி, சேடிலா ஐவர் என்ற இவ்வரக்கர்களோடும் உடன்சென்ற பெருஞ்சேனையில் இங்கு ஒருவரேனு மீண்டாரில்லையென்னில் அக்குரங்கு சங்கரன், அயன், மால் என்பாரில் ஒருவரென்று எண்ணவேண்டாமோ" என்றுகூறித் திரும்பவும், "ஆயினும், ஐயனே! அக்குரங்கை நொடிப்போதில் நானே பிடித்துக்கொண்டுவருகிறேன். இனி நீ விசாரமொன்றும் படவேண்டாம். சுகமாய் இரு" என்று தேறுதல் செய்துவிட்டுப் புறப்பட்டான். கரியும், பரியும், தேரும், கணக்கற்ற நிருதர்களும் ஊழியிற்பெயர்கின்ற பெரியகடல்போலப்பொங்கி வர அச்சேனையின் மத்தியில் மேருவைப்போல வருகின்ற இந்திரஜித்தை மாருதி கண்டு, 'அமரின் ஆற்றல் நன்று!' என உவகைகொண்டிருந்தான். மேகநாதனும், பிணங்களாகிற மலை

பாசப்படலம்.

யும், இரத்தமாகிற பெரிய கடலும், வேல், வாள் முதலிய ஆயு தங்களாகிற நெடிய காட்டையும்பெற்று மற்ருேர் உலகமேபோ லத்தோற்றுகின்ற அப்போர்க்களத்தைப்பார்த்து மனங்கலங்கி, ‘இத்தனைபெயரையுங் கொன்றது இந்த ஒரே குரங்கு’ என் னின் ஸ்ரீராமன் வந்தெதிர்க்கும்போது எந்தப் படையைக் கொண்டு வெல்லப்போகின்ருேம்?’ என்று அதைரியமுற்று, ‘சூர்ப்பணகைக்குவந்த மானக்கேடும், கரனுக்குநேர்ந்த நாசமும், தம்பியிறந்த பெருந்துயரும், பிறவும் மானிடர் இருவராலும், வானரம் ஒன்றினுலும் உண்டானதென்னின் என்வீரம் அம்ம, நிரம்பவும் அழகாயிருக்கிறது!’ என்று வியந்து பிணக்குவடு இடறச்சென்று அங்கே தேய்ப்புண்டுகிடந்த அக்ஷனது யாக் கையைக்கண்டு கையிற்பிடித்த வில்லுக் கீழேவிழக் கண்களில் அருவிபோல் நீர்பெருகக் கீழ்வீழ்ந்து கதறி, ‘உன் தந்தையின் வெம்மையைக்கருதிக் கூற்றுவனும் உயிரைக் கவரான். மற்றை யோரும் அஞ்சுவார். இப்படியிருக்க என் ஐயனே! எங்களைப் பிரிந்து எவ்வுலகிற்சென்று ஒளித்தாய்’ என்றுசொல்லிப்புலம்பி யறிவழிந்தான். பின் சினமென்கின்ற மூண்ட பெரிய நெருப் பானது அத்துயரத்தைத்தணிக்கத் திரும்பவுந் தேர்மீதேறிவரு கின்ற இந்திரஜித்தை வாதாத்மஜன் கண்டு, ‘இக்காளை யென் கையால் ஒழிந்தானுயின் அதுவே அவ்விராவணனது முடிவு மாகும். இனி நாம் பிழையோமென எண்ணி ஜானகியையும் விட்டுவிடுவான். அரக்கரும் வெம்மை தீர்வார். இவனுல் வரும் ஊதியம் இதுவொன்றுமட்டுமோ? இவனைக்கொல்லின் இந்திரன் துயர்நீங்கிக் களிப்பான். அரக்கர்குடியும் பாழாகும். இராவண னையும் வேரோடு தொலைத்துவிடுவேன்’ என்று கருதியிருந் தான். அக்காலை அரக்கர்களும் நெருங்கிப்பெரும்போர் தொடங் கினுர்களாக, வாயுஸூதன் ஒரு பெரிய மராமரத்தைக் கையி

லெடுத்துக்கொண்டு புகுந்து எல்லாரையுந் தாக்கினான். உதை யுண்டும், மிதியுண்டும், புதையுண்டும், வதையுண்டும் யானைகள் மறிந்து புரண்டன. இடிந்தும், ஒடிந்தும், முறிந்தும் தேர்க் குலங்கள் பூமியிற்படிந்தன. தலையுங், காலுங், கழுத்தும் ஒடிந்து குதிரைகள் சாய்ந்தன. பிடிபட்டும், ஒடிபட்டும், கடிபட்டும், அடிபட்டும், அரக்கர்கள் அவிந்தார்கள். நிருதர்விடுத்த படைக் கலங்களோ ஹநுமானை யொன்றுஞ்செய்யாமல் திசைதோறுந் தெறித்து வீழ்ந்தன. இவ்விதம் தேரும், யானையும், புரவியும், அரக்கருந் தகர்ந்து பாரில் வீழ்தலும் தான்மாத்திரம் தனியாய் நின்ற இந்திரஜித்து கோபமும் சிரிப்பும் விளங்க வாரும் வாரும் என்றழைக்கின்ற மாருதியை யெதிர்த்துவந்து குணத்தொனி செய்தான். ஹநுமானும் அண்டம் வெடிக்கும்படி புஜங்களைக் கொட்டிக் கர்ஜித்தான். மேகநாதன், "உன் வாழ்நாட்கெல்லை இன்றோடு தீர்ந்தது" என்றுசொல்லி வச்சிரத்திலும் வலியன வான பல பாணங்களை மாருதி தலையிலும் மார்பிலும் தைக்கும் படி விடுத்தான். கபிநாயகன் ஸ்ரீ ரகுவீரனது புகழ்போல வானை முட்டும் ஓர் வடிவெடுத்துக்கொண்டு தன்கைகளால் அப்பாணங் களைத் திரும்பிப்போய் விழும்படிவீசியடித்து இந்திரஜித்தினது சாரதியையும் பேய்களையும் தரையில் விழும்படி அறைந்து கொன்று அவனையும் ஒருபெரியமரத்தால் மணிமுடியைநோக்கிச் சுழற்றியடித்தான். அடித்தலும் மலையருவிபோல் இரத்தம் பெருகக் கீழேவிழுந்த மேகநாதன் மூர்ச்சைபோய்ப் பிறகு சிறிது தெளிந்து ஆயிரக்கணக்காகப் பல கணைகளை எய்தான். வானரவீரன் அவற்றை இலக்ஷியம் பண்ணுதவனாகத்தானே அதி விரைவிற்சென்று இந்திரஜித்தைத் தேரோடுமெடுத்து ஆகாசத்தில் வீசியெறிந்து அத்தேர் பூமியில் விழுவதற்குள்ளாக விண்ணிற்சென்று அத்தேர்க்குலம் யாவையுஞ் சிதையும்படி

உதைத்துப் பொடியாக்கினன். மேகநாதன், ஏறுவதற்குத் தேர் ஒன்றுமில்லாதவனாய் வலியொடுங்கி மிகச் சினங்கொண்டு கடைசியாக ப்ரஹ்மாஸ்திரத்தை ஹநுமான் மீது பிரயோகித்தான். அந்த அஸ்திரம் பெரிய பாம்பின்வடிவத்தைக்கொண்டு கருடனுந் துணுக்கங்கொள்ளும்படியாகச் சுற்றிப்பிணித்துத் திருகவே மாருதி இராகுவோடுசாயுஞ் சந்திரனேவென்னும்படி பூமியில் திடீரென விழுந்தான். அங்ஙனம் விழுந்த கபிசிரேஷ்டன் 'இது ப்ரஹ்மாஸ்திரம் இதை யவமதிக்கக்கூடாது' என்று கருதிக் கண்களை மூடிக்கொண்டிருந்தான். அரக்கனும் குரங்கின்வலி ஓய்ந்தது எனக் கிட்ட நெருங்கினன். உயிரிலாமை கொண்டு ஒதுங்கிநின்ற மற்றை அரக்கர்களும் சமீபத்தில்வந்து அவ்வரவைப்பற்றி யிழுத்தார்கள், வைதார்கள், கூச்சலிட்டார்கள். மாருதியும் பூர்வம் வர்சுகியால் சுற்றப்பட்ட மேருபர்வதம் போலச் சென்றான். இலங்கையிலுள்ள மைந்தரும், மகளிரும் வந்துகூடி யிரைச்சலிட்டுக் களித்தார்கள். சுருங்கச்சொல்லின் இந்திரனைப் பிடித்துவந்தநாளைப்போல அவ்விலங்கை அன்று கனத்தபாடு பட்டது.

'எய்யுங்கள், வெட்டுங்கள், தலையைக்கொய்யுங்கள், குடலைக்கூறுகூறாகச் செய்யுங்கள், கொல்லுங்கள், தின்னுங்கள், இவன் பிழைத்தால் அப்புறம் நமக்கு உயிரில்லை' யென்று ஓதினார்பலர். 'இவனை ஆயுதங்களாற்கொல்லவொண்ணாது, கடலில் தள்ளுங்கள், இல்லையேல் நெருப்பைவைத்துக் கொளுத்துங்கள், என்றார்பலர். 'இந்தப்பையலை இத்தனைப்போது வைத்திருக்கலாமா' என்று மொய்த்துக் கொலைசெய்யமுயன்றார்சிலர்.

பிணிவீடுபடலம். 'எந்தையை, தம்பியை, தமயனைத் தந்துபோ'வெனத் தடுத்தார்பலர். 'இவன் தேவர் ஆக்ஞையால் வந்தவன்' என்று உயிர்கொள்ள அஞ்சினர் பலர். 'ஒருநாளும்பிரி

யாத எங்கள் நாயகர்களைப் பிரிந்தோம். இனி யாங்கள் இவன் தலையைப் போக்கினாலல்லாமல் தாலியை வாங்கமாட்டோம்' என்று அழுதார்கள் மங்கையர்பலர். சிலர் இரைதற்குப்பயந்து வாயடங்கினார்கள். சிலர் ஹநுமானது போர்த்தொழிலைப் புகழ்ந்தார்கள். சிலர் பார்க்கப்பார்க்கப் பயங்கொண்டவர்களாய் ஊர்ப்புறத்தே யோடியொளித்தார்கள். சிலர் 'பாம்பு தன்னைக் கட்டியிருப்பதைப் பூமாலையாற்கட்டியிருப்பதாக மதித்து இவன் முகமலர்ச்சிகொண்டு தோன்றுகின்றான். ஆகையால் தீர யோஜித்து ஒன்றைச் செய்யுங்கள். இன்றேல் பழுதாகவந்து முடியும்' என்று விளம்பினார்கள். சிலர் 'அரக்கரைக்கொல்ல அந்தகன் இவ்வானரரூபமாக வந்தானோ' என்றார்கள். 'ஸீதையினது கற்பின் பெருமையால் கைலாஸபதிதான் இவ்விலங்கையை யழிக்கக் குரங்காகவந்துதோன்றினான்' என்றார் பலர். இவன் நாகத்தாற் கட்டுப்படவில்லை. ஏதோ எண்ணங்கொண்டு வருகிறானெனத் தெரிந்து, 'ஐயனே! எம்மைக் கோபியாமல் மகிழ்வோடு காக்கவேண்டும்' என்று தொழுதார் பலர். 'திருமாலும் நான்முகனும் தம் உருவைமாற்றி இக்குரங்காக ஒருவடிவத்தைப் பெற்றுவந்திருக்கின்றார்கள்' என்றார் பலர். இவ்வாறு அரக்கியரும் அரக்கரும் பற்பலவிதமாகக் கூடிப்பேசிக்கொண்டிருக்கப் பெருவலிபடைத்த ஐம்பதினாயிரம் ராக்ஷஸர்கள் ஹநுமானைப் பிணித்துள்ள பாம்பைப் பிடித்து இழுத்துச்சென்றார்கள். அப்போது அரக்கியரும் அரக்கருமல்லாத மற்றைய அரம்பைமாதர்களும், வித்தியாதர ஸ்திரீகளும், நாககன்னியர்களும் ஓயாமற் கண்ணீர்பெருக்கி யழுதுகொண்டிருந்தார்கள். ஸீதையின் மெலிவுநோக்கியோ, ஹநுமானைக்கண்டு இரங்கியோ, அறத்தின் தளர்ச்சியைப்பார்த்தோ, எதற்காக அழுதார்களோ யாம் அறியோம். இஃது இங்ஙனமாக, ப்ரஹ்மாஸ்திரத்தால் பிணிக்கப்

பட்ட ஹநுமான் அந்த அஸ்திரத்தை மீறிக்கொண்டு போக விரும்பாதவனும்ப் பின் வருமாறு யோஜிக்கலானான்:—"என் பிதாவான வாயுபகவானது அருளாலும், ஸ்ரீராகவனது திருவடியைச் சிந்தைசெய்கின்ற நலத்தாலும், தேவர் கொடுத்த வரத்தாலும் இப்பாசத்தை நீக்கிப்போக எனக்குச்சக்தியுண்டு, இருந்தாலும் அது ஒழுங்கன்று. இராவணன்பாற்சென்று மந்திரிகளும், பெரியோர்களும் அறியும்படி நீதியையெடுத்துச் சொன்னால் ஒருவேளை மனமிளகி ஸீதையை விட்டுவிடவுங் கூடும். தவிர, அவனுக்குத் துணையாக இருப்பவர்களது எல்லையுந்தெரியும், கொடியோனது நிலைமையையும் மனத்தையும் நன்றாக இன்னதென்று அறியலாம். வாலி மாண்டதும், மராமரம் தொளைபட்டதும், சேனையின் மிகுதியும், சுக்கிரீவன் பராக்கிரமும் மேன்மையும் சொன்னால் அவனது மனத்தில் சுரீரெனத்தைக்காமலிராது. ஆகையால் இராவணன்பாற்போதலே காரியம்" என்று இவ்வாறு யோஜித்துச்சென்றான். இந்திரஜித்தும் கட்டுண்ட விருஷபம்போன்ற வானரவீரனைப் பிதாவான தசக்கிரீவன்பாற் கொண்டுபோயினான். இதற்குள் தூதுவர் சிலர் ஓடிச்சென்று இராவணனைத் தொழுது, "மன்னா! நின்புதல்வன் அக்குரங்கைப்பிடித்திட்டான்." என்று மொழிய அவ்வார்த்தையைக்கேட்டு மகிழ்ந்து அவன் அத்தூதர்களுக்குத் தன் மார்பிலணிந்திருந்ததோர் ஹாரத்தைப்பரிசாகக்கொடுத்து, "நீங்கள் சீக்கிரம் ஓடிச்சென்று அக்குரங்கைக் கொல்லாமற் கொண்டு வரும்படி யான் கட்டளையிட்டதாகச்சொல்லுங்கள்" என்றான். தூதவரும் விரைவிற்போய் இராவணனது ஆக்ஞையை இந்திரஜித்துக்குத் தெரிவித்தார்கள். இது இங்ஙனமாக, சோலையையழித்து அரக்கரையுந் தொலைத்தான் என்று மகிழ்ந்திருந்த மைதிலி மாருதிக்கு நேர்ந்த விபத்தைக்கேட்டு வேடன் கையில்

தன் குஞ்சைப் பறிகொடுத்த அன்னம்போலக் கலங்கி "கலை யெல்லாங் கற்றுண்ட நீ ஒரு கள்ளவரக்கனுல பற்றுண்டாய் இதுவோ அறத்தின் பான்மை" என்றும், 'ஆழியைக் காட்டி என் ஆருயிரைக் காட்டிய நீ இப்போது உன் வரைப்புயத்தின் வலிமையைக் காட்டி, நீங்காத பழியைப் பூட்டிவிட்டாயே' என் றும், 'கண்டுபோன நீ மார்க்கத்தைக்காட்ட ஸ்ரீ ரகுவீரர்கள் இங்கே வந்து அரக்கர்களையெல்லாம் போரில் மாய்த்து என்னை யழைத்துப்போவார்கள் என்று எண்ணியிருந்தேனே. ஆருயிர் தந்த என் அப்பனே! அதைக் கெடுத்துவிட்டாயே' என்றும் இவ்விதமாகவெல்லாஞ் சொல்லித் தன் கன்று பிடிபடத் தீங்கு றுந் தாய்போலத் தளர்ந்து மயங்கினுள். இங்கே பெருந்தகை யோனுன ஹநுமானைப் பிணித்திட்ட இந்திரஜித்தானவன் தன் அரிய தவப்பயனுல் திரிலோகாதிபதியாக விளங்கும் பிதா வாகிய இராவணனிருந்த கற்பகச்சோலைக்குப் போய்ச் சேர்ந் தான். மூவுலகிற்கும் மற்றொரு மதி தழைத்ததுபோலக் கண் கூசும்படியான காந்தியோடு கூடின வெண்கொற்றக்குடையா னது முன்னம் பூமியிலிருந்து வானத்தைப் பொருந்தும்படி யெடுத்தவெள்ளிமலையான கைலாஸமோவென்னும்படி விளங்க, திருமாலும், இந்திரனும், முக்கண்ணனும் விடுத்த ஆயுதங்க ளாற்பட்ட தழும்பும், மங்கைமார்களது நகக்குறியும் புஜங்களில் வயங்க, செம்பட்டமயிராகிய ஜ்வாலையையும் கோபத்தோடு விடு கிற சுவாசமாகிய பெரிய புகையையும் பெற்றுத் தென்றிசை யிலு முண்டானதோர் வடவாமுகாக்னியோ, திசைதோறும் திசைதோறும் தனது தலைகளைச் செலுத்தி அரசுவீற்றிருக்கும் ஸர்ப்பராஜனே, மேருவைப் பொன்முடியாகச் சூடிக்கொண்டு விளங்கும் கரியஸாகரமோ, இந்துவாகிற வெண்கொற்றக்குடை நிழலின்கீழ் நக்ஷத்திரங்களாகிற மணிவடங்களையும், செவ்

வானமாகிற பீதாம்பரத்தையுந் தரித்துக்கொண்டு வீற்றிருக்கும் இரவேயோஎன்று ஸந்தேகிக்கும்படி திசைகளில்கண்ணைத் திருப்பும்போதெல்லாம் அத்திசையிலுள்ள பாலகர்களுக்கும், கஜங்களுக்கும், ஆதிசேஷன், த்ருவன் என்கிற மற்றை யிருவர்க்கும் பெரிய அச்சம் பிறக்க, ஒன்றான ஸ்ரீ ராகவனது தேவியாகிய ஸீதாபிராட்டியைக் கண்டபின்பு நாகலோகம் முதல் பிர்ம்மலோகபரியந்தமுள்ள லோகங்களில்வாழும் அழகிய மாதர்களெல்லாரும் புருஷர்கள்போன்று அவனது கண்களுக்கு விருப்பமில்லாதவர்களாகத் தோன்றிப் புடைசூழ்ந்துநிற்க, வானரங்களும், வானவர்களில் ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களும், மனிதர்களும், ரிஷிகளுமாகிய சிலர் நீங்கலாக மற்றையோரனைவரும் அரக்கர் கணங்களோடும் வந்து சுற்றிக்கொண்டிருக்க, அரம்பைமங்கையர்கள் அமிர்தம்போன்ற பாடல்களைச் செவிதோறும் வழங்க, தனது ஆடலைக் காணின் அருந்தவம்புரியும் முனிவர்களேயாயினும் வீட்டின்பத்தை வேண்டாமல் தன்மேல் மனந்திரும்பச் செய்கின்ற மேனகையின்மீது நகைவிளங்க, ஊடினார் முகத்திலுண்டாகும் அமிர்தத்தை ஒரு முகமுண்ண, கூடினார் முகத்திலுண்டாகும் அமிர்தத்தை ஒரு முகங்குடிக்க, பாடினார் முகத்திலுண்டாகும் அமிர்தத்தை ஒரு முகம் பருக, ஆடினார் முகத்திலுண்டாகும் அமிர்தத்தை ஒரு முகம் அருந்த, ஒருமுகம் தேவரோடும் இருந்து அரசுசெலுத்த, ஒருமுகம் ஆசார்யர், அமாத்தியர் சேனாபதிகளென்கிற மூவரோடும் பெரிய ஆலோசனையைச் செய்ய, ஒரு முகம் தீய நினைவுகளைப் பயில, ஒரு முகம் ஜானகியினது உருவெளியோடு பொருந்த, வைதேகியின் கற்பென்னுங்கடலை நீந்திக் கரையேறுவது என்றென்று ஒரு முகம் நினைய, ஒரு முகம் மங்கையர்களேந்திக்கொண்டு இருக்கின்ற கண்ணாடியில் அழகுபார்க்க, ஜானகியின்மீது மனத்தைச்

செலுத்திவிட்டானெனத் தெரிந்து வெம்பி யுயிரழிந்து அழு கின்ற மாதர்களது கண்களாகிற வேல் தோள்தோறும் தாக்க, தற்காலம் விரோதமான மகரந்தத்தேனோடுபடிந்து, மாதர்களது ஸ்தனபாரங்களிற்பூசியுள்ள சந்தனத்தோடு கூடிக்கலந்து மெது வாக மணந்துவருகின்ற சீதளமான இளந்தென்றலானது அழி வையுண்டுபண்ணும் கொடிய விஷத்தைப்போலத் தேகத்திலே வந்து நுழைய, மடந்தையர்களது முகமாகிற தாமரைகளுக்குச் சூரியனைப்போன்றவனாயும், வானவர், தானவர் என்கின்ற இவர் களுடைய கைகளாகிற கணக்கற்றதாமரைகளுக்குச் சந்திரனைப் போன்றவனாயும் வீற்றிருந்த ராக்ஷஸ ராஜேந்திரனான இரா வணனை மாருதி நேரே கண்டான். கரியதோர் நாகத்தைக் கண்ட கருடனிலும் அதிகமாகக் கனன்றான். "தோளின்மேல் இறுகப்பிணித்துக் கிடக்கின்ற நாகத்தை உதறிவிட்டுக் கொடிய விஷம்போல இராவணன்மேற் பாய்ந்து கொல்வேன்" என்று உருத்தான். "உறங்[illegible]ங்காலத்தில் கொல்லுதல் குற்றமாமென்று ஒழிந்தேன். இப்போது இவன் மணியாசனத்தி லிருக்கப்பெற் றேன். பலவிதஞ் சிந்திப்பதேன். இவன் தலையையெல்லாம் உருட்டித்தள்ளித் தருமம் என்கின்ற பூங்கொடி படர்தற்கு ஓர் கொழு கொம்புபோல விளங்கும் ஸீதையை மீட்டுக்கொண்டு போவேன். வீரனது தேவியைச் சிறையிருக்கக்கண்ட தேவர், தானவர்முதலியோரது கண்பார்க்கவே இந்தப் பாவியினது முடித்தலைகளைக் கொய்யேனாயின் பிறகு நான் செய்யும் வீரச் செய்கை என்ன இருக்கின்றது? கொடிய அரக்கனைக் கண்டு சில வார்த்தைகளையும் பேசிவிட்டு உயிரோடு செல்வதாயின் வசையே பலனாக ஸித்திக்கும். இவனோடு எதிர்த்துநின்று வெல் லமாட்டாமல் உயிர் துறந்தபோதிலும் புகழ்உண்டாகும்" என்று இவ்வாறு ஆலோசனை செய்து, 'குன்றின்மேற் பாயுங் கோளரி

போல ஓர் குதியிற் பாய்ந்து செல்வேன்' என்று சிந்தித்துப் பின் 'இது காரியமன்று' என நினைக்கலாயினான். "இவனோ நாம் கொல்லக்கூடாதபடி வரத்தைப் பெற்றிருக்கின்றான். மிக்க வலிபடைத்தவனான இவனை ஸ்ரீரகுவீரன் வென்றால் வெல்லலாம். மற்றையோரும் வெல்வரோ? என்னையும் இவன் வெல்லமுடியாது. இவனையும் நான் வெல்ல முடியாது. வீணுக்குக் காலங்கள்மாத்திரம் கழியும். ஆதலால் இவனோடும் போர்த்தொழில் தொடங்குவது தகுதியன்று. மேலும், 'ஏழு லோகங்களும் இன்பமுறும்படி இராவணனுடைய தலைகளைப் பூமியிற் புரட்டுவேன். இது நிச்சயம்.' என்று ஸ்ரீராகவன் அருளிச்செய்த வார்த்தையு மொன்றிருக்கின்றது. தவிரவும், 'இன்னும் ஒரு மாதந்தான் நான் பிராணனை வைத்துக்கொண் டிருப்பேன்' என்பதாக தேவநாயகன் ஆணையாகக் கூறிய வைதேகியும் நான் அநாவசியமாக இங்கே போரிற் காலத்தைப் போக்கும்பக்ஷத்தில் உயிர்துறந்துவிடுவாள் என்பதும் வாஸ்தவமான விஷயம். ஆதலால் அமர்த்தொழில் புரிதல் அழகானதன்று. தூதனுக்குந் தன்மையே தூய்தானது.' என்று எண்ணியவனாய் வேதநாயகன் தனித்துணைவனான மாருதி அக்கொடிய இராவணன்பாற்சென்றான். இந்திரஜித்து ஹநுமானை இழுத்துக்கொண்டுபோய் வாள்போலுங் கண்களையுடையவர்களான அழகிய பல தேவியர்களின்மத்தியிலிருந்த பிதாவான தசகண்டனுக்குக் காட்டி, 'கண்டோர்கள் சிவனென்றும் செங்கண்மாலென்றுஞ் சொல்லும்படி செய்தவனான வானரவீரன் இவன்தான்' என்றுகூறி வணங்கினான். இராவணன் வாதாத்மஜனைக்கண்டதும் கண்களில் நெருப்புப்பொறி பறந்து ஹநுமானது மெய்யின்மேலுள்ள மயிர்களைப் பொசுக்க, சுவாசத்தோடு புகையெழுந்து பொங்க, மிக்க சினங்கொண்டு கூற்று

வன்போன்றவனாய், "நீ யார்? இங்கே வந்த காரியமென்ன? சக்ரபாணியோ, வஜ்ரபாணியோ, சூலபாணியோ, பிர்ம்மாவோ, அல்லது பூமியைத் தாங்கும் ஆதிசேஷனோ, பேரையும் உரு வத்தையும் மறைத்துப் போர்செய்து இலங்கையை அழிக்க வந்தாய்? உயிர்கவருங் காலன், முருகன், திக்பாலகர்கள் என்கின்ற இவர்களில் நீ யாவன்? அந்தணர் யாகத்தாற் செய்து விடுத்த வலிய பூதமோ? அன்றிக் கமலாஸனன் இந்நகர்முழுதையும் அழித்துப் பாழாக்கச்செய்த திகிரித் தெய்வமோ? நீ யார்? உன்னை யனுப்பியவர் யாவர்? சோர்வில்லாமற் சொல்" என்று சொல்ல மாருதியுஞ் சொல்லத் தொடங்கினன்:—"நீ கூறிய அனைவருமல்லேன். அற்ப பலமுடைய அவர்களது ஏவல்பூண்டு வந்தவனுமல்லேன். கமலமலர்போன்ற விசாலமான கண்களையுடைய ஒரு வில்வல்லவனது தூதன் யான். அவன் யாரெனில் உனது வலியையும், நீ மேனாள் இயற்றிய தவத்தையும், கூட்டிய பெரிய படையையும், தேவர்கள் உனக்குக் கொடுத்த வரங்களையும், நீ சங்கரனிடம் பெற்ற வாளையும், மற்றும் உனக்குள்ள எல்லாவற்றையும் தனது ஒரே பாணத்தால் அடியோடுந்தொலைக்க நிற்பவன். பூமியையெல்லாம் ஆண்டவனான தசரதசக்கரவர்த்தியின் திருக்குமாரன். வேதங்களினுடைய அறிவுக்கு எட்டாதவனும், அறிவின் வடிவமானவனும், முதலையாற் கவ்வப்பெற்று, 'முதலே!' என்றழைத்த கஜேந்திரனை ஏனென்று ஓடிவந்து காத்தவனும், ஆதிமத்யாந்தரகிதனும், காலங்களையெல்லாங் கடந்தவனுமான அவன் சூலத்தையும் சங்குசக்கரத்தையும், கமண்டலத்தையுந் துறந்து கையில் வில்லையேந்தித், தர்மத்தை நிலைநாட்டி, வைதிகமார்க்கத்தை யாவரும் அனுஷ்டிக்கும்படி பரவச்செய்து, துஷ்டர்களைத் தொலைத்து, ஸாதுக்களை ரக்ஷித்துப்போவதற்காகத் திருவயோத்தியில் வந்து அவ

தரித்திருக்கின்ருன். பிறவிநோய்க்கு மருந்தாகிய அந்த ஸ்ரீ ராகவனுக்கு நான் குற்றேவல் புரிகின்ற அடியவன். என் பெயர் ஹநுமானென்பார்கள். எங்கள் தேவனுகிய ஸ்ரீ ரகுவீரனது பத்னியைத் தேடிக்கொண்டு நான்குதிசையிலுஞ் சென்ற மன்னர்களில் தென்திசையில் வந்த சேனைக்கு மன்னவன் வாலியின் மைந்தனுன அங்கதன். அவனது ஏவல்தூதனுன யான் தனியாக இங்கே வந்தேன்." என்றலும், இலங்கைவேந்தன் மேகத்தினிடையில் தோன்றும் மின்னலோ என்னும்படி பற்கள்தோன்றச் சிரித்து, "ஏ, வாலியின் புத்திரன் விடுத்த தூதனே! சிநேகிதனுன வாலி சௌக்கியமாக இருக்கின்ருனு? அவன் அரசின்வாழ்க்கை நன்ருயிருக்கின்றதா?" என்றுகேட்க, நாயகன் தூதன் நகைத்து, "அரக்கனே! அஞ்சவேண்டாம். அவ்வுறவு மாண்டுபோயிற்று. எங்கும் தனது அரசைச் செலுத்திவந்த வாலி இனி மீளப்போவதில்லை. அதுமாத்திரமா, அவன் வாலும் மாய்ந்துபோயிற்று. நீலமேகம்போலுந் திருமேனியையுடையவனுன ஸ்ரீ ராகவனது கூரிய பாணத்தால் வாலி இறந்துபோனுன். எங்களுக்கு வேந்தன் இப்போது ஸுக்ரீவன். தேவியை நாடிக்கொண்டுவந்த ஸ்ரீ ராகவனுக்கு எங்கள் கோமான் பிராணஸ்நேகிதனுனுன். அதனுல் அச்செங்கண் வீரன் வாலியைக்கொன்று உருமையையும் அரசியற்செல்வத்தையுங்கொடுத்துப் பின் அக்கிஷ்கிந்தாபிரதேசத்திலேயே ஆறு மாதகாலந் தங்கியிருந்து பிறகு எங்களை நோக்கி, 'வைதேகியாரைத் தேடிவாருங்கள்' என்று கட்டளையிட யாங்கள் இங்கே வந்தோம்." என்று கூறக்கேட்டு, இராவணன், "தன் தமயனைக் கொல்ல வழிதேடிய துரோகியாகிய சிறிய தகப்பனுக்கு அன்போடு ஏவல்செய்யும் புத்திகெட்ட உங்கள் தலைவனா எனக்கு யாதுசொல்லி அனுப்பினுன். அஞ்சாமற்சொல்" என்று

சொல்லக் குணமிக்கோனை மாருதியுங்கூறத் தொடங்கினன். "தர்மத்தைச் சிறிதும் நோக்காமல் தீமையையே மிகுதியாகச் செய்து வாழ்நாளை வறிதாகக் கழிக்கின்றாய். நாசம்வந்துவிட்டதாயினும் இப்போதாவது சொல்வதைக்கேட்டு உயிர்பிழைப்பாய். தீமை யொருநாளும் நன்மையை வெல்லாது. இவ்வுண்மையை நீ மறந்து தூயவளான ஜானகியின்பால் தகாத எண்ணங் கொண்டு தர்மத்தை அடியோடுந் துடைக்கப் பார்க்கிறாய். முறை தவறிய காமச்செருக்கினால் எல்லாவற்றையும் மறந்து மதிமயங்கி ஒன்றைச்செய்பவர்கள் இறந்து இறந்து கீழான பல பிறப்பையடைந்து வருந்துவார்களேயல்லாமல் தர்மந் தவறிய அவர்கள் உயிரோடிருந்து வாழ்வதுமுண்டோ? உன்னிலும் பராக்கிரமசாலிகளாக உலகத்தையாண்ட அரசர்களில் எத்தனையோபேர் மாதர்பால்வைத்த காமத்தால் இருந்த இடந்தெரியாமலிறந்துபோயிருக்கிறார்கள். நன்றாயுணரின் பிறர்பொருளையுந் தாரத்தையும் இச்சிப்பதினுங்கொடிய கேடும் பெரிய பழியும் பிறிது எதுவுமேயில்லை. மேலும், ஆயிரந்தலையுங் கையும் பெற்றவனாயினும் ஸ்ரீரகுவீரனுக்கு முன்னிற்க முடியாது. ஈசன் உனக்குக்கொடுத்த வரங்கள் தவறினாலுந் தவறும். வேத நெறி தவறாத ஸ்ரீராகவன் பாணங்கள் ஒருநாளுந் தவறமாட்டா. ஆதலால், பெறற்கரிய செல்வத்தையும், பந்துக்களையும் இழந்து வீணே மாண்டுபோகாமல் வாழவிருப்பமிருந்தால் ஸீதையைக் கொடுத்துவிடு. இவ்விதம் உனக்குச் சொல்லும்படி சூரியன் புத்திரனை ஸுக்ரீவன் என்பால் சொல்லியனுப்பினான்." என்று அறிவுபுகட்டக் கேட்டவுடன், "எனக்கு ஒரு குரங்கா புத்திசொல்வது!" என்று நகைத்துக், "குரங்கின் வார்த்தையும் மனிதர்களின் பராக்கிரமும் இருக்கட்டும். தூதுவந்த நீ அரக்கரை ஏனடா கொன்றாய்?" என்று இராவணன்கேட்க, "காட்

டுவாரில்லாமையாற் சோலையை யழித்தேன். என்னைக் கொல்ல வந்தார்களை யொழித்தேன்.'' என்று மாருதியும் விடையளித்தான். அதைக்கேட்டமாத்திரத்தில் மிக்க சினங்கொண்டவனாய், 'இக்குரங்கைக் கொல்லுங்கள்' என்று இராவணன் கட்டளையிட்டான். கொலையாளிகளும் ஹநுமானைக் கொண்டு போகவே, விபீஷணன் அவர்களை, 'நில்லுங்கள்' என்று நிறுத்தித் தமயனைவணங்கி, 'அண்ணா! இக்கோபங் கூடாது. பிர்ம்மாவின் மரபில்வந்தஇறையவனை நீ 'தூதாகவந்தேன்' என்றபின்னுங் கொல்லலாமோ? வேதங்களெல்லாம் வல்ல உனக்கு இது என் தெரியாமற்போயிற்று. மாதரைக் கொன்றாலுங் கொல்லலாம். தூதரைக் கொல்லுதல் ஆகாது. மிக்க இழிவுமாகும். திரிமூர்த்திகளும் தேவர்களுங்கண்டு நகைப்பார்கள். வீரர்களாகையால் தசரதகுமாரர்கள் சூர்ப்பணகையை மூக்கையுங் காதையும் அரிந்து 'நடந்ததைப்போய்ச்சொல்' என்று கூறிவிட்டார்கள். நமது அரக்கர் சேனைப்பெருமையைக் கண்டுபோய்ச் சொல்லவொட்டாமல் இவனைக் கொன்றுவிடுவது யுக்தமன்று.'' என்று சொல்லித் தடுத்தான். அதுகேட்டு இராவணனும், "நன்று சொன்னாய். குற்றஞ்செய்தவனானாலும் நாம் இவனைக் கொல்லுதல் கூடாதுதான்'' என்று சொல்லி, 'இவன் வாலையடியோடுஞ்சுட்டு ஊரைச் சுற்றிவரச்செய்து எல்லையைக்கடக்க அடித்துவிட்டு வாருங்கள்' என்று கட்டளையிட்டான். உடனே பக்கத்தில் நின்றவர்களெல்லாரும் இரைத்தெழுந்து வந்தார்கள். அப்போது, பிர்ஹ்மாஸ்திரத்தோடிருக்கும்போது நெருப்பிடுகை கூடாதென்றுசொல்லி இந்திரஜித்து அந்த அஸ்திரத்தை விடுவித்தான். நொடிப்போதில் அரக்கர்களெல்லாம் வந்து கூடித் தாலிக்கயிறு ஒன்று நீங்கலாக மற்றைய ஊரிலுள்ள கயிற்றையெல்லாங் கொண்டுவந்து கட்டினார்கள். ஐயன் மாருதியும்

அவித்யையென்னும் பொய்யை மெய்போலக்கொண்டு நடிக்கும் யோகியைப் போன்றவனாய் அக்கட்டுக்கு வலியொடுங்கியவன் போலக் காட்டிக்கொண்டு மனங் களித்திருந்தான். அரக்கர்களும் மாருதியின் வாலில் துணியைச் சுற்றி எண்ணெயில் தோய்த்து நெருப்பைக் கொளுத்திவிட்டு, "நகரையுஞ்சோலையையும் அழித்து, அரக்கர்களைக் கொன்று ஸீதையோடு பேசி, மனிதர்களின் பராக்கிரமத்தைப் புகழ்ந்து கொண்டாடின குரங்கிற்கு நேர்ந்ததை, வந்துபாருங்கள், வந்துபாருங்கள்" என்று தெருக்கடோறும் சென்று பறை சாற்றினார்கள். இச்செய்தியை ஜாநகிக்கும் சிலர் ஓடிப்போய்ச் சொல்ல, அவள் கேட்டு விம்மித் தரையில் விழுந்தழுது, "தாய்போலுங் கருணையுடையவனை மாருதியை நாய்போலும் அரக்கர்கள் வருத்தக்கண்டும் நீ அருள் செய்யாதிருத்தல் தகுமா? உலகத்துக்கெல்லாம் சாக்ஷியாகவுள்ளவனே! நான் கற்பிற் சிறந்தவளாயின், அக்னியே! ஹநுமானைச் சுடாமலிருப்பாயாக." என்று அக்னிபகவானைக் குறித்துப் பிரார்த்தித்தாள். ஜாநகி இங்ஙனம் சொலலககேட்டு அக்னி பகவானும் மனந்திடுக்கிட்டான். உடனே மாருதி வாலும் குளிர்ந்தது. பலபல சொல்வதேன். வடவாமுகாக்னியும், பூமியிலுள்ள பௌமம் என்னும் அக்னியும், அல்லாத ஔதரியமென்னும் அக்னியும், முனிவர்காக்கின்ற காருகபத்யம் முதலிய மூவித அக்னியும் சிவனது நெற்றிக்கண்ணிலுள்ள அக்னியும், அவன் கையிலுள்ள மழுவாகிய அக்னியும் குளிர்ந்து தோன்றின. யக்ஞகுண்டங்களும், இடிகளும், சூரியமண்டலமுங் குளிர்ந்து தோன்றின. மீளாத நரகமுங்கூட அன்று குளிர்ந்து தோன்றிற்று. இவ்வாறாக, வாதாத்மஜன், கொழுந்துவிட்டெரிகின்ற போதும் நெருப்புத்தன்னைச் சுடாமலிருக்கின்ற தன்மையைநோக்கி இது ஜானகியின் கற்பினாலியன்றதெனத் தெரிந்து

மனங்களித்து அற்றையவ்விரவிலே தான்பாராத இடங்களை யெல்லாம் அரக்கர்களே காட்டக் கண்டுகொண்டே பொறிக ளின் பின்னே மறைந்துசெல்லும் அறிவைப்போன்றவனுய் ஊர்முழுதுஞ்சென்று, 'இனி வழுவுங்காலம் இதுதான்' என் றெண்ணி ஆகாசத்திலெழுந்தான். அரக்கர்களெல்லாரும் கீழே விழுந்து இறந்தார்கள். பல ஸர்ப்பங்களோடு விளங்கும் கருட னென்னும்படி தன் மெய்யின்மேற் சுற்றியுள்ள கயிற்ருேடும் ஆகாயத்தில் விளங்கிய ஹநுமான் ஸ்ரீராகவனைப் பன்முறை வாழ்த்தித் தன் வாலை அவ்விலங்கையின்மீது போகவிட்டான். அவ்வால், தனது இறைவனுன பரமசிவனது கைலையைப் பறித்த துஷ்டனது நகரத்தை யழிப்பேனெனச் செல்லும் மழுவைப்போலவும், முப்புரத்தையும் ஒரு கணப்போதிலெரிக் கும்படி முக்கணுன் எய்த பாணத்தைப்போலவும் விளங்கிற்று. யுகமுடிவில் உலகையெல்லாம் தன் நெற்றிக்கண்ணுலெரிக்கப் போகுஞ்செயலை முன்னரே பழகிக்கொள்வான்போல ருத்ராம் சமுடைய அவ்வானரவீரன் தன்வாலை அந்நகரில் நெடுந்தூரஞ் செல்லவிடுத்துப் பொன்னுலும் மணியாலும் தெய்வத்தச்சன் கைமுறைதிருந்தச்செய்த மனைகள்தோறும் தாவிச் சென்ருன். அக்னிதேவனும் நிருதர்கள்கூடி யாகங்களையெல்லாம் அழிப்ப தால் பசிகொண்டிருந்தவனுகையால் பரமசிவனுட்ட உலகத் தையெல்லாம் ஹவிஸாக உண்கின்ற காலத்தைப்போல அந்நக ரை நொடிப்போதில் தின்று தேக்கினுன்.

அக்கடுங்கனலானது மனைகள்தோறும் புகுந்து கொடி, விதானம், சுவர், தூண்முதலியவற்றையெல்லாந் தடவிக்கொ ளுத்த, அந்நெருப்புக்குப்பயந்து அரக்கர்களும் அரக்கியர்களும், வெளியே புறப்பட்டோடுவதும், பின், வீட்டிலுள்ள பிள்ளை முதலியவர்களை நினைந்து திரும்புவதுமாய் ஊசலாடி மன

முளைந்து கூக்குரலிட்டுக் கதறினார்கள். மாதர்கள் சிலர் பத்மராகமிழைத்த தங்கள் மாளிகை யெப்போதும் சிவந்த காந்தியை வீசிக்கொண் டிருப்பதனால் நெருப்புப்பிடித்ததை யறியாதவர்களாய் உள்ளேயே யிருந்து வருந்தினார்கள். புருஷர்களும், ஸ்திரீகளும் செம்பட்டமயிர்த் தலையினர்களாக இருப்பதால் நெருப்புப்பிடித்ததும் பிடியாததும் அறியாதவர்களாய் ஒருவர் தலையில் ஒருவர் ஜலத்தைக் கொண்டுவந்து சொரிந்தார்கள். மாயையானது நீங்கித் ததாகாரமான ஆத்ம ஸ்வரூபமானாற்போல வீட்டிலிருந்த நெருப்பும் ஹநுமானது வாலின் நெருப்போடு சேர்ந்து ஒன்றாக எரிய, மேலேயெழுந்த புகையானது உலகளந்த நெடுமாலின் கரிய மேனிபோல் விளங்கிற்று. நெருப்புப்பொறிகள் போய் விழுதலால் ஸமுத்திரத்திலுள்ள மீன்களெல்லாந் துடித்து வெந்து உயிர்சோர்ந்தன. மனைகளெல்லாம் உருகி யோடிக் கடலிற் பாய்ந்து நீண்ட தடிபோலத் திரண்டன. ஸமுத்திரம் உலை போலக் கொதித்து மறுகிற்று. ஜ்வாலையானது மேற்சென்று வீசுதலால் மேகங்களெல்லாங் கொதித்தன. சோலைகளெல்லாம் எரிந்து கரியாயின. குதிரைகளெல்லாம் பிடரிமயிர் எரிந்து மாய்ந்தன. கரிய யானைகளெல்லாம் மேல்தோலுரிந்து இந்திரனது ஐராவதம்போல வெண்ணிறமுற்று விளங்கின. தேர்களெல்லாம் உருளையோடு மொன்றாயுருகிக் கட்டியாய்த் திரண்டன. அரக்கியர் சிலர் 'நாயகர்கள் மற்கடத்தால் மாண்டார்கள். ஆதலால் நாம் வீட்டைவிட்டு வெளியிற் போகக் கூடாது' என்று கருதி யுள்ளேயேயிருந்து மாண்டார்கள். விண்ணுலகத்திற் செல்ல எழுந்த சிலர் புகையால் மூடப்பட்டுச் சோர்ந்து நெருப்பில்வீழ்ந்து மாண்டார்கள். மெய்யிலே நெருப்புப்பிடித்து வருத்தமுற்று வானிலோடிய மங்கையர் சிலர் காட்

ஊர்சுடுபடலம்.

டிலோடும் நீரென்று மயங்கிப் பேய்த்தேரில் (=கானல்ஜலம்) வீழ்ந்து மரித்தார்கள். மேலே யோங்கிய நெருப்பானது சந்திரனைக் கிட்டி யுருக்க அவன் மெய்யினின்று உகுத்த அமிர்தத்தால் உயிர்போன அரக்கர்கள் சிலர் ஆவிபெற்று எழுந்தார்கள். தீயினால் முற்றும் வெந்த மேகத்தினிடையில் கரியின் மத்தியில் உருகித் தோன்றும் பொற்றிரளைப்போலச் சூரியன் தோன்றினன். பஞ்சரத்தோடு கிளிகளெல்லாம் வெந்து சாய்ந்தன. பறவைகள் சில புகையைக் கடந்துபோகமாட்டாமல் வெருவியோடிப்போய்க் கடலில் வீழ்ந்து அருளில்லாத வஞ்சரைத் தஞ்சமென் றடைந்தவர்களைப் போல அங்குள்ள மீன்களால் விழுங்கப்பட்டு மாண்டன. கொழுநரைத் தழுவவேண்டுமென்னும் கொதிப்பால் கோதையர்சிலர் மேகத்திற்புகு மின்னலைப்போலப் புகையில் மறைந்தார்கள். நங்கையர் சிலர் தமது மாடங்கள் எரியக்கண்டு விண்ணிற் போய்ப் புகையால் மூடப்பட்டுத் திரையினுள்ளேவிளங்கும் சித்திரப்பாவைபோன்றவர்களாய்க் கலங்கினார்கள். மிக்க புகையானது எங்கும் பரவியெழுந்து கவிந்ததினால், கைலைக்கும் மற்றுள்ள மலைகளுக்கும், அன்னத்திற்கும் காக்கைக்கும், ஐராவதத்திற்கும் மற்றுள்ள யானைகளுக்கும் வேற்றுமை தெரியக்கூடாமலிருந்தது. கடுங்கனலால் மெய்கரிந்து தோலுரிந்து கடலிற்போய் விழும் ராக்ஷஸர்களுடையவும் ராக்ஷஸிகளுடையவுஞ் செம்பட்ட தலைமயிரானது எங்கேபார்த்தாலுந் தோன்றுதலால் அக்கடலானது தானும் நெருப்புப்பிடித்து வேகின்றதுபோலக் காணப்பட்டது. வில் வாள் முதலிய ஆயுதங்களெல்லா முருகிப் பழைய வடிவமொழிந்து இருப்புப் பாளங்களாக ஆயின. இவ்விதம் நீரை வற்றும்படி பருகி, நிலத்தையெல்லாம் உருக்கிச், சோலைகளைச் சுட்டு, மலைகளையெல்லாந் தணலாக்கி, ஊரையெல்லா மூடிய

வுமெரித்து அப்பெருந்தீ இராவணன் மனையிலும் புகுந்து கொளுத்தத் தொடங்கிற்று. அப்போது அரக்கனும் அவன் தேவிமார்களும் பிறரும் அழகிய புஷ்பக விமானத்தின்மேலேறி க்ஷணப்போதி லதைவிட்டு நீங்கிப் போனார்கள். அவிப்போ ரொருவருமில்லாமையால் மலைமேலுள்ள அவ்விலங்கையும் அதி விரைவில் வெந்து பாழாயிற்று. ஆகாயத்தில் சூரியன்போலப் புஷ்பக விமானத்திற் சென்ற இராவணன் தன் கண்ணெதிர்ப் பட்ட அரக்கர்களைச் சினந்துநோக்கி, "உலகமெல்லாம் எரியும் ஊழிக்காலந்தான் வந்துவிட்டதா? மற்றும் ஏதாயினு முண்டா? திடீரென நமதூரை அக்னி புகுந்து நாசப்படுத்தக் காரண மென்ன?" என்று கேட்கப் பெண்டுபிள்ளைகளும் பொருளும் போனவழி யின்னவென்று தெரியாமல் அழுதுகொண்டு திரிந்த அவ்வரக்கர்கள் கூப்பிய கையினர்களாய், 'சுவாமி, சமுத்திரத்தினும் நீண்டதான தன் வாலிலிட்ட தழலால் அக் குரங்கே இவ்விதம் சுட்டுக் கோட்டையைப் பரப்பிவிட்டது.' என, இராவணன் மனங்கொதித்து, "இன்று ஒரு புன்றொழிற் குரங்கின் வலியினால் இலங்கைவெந்து நீறெழுகின்றது. நெருப் புந் தின்றுதின்று தேக்கிடுகின்றது. இனித் தேவர்களுஞ் சிரிப் பார்கள். இராவணன் போர்வலி நன்று! நன்று!!" என்று சொல்லி நகைத்து, "அக்குரங்கை யோடிப்போவதற்கு முன் போய்ப்பிடியுங்கள்" என்று கட்டளையிட்டான். உடனே பக் கத்தேநின்ற வீரர்கள் எழுவர் மற்றும்பல அரக்கர்களோடுஞ் சென்று மாருதியைக்கண்டு, பற்றுங்கள், எற்றுங்கள், சுற்றுங் கள், முற்றுங்களென்று கூவிக்கொண்டு மிக்க சினத்தோடும் எதிர்ந்தார்கள். ஹநுமான் அவர்களையெல்லாம் தன் வாலால் வளைத்து ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கி யெடுத்து அதனால் மோதியடிக்கவே, ஆயுதங்களையும் ஆயுளையும் இழந்து பலர்

மாண்டார்கள். அவர்களுடைய மெய்யிற் பெருகிய இரத்தம் ஊரிலிட்ட நெருப்புத் தணியும்படி யாறாக ஓடிற்று. இறவாதொழிந்த அரக்கர்களெல்லாரும் மீண்டும் வந்து எதிர்க்க வாதாத்மஜன் கூற்றிலும் மும்மடங்கு அதிகனாய் அவர்களைக் கொன்றான். அப்படி ஐம்பதினாயிரம் ராக்ஷஸர்கள் இறந்தார்கள். மற்றையோர்கள் பயந்து கடலிலொளித்தார்கள். ஹநுமான் தன் வாலை அக்கடலில் தோய்க்கவே கொதிப்புத் தாங்கமாட்டாமல் பலர் இறந்தார்கள். உடனே வீரர் எழுவர்களும் முற்பட்டுப் போர் புரியவந்தார்கள். அவர்களையும் அஞ்சனைமைந்தன் அடித்துச் சாய்த்தான். இந்த ஸந்தர்ப்பத்தில் வித்தியாதரர்கள் சிலர் ஹநுமான்பாற்சென்று, 'ஜாநகி யிருந்த சோலையையும் அதன் புறத்தையும் தீ நெருங்கவில்லை'யென்று சொல்லக்கேட்டு மிக்க மகிழ்ச்சிகொண்டு மாருதி வைதேகியின் திருவடிகளைச்சென்று வணங்கினான். மைதிலியும் மனங்களித்து ஆசீர்வதிக்க, விடை பெற்றுக்கொண்டு வாதாத்மஜன் விசையாகப் புறப்பட்டான். அதுகண்ட சூரியன், 'இனி நாம் இங்கிருப்பின் கள்ள அரக்கர்கள் பிடித்து இகழ்ந்து உபத்ரவிப்பார்கள்' என்றெண்ணி மேல்கடலிற் போய் மறைந்தான்.

மீட்சிப்படலம்.

இனி விரைவில் நீங்கவேண்டுமென்னும் கருத்துக்கொண்டவனான ஹநுமான் பக்கத்திலுள்ளதோர் மலையை யடைந்து மிகப்பெரியதோர் திருவுருவத்தை யெடுத்துக்கொண்டு ஸ்ரீராகவனது திருவடிகளைத் தியானித்தபடியே ஆகாசத்திற் கிளம்பிச் சென்று மத்தியில் மைநாக பர்வதத்திற் சிறிது தங்கியிருந்து பின் நேராகத் தன் வரவை யெதிர்பார்த்துக் கொண்டு வானரவீரர்களிருக்கும் மலையில் வந்து குதித்தான். போனகாரியம் கைகூடிற்று என்று ஆநந்தங்கொண்டவர்களான அவ்வானரவீரர்கள் ஹநுமானைக் கண்டதும் தாய்

வரக் கண்ட பறவைக்குஞ்சுகளைப்போல உவகைகூர்ந்து சிலர் அழுதார்கள், சிலர் ஆர்த்தார்கள், சிலர் தொழுதார்கள், சிலர் ஓடித் துள்ளினார்கள், சிலர் அள்ளி விழுங்குவார்போல மொய்த்தார்கள், சிலர் சுற்றுந் தழுவினார்கள், சிலர் தோள்மேற் சுமந்து சென்றார்கள், சிலர் தேன் கிழங்கு காய்முதலிய அரிதிற்றேடியவற்றையுண்டு மெலிவு தீர்வாயெனக்கொண்டு வந்து தந்தார்கள், சிலர் ஹநுமானது சரீரத்தில் வாள், வேல்முதலிய ஆயுதங்களாலான புண்களை நோக்கி நோக்கி யுயிர் கரைந்தார்கள். ஹநுமான் அங்கதனையுஞ் சாம்பவானையும் வணங்கி மற்றையோர்க்குந் தக்கபடி மரியாதைசெய்து பின் 'ஸீதாதேவி யிங்குள்ளவர்களுக்கெல்லாம் க்ஷேமமுண்டாகட்டுமென்று ஆசி கூறினாள்' என்றலும் அவர்கள் கைகூப்பி வணங்கி மனமகிழ்ந்து 'எவீர! போனதுமுதல்வந்ததுவரைக்கும் நடந்தவற்றையெல்லாஞ் சொல்' என்றலும் மாருதியும் சவிஸ்தாரமாக உரைக்கக்கேட்டு உள்ளங்களித்து இனி விரைவிற்போய் ஸ்ரீராகவனுக்கு இதைத் தெரிவிக்கவேண்டுமென்று கருதி யாவரு மவ்விடத்தை விட்டு மதுவனத்தையடைந்து பலநாள் உணவின்றி வருந்தினவர்களானதால் அவ்வனத்தின் தேனை நுகர்ந்து ஒருவர்மேலொருவர் விழுவதும் தழுவுவதுமாய் விளையாடிக் களித்தார்கள். அது கண்டு பொறாத அவ்வனத்தின் காவலாளர்கள் இவ்விதம் இவர்கள் மதுவனத்தை யழிக்குஞ் செய்தியைத் ததிமுகனுக்குச் சொல்ல அவனும் மிக்க கோபங்கொண்டு வந்து 'நீயன்றோ மதுவனத்தை யழித்தவன்' என்று சொல்லி ஒரு கருங்கற்பாறையை அங்கதன்மேல் விட்டெறிய வாலி மைந்தன் அத்ததிமுகனைப் பிடித்துக்கட்டி இரத்தம் பெருகும்படிக் குத்தி 'நீ போய்ச் சுக்கிரீவனுக்குச் சொல்' என்று விடுக்க அவனும் மிக்க பயத்தோடும் அப்புறம் போயினான். இவர்கள் விஷயம்

இப்படியிருக்க, ஸ்ரீ ராகவன் துயர்க்கடலிலாழ்பவனாய்ச் சுக்கிரீவனை நோக்கிக், "குறித்தநாள் கடந்தது. ஸீதையைத் தேடிக்கொண்டு தென்றிசை சென்றவர்கள் இன்னும் வரவில்லை. மாண்டுபோனார்களோ? அல்லது அவர்களுக்கு என்ன நேர்ந்ததோ? ஒன்றுந்தெரியவில்லை. 'ஸீதையோ மாண்டுபோயினாள். அவள் இறந்த வார்த்தையைப்போய்ச் சொல்லுவதினும் நாம் பிராணனை விடுதல் நலம்' என்று உயிரை விட்டுவிட்டார்களோ? இன்றேல் தேடிக்கொண்டுதான் திரிகின்றார்களோ? அரக்கர்களோடு போர்புரிந்து அவிந்தார்களோ? சிறைப்பட்டுக் கிடக்கின்றார்களோ? இல்லையேல், 'குறித்த நாளில் போகவில்லையே' யென்று தவம்புரிகின்றார்களோ? விளம்புவாய்" என்றுரைத்து வருந்தியிருக்கையில் ததிமுகன் இரத்தம் பெருகுகின்ற தலையோடும் வந்துதோன்றி "ஏ, வானரேச! இன்று நானேயோடு மதுவனம் அழிந்தது' என்று கூறச் சுக்கிரீவன் அவனைநோக்கி, 'அப்படி யழித்தவர்கள் யாரெனக் கேட்கத் ததிமுகனும் நடந்தவற்றை யெடுத்துரைத்தான். சுக்கிரீவன் அவ்வார்த்தையைக் கேட்டு மகிழ்ந்து ஸ்ரீ ரகுவீரனை நோக்கிச் "சுவாமீ! மங்கையர்க்கரசியாரை யிவர்கள் கண்டார்கள். அம்மகிழ்ச்சியால் மதுவனத்தை யழித்தார்களென்பது இதனால் நன்கு விளங்குகின்றது." என்று மொழிந்து, ததிமுகனைப்பார்த்து, 'அப்பா! வாலி மைந்தன் இழிதொழில் புரிபவனல்லன். ஸ்ரீ ராகவனது பணியைத் தலைமேற்கொண்டு எங்குஞ்சென்று ஜானகியைக்கண்டு வந்திருக்கின்றான். ஆதலின் அவனை யாம் என்செய்வது? அன்றியும் அரசும் வாலியதாதலின் நீ போய் அவனையே சரணமாக அடை' என்று கூறி விடுத்தான். ததிமுகனும் விசையாகத் திரும்பிவந்து வாலிபுதல்வன் அடியில் வீழ்ந்து பணிந்து அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டு, "நீங்கள் விரைவிற் சென்று

புண்டரீகாக்ஷனது துயரத்தைத் தணிப்பீர்களாக" என்று பிரார்த்திக்க ஹநுமான் விடைபெற்றுக்கொண்டு முன்னதாகப் போய் ஸ்ரீராகவனை யடைந்து, "கண்டேன் கற்பினுக் கணியாகிய ஸீதையை. ஏ! லோகநாயகா! இனித் துயரத்தை யெல்லாம் விட்டுவிடப் பிரார்த்திக்கிறேன்" என்று விண்ணப்பஞ்செய்து திரும்பவும் லோகமாதாவாகிய ஸீதையின் இறப்பிறப்பு, பொறுமை, கற்புமுதலியவற்றின் சிறப்பையும், ஜானகி எப்போதும் ஸ்ரீராகவனையே நினைத்துக்கொண்டு வருந்துகின்ற தன்மையையும், ராவணன் இளையவன்கட்டிய பர்ணசாலையோடும் பெயர்த்து இலங்கையில் அசோகவனிகையில் சிறை வைத்திருக்குஞ் செய்தியையும், அரக்கியர் பலர் சூழ்ந்து காவலிருக்க, மத்தியில் கண்ணீர் வடித்து அழுதுகொண்டிருந்த ஸீதையைத் தான் சென்று கண்டதையும், அப்போது, இராவணன் அங்கே வந்து பிரார்த்தித்ததையும், மைதிலியார் சினங்கொண்டு அறிவு புகட்டியதையும், பின்னர் அவ்விராவணன் ஒரு அவதிநாளைக் குறிப்பிட்டுச் சென்றதையும், பின் வைதேகி ஒரு கொடியைத் தன் கழுத்தில் மாட்டி யுயிர்துறக்கத் துணிந்ததையும், அச்சமயத்தில் தான் ஸ்ரீராகவனது திருநாமத்தைச் சொல்லிக்கொண்டு எதிர்சென்று வணங்கி அடையாளங்களைச்சொல்லிக் கடைசியாகத் திருவாழியைக் கொடுத்ததையும், அம்மோதிரத்தைப் பிராட்டி வாங்கிக் கொங்கையிலும் தலையிலும் கண்களிலும் வைத்துக்கொண்டு அழுதுங், களித்தும், புலம்பியும் பல விதமான அவஸ்தைக்குள்ளானதையும், ஸ்ரீராகவன் நிலைமையைச் சொல்லக்கேட்டுப், பின் தன்னிலைமையை யெல்லாஞ் சொல்லித் தன்னை விடுத்ததையும் விளங்கவுரைத்துத் தன் துணியில் முடிந்து வைத்திருந்த மாமணிக் கரசாகிய சூடாமணியை யெடுத்து ஸ்ரீரகுவீரனிடங் கொடுத்தான்.

ஸ்ரீ ராகவன் அச்சூடாமணியைப்பெற்று, அதனை முன்னம் மிதிலா நகரத்தில் அக்னியின் முன்பாகப் பற்றிய ஜானகியினது மெல்லிய தளிர்க்கரமென்றே கொண்டு மனவெம்மை தீர்ந்து அளவிடற்கரிய ஆனந்தங்கொண்டான். அப்போது அங்கே வானரசேனையோடு அங்கதன் முதலியோர்களும் வந்து ஸ்ரீ ரகுவீரர்களையும் மகாராஜனையும் முறைப்படி வணங்கிப், போன காரியங் கைகூடிற்றென்னுங் கருத்தால் மனங்களித்து முகமலர்ச்சி கொண்டு விளங்கினார்கள். பின்னர் அருக்கன் மைந்தனான ஸுக்கிரீவன் ஸ்ரீ ராகவனைப் பணிந்து, "ஐயனே! வைதேகியார் காண்பதற்கு எளியளானார் என்றபின்னும் நாம் காலந்தாழ இன்னும் இங்கே யிருத்தல் தகுதியோ?" என்று சொல்ல, தாசரதி, "ஆயின் சேனைகளைத் திரட்டிக்கொண்டு எழுக" என்று கூறியருளினான். உடனே எழுபதுவெள்ளஞ் சேனையும் இருங்கே திரண்டு ஸமுத்திரம்போலப் பொங்கியெழுந்து தென்றிசையை மறைத்தன. அப்போது மாருதி ஸ்ரீ ரகுவீரனைக் கைகுவித்து வணங்கி, "புன்மொழிற் குரங்கென்று நினையாமல் என் தோளின்மேல் எழுந்தருளவேண்டும்" என்று பிரார்த்திக்கப் பெருமானும் அவ்வாறே யெழுந்தருளினான். "நிமலனே! நீயும் என் தோளின்மேல் ஏறுக" என்று வாய்புதைத்து இறைஞ்சிநின்ற வாலிகாதலனை அங்கதனது தோளில் இளைய பெருமாளும் எழுந்தருள அச்சேனை இலங்கைநோக்கிப் புறப்பட்டது. கருடவாகனத்திலும் விருஷபவாகனத்திலும் தோன்றும் திருமாலும், சங்கரனும் போன்றவர்களாய் ஸ்ரீ ராகவவீரர்களிருவரும் ஹநுமானையும் அங்கதனையும் வாகனமாகக் கொண்டு செல்வதை விண்ணுலகத்தவர்களான தேவர்கள் கண்டு மகிழ்ச்சி கூர்ந்து கற்பகமலரைச் சொரிந்து வாழ்த்தினார்கள்.





அங்குளீயகப்ரதானம்.

வன்றந்த வரிகொ ளுகம் வயங்கன லுமிழும் வாய
பொன்றந்த முழைக டோறும் புறத்துராய்ப் புரண்டு போவ
நின்றந்த மில்லா னூன்ற நெரிந்துகீ ழழுந்து நீலக்
குன்றந்தன் வயிறு கீறிப் பிதுங்கிய குடர்க ணான. 4

புகலரு முழையுட் டுஞ்சும் பொங்குளைச் சீயம் பொன்றி
யுகலருங் குருதி கக்கி யுள்ளுற நெரிந்த வூழி
னகலிரும் பரவை நாண வரற்றுறு குரல வாகிப்
பகலொளி கரப்ப வானை மறைத்தன பறவை யெல்லாம். 5

மொய்யுறு செவிக டாவி முதுகுற முறைகா றள்ள
மையறு விசும்பி னூடு நிமிர்ந்தவா லதிய மஞ்சின்
மெய்யுறத் தழீஇய மெல்லென் பிடியொடும் வெருவ லோடுங்
கையுற மரங்கள் சுற்றிப் பிளிறின களிநல் யானை. 6

பொன்பிறழ் சிமயக் கோடு பொடியுறப் பொறியுஞ் சிந்த
மின்பிறழ் குடுமிக் குன்றம் வெருவுற விரியும் வேலை
புன்புற மயிரும் பூவாக் கட்புலம் புறத்து நாற
வன்பறழ் வாயிற் கவ்வி வல்லிய மிரிந்த மாதோ. 7

தேக்குறு சிகரக் குன்றந் திரிந்துமெய் நெரிந்து சிந்தத்
தூக்குறு தோலர் வாளர் துரிதத்தி னெழுந்த தோற்றந்
தாக்குறு செருவி னேர்ந்தார் தாளற வீசத் தாவி
மேக்குற விசைத்தா ரென்னப் பொலிந்தனர் விஞ்சை வேந்தர். 8

தாரகை சுடர்கண் மேக மென்றிவை தவிரத் தாழ்ந்து
பாரிடை யழுந்து கின்ற படர்நெடும் பனிமாக் குன்றங்
கூருகிர்க் குவவுத் தோளான் கூம்பெனக் குமிழி பொங்க
வார்கலி யழுவத் தாழுங் கலமென லாயிற் றன்றே. 9

தாதுகு நறுமென் சந்தங் குங்குமங் குலிகந் தண்டேன்
போதுகு பொலந்தா தென்றித் தொடக்கத்த யாவும் பூசி
மீதுறு சுனைநீர் வீசு மருவிபோ யுலகின் வீழ
வோதிய குன்றங் கீண்டு குருதிநீர் சொரிந்தா லொத்த. 10

கடலுறு மத்தி தென்னக் கருவரை திரியுங் காலை
மிடலுறு புலன்கள் வென்ற மெய்த்தவர் விசும்பின் மொய்த்தார்
திடலுறு கிரியிற் றுந்தஞ் செய்வினை முற்றி முற்று
வுடலுறு பாசம் வீசா வும்பர்செல் வாரு மொத்தார். 11

வெயிலியற் குன்றங் கீறி வெடித்தலு நடுக்க மெய்தி
மயிலியற் றளிர்க்கை மாதர் தழீஇக்கொளப் பொலிந்த வாறே
ரயிலெயிற் றரக்க னள்ளத் திரிந்தநா ளணங்கு புல்லக்
கயிலையி னிருந்த தேவைத் தனித்தனி கடுத்தல் செய்தார். 12

ஊறிய நறவை யுண்ட குற்றந்த முணர்வை யுண்ணச்
சீறிய மனத்தர் தெய்வ மடந்தைய ரூட றீர்வுற்
றுறின ரஞ்சு கின்று ரன்பரைத் தழூவி யும்ப
ரேறின ரிட்டுநீத்த பைங்கிளிக் கிரங்கு கின்றார். 13

இத்திற நிகழும் வேலை யிமையவர் முனிவர் மற்று
முத்திறத் துலகத் தாரு முறைமுறை விரைவின் மொய்த்தார்
தொத்துறு மலருஞ் சாந்துஞ் சுண்ணமு மணியுந் தூவி
வித்தக சேறி யென்றார் வீரனும் விரைவ தானான். 14

குறுமுனி குடித்த வேலை குப்புறுங் கொள்கைத் தாதல்
வெறுவிது விசயம் வைகும் விலங்கற்றோ ளலங்கல் வீரா
சிறுதிதென் றிகழற் பாலை யல்லைநீ சேறி யென்று [பொப்பான்
வுறுவலித் துணைவர் சொன்னு றொருப்பட்டான் பொருப்பை

இலங்கையி னளவிற் றன்று விவ்வுரு வெடுத்த தோற்றம்
விலங்கவு முளதன் றென்று விண்ணவர் வியந்து நோக்க
வலங்கருழ் மார்பன் முன்றாழ்த் தடித்துணை யழுத்த லோடும்
பொலங்கெழு மலையுந் தாளும் பூதலம் புக்க மாதோ. 16

வால்விசைத் தெடுத்து வன்றாண் மடக்கிமார் பொடுக்கி மானத்
தோள்விசைத்துணைகள்பொங்கக்கழுத்தினைச்சுருக்கித்தூண்டிக்
கால்விசைத் தடக்கை நீட்டிக் கட்புலங் கதுவா வண்ண
மேல்விசைத் தெழுந்தா னுச்சி விரிஞ்சனு டுரிஞ்ச வீரன். 17

ஆயவ னெழுத லோடு மரும்பனை மரங்க டாமும்
வேயுயர் குன்றும் வென்றி வேழமும் பிறவு மெல்லா
நாயகன் பணியி தென்று நளிர்கட லிலங்கை காறும்
பாய்வன வென்ன வானம் படர்ந்தன பழுவ மான. 18

விசையுடை யண்ணல் சென்ற வேகத்தா லெழுந்த குன்றும்
பசையுடை மரனு மாவும் பல்லுயிர்க் குலமும் வல்லே
திசையுறச் சென்று சென்று செறிகட லிலங்கை சேரும்
விசையில வாகத் தள்ளி விழுந்தன வென்ன வீழ்ந்த. 19

மாவொடு மரனு மண்ணும் வல்லியு மியாவு மற்றும்
போவது புரியும் வீரன் விசையினுற் புணரி பொங்கத்
தூவின கீழு மேலுந் தூர்த்தன சுருதி யன்ன
சேவகன் சீறு முன்னஞ் சேதுவுந் தெரிந்த மாதோ. 20

கீண்டது வேலை நன்னீர் கீழுறக் கிடந்த நாகர்
வேண்டிய வுலக மெங்கும் வெளிப்பட மணிகண் மின்ன
வாண்டகை யதனை நோக்கி யரவினுக் கரசர் வாழ்வுங்
காண்டகு தவத்த னேனி யானெனக் களிப்புக்கொண்டான்.

வெய்தின்வான் சிறையி னுனீர் வேலையைக் கிழிய வீசி
நொய்தினு ரமுதங் கொண்ட நோன்மையே நுவலு நாக
ருய்துநா மென்ப தென்னே யுறுவலிக் கலுழ னூழி
னெய்தினு னுமென் றஞ்சி மறுக்கமுற் றிரியல் போனூர். 22

துள்ளிய மகர மீன்க டிப்பறச் சுறவு தூங்க
வொள்ளிய பனைமீன் றுஞ்சுந் துவலைய வூழிக் காலின்
வள்ளுகிர் வீரன் செல்லும் விசைபொர மறுகி வாரி
தள்ளிய திரைகண் மூந்துற் றிலங்கைமேற் றவழ்ந்த மாதோ.23

இடுக்குறு பொருள்க ளென்னு மெண்டிசை சுமந்த யானை
நடுக்குற விசும்பிற் செல்லு நாயகன் றூத னுக
மெடுக்குறு கால வன்காற் றிடியொடு முடிய வந்நாண்
முடுக்குறக் கடலிற் செல்லு முத்தலைக் கிரியு மொத்தான். 24

கொட்புறு புரவித் தெய்வக் கூர்நுதிக் குலிசத் தாற்குங்
கட்புலங் கதுவ லாகா வேகத்தாற் கடலு மண்ணு
முட்பதங் கூட்டி யண்ட முறவுள செலவி னுற்றைப்
புட்பக விமானத் தானவ் விலங்கைமேற் போவ தொத்தான். 25

விண்ணவ ரேத்த வேத முனிவரர் வியந்து வாழ்த்த
மண்ணவ ரிறைஞ்சச் செல்லு மாருதி மறமுட் கூர
வண்ணல்வா ளரக்கன் றன்னை யமுக்குவா மின்ன மென்னக்
கண்ணுத லொழியச் செல்லுங் கயிலையங் கிரியு மொத்தான்.26

கேழுலா முழுநி லாவிற் கிளரொளி யிருளைக் கீறப்
பாழியூா மேரு நாண விசும்புறப் படர்ந்த தோளா
னுழிசூ ழுலக முற்று மருங்கனன் முருங்க வுண்ணு
மூழிநாள் வடபாற் றோன்று முவாமுழு மதியு மொத்தான். 27

மாணரியாம் வேடந் தாங்கி மலரயற் கறிவு மாண்டோ
ராணியா யுலகுக் கெல்லா மறம்பொரு ணிரப்பு மண்ணல்
சேணுயர் நெடுநா டேர்ந்த திரிதலைச் சிறுவன் றன்னைக்
காணிய விரைவிற் செல்லுங் கனகமால் வரையு மொத்தான். 28

மழைகிழித் துதிரு மீன்கண் மறிகடல் பாய வானங்
குழைவுறத் திசைகள் கீற மேருவுங் குலுங்கக் கோட்டின்
முழையுடைக் கிரிகண் முற்ற முடுக்குவான் முடிவு காலத்
தழிவுறக் கடுக்கும் வேகத் தாதையு மனைய னானான். 29

தடக்கைநா லைந்து பத்துத் தலைகளு முடையான் றானே
யடக்கியைம் புலன்கள் வென்ற தவப்பய னறுத லோடுங்
கெடக்குறி யாக மாகங் கிழக்கெழு வழக்கு நீங்கி
வடக்கெழுந் திலங்கை செல்லும் பரிதிவா னவனு மொத்தான்.

புறத்துற லஞ்சி வேறோ ரரணம்புக் குறைதல் போக்கி
மறத்தொழி லரக்கர் வாழு மாநகர் மனுவின் வந்த
திறத்தகை யிராம னென்னுஞ் சேவகற் பற்றிச் செல்லும்
அறத்தகை யரசன் றிண்போ ராழியு மனைய னானான். 31

அடலுலாந் திகிரி மாயற் கமைந்ததன் னாற்றல் காட்டக்
குடலெலா மவுணர் சிந்தக் குன்றெலாங் குறித்து நின்ற
திடலெலாந்தொடர்ந்துசெல்லச்சேண்விசும்பொதுங்கத்தெய்வக்
கடலெலாங் கலங்கத் தாவுங் கலுழனு மனைய னானான். 32

நாலிரண் டுலக மூன்று நடுக்குற நடுக்கி நாகர்
மேலின்மே னின்று காறுஞ் சென்றகூ லத்தின் விண்டு
காலினா லளந்த வான முகட்டையுங் கடக்கத் தாவி
வாலினா லளந்தா னென்று வானவர் மருளச் சென்றான். 33

வெளித்துப்பின் வேலை தாவும் வீரன்வால் வேத மெய்க்கும்
அளித்துப்பி னநும னென்னு மறந்துணை பெற்ற தாயுங்
களித்துப்புன் றொழின்மே னின்ற வரக்கர்கண் ணுறுவ ராமென்
றொளித்துப்பின் செல்லுங் கால பாசத்தை யொத்த தன்றே. 34

மேருவை முழுதுஞ் சூழ்ந்து மீதுற்ற வேக நாகங்
கார்நிறத் தண்ண லேவக் கலுழன்வந் துற்ற காலை
சோர்வுறு மனத்த தாகிச் சுற்றிய சுற்று நீங்கிப்
பேர்வுறு கின்ற வாறு மொத்தப் பிறங்கு பேழ்வால். 35

குன்றொடு குணிக்குங் கொற்றக் குவவுத்தோட் குரக்குச் சீயஞ்
சென்றுறு வேகத் தின்கா லெறிதரத் தேவர் வைகு
மின்றொடர் வானத் தான விமானங்கள் விசையிற் றம்மி
லொன்றொடொன் றுடையத் தாக்கி மாகட லுற்ற மாதோ. 36

வலங்கையின் வயிர வேதி வைத்தவன் வைகு நாடுங்
கலங்கிய தேகு வான்றன் கருத்தென்கொ லென்னுங் கற்பால்
விலங்கையி லெயிற்று வீரன் முடுக்கிய வேகம் வெய்யோ
ரிலங்கையி னௌவென் றுன்னு விம்பர்நா டிரிந்த திப்பால். 37

ஓசனை யுலப்பி லாத வுடம்பமைந் துடைய வென்னத்
தேசமு நூலுஞ் சொல்லுந் திமிங்கில கிலங்க ளோடு
மாசையை யுற்ற வேலை கலங்கவன் றண்ணல் யாக்கை
வீசிய காலின் வீழ்ந்து மிதந்தன மீன்க ளெல்லாம். 38

பொருவரு முருவத் தன்னான் போகின்ற பொழுது வேகந்
தருவன தடக்கை தள்ளா நிமிர்ச்சிய தம்மு ளொப்ப
வொருவருங் குணத்து வள்ள லோருயிர்த் தம்பி யோடு
மிருவரு முன்னர்ச் சென்று லொத்தவவ் விரண்டு பாலும். 39

இந்நாக மன்னு னெறிகாலென வேகும் வேலை
திந்நாக மாவிற் செறிகீழ்த்திசை காவல் செய்யுங்
கைந்நாக மந்நாட் கடல்வந்ததொர் காட்சி தோன்ற
மைந்நாக மென்னு மலைவானுற வந்த தன்றே. 40

மீயோங்கு செம்பொன் முடியாயிர மின்னி மைக்க
வோயா வருவித் திரளுத்தரி யத்தை யொப்பத்
தீயோ ருளரா கியகாலவர் தீமை தீர்ப்பான்
மாயோன் மகரக் கடல்வந்தெழு மாண்ப தாகி. 41

நூலேந்து கேள்வி நுகரார்புல னோக்க லுற்றார்
போலேந்தி நின்ற வனியாண்மெய் பொருது நீங்கக்
காலாழ்ந் தழுந்திக் கடல்புக்குழீஇக் கச்ச மாகி
மாலேந்த வோங்கு நெடுமெந்தர மேயு மான. 42

தள்ளற் கருநற் சிறைமாடு தழைப்பொ டோங்க
வெள்ளற் கருநன் னிறமெல்லை யிலாத புல்ல
வள்ளற் கடலைக் கெடநீக்கி மருந்து வெளவி
யுள்ளூற் றெழுமோ ருவணத்தர சேயு மொக்க. 43

ஆன்றா னெடுநீரிடை யாதியொ டந்த மாகித்
தோன்றாது நின்றா னருடோன்றிட முந்து தோன்று
மூன்றா முலகத் தொடுமுற்றுயி ராய மற்று
மீன்றானை யீன்ற சுவணத்தனி யண்ட மென்ன. 44

இந்நீரி லென்னைத் தருமெந்தையை யெய்தி யன்றிச்
செந்நீர்மை செய்யே னெனச்சிந்தனை செய்து நொய்தி
னந்நீரில் வந்து முதலந்தண னாதி நாளம்
முந்நீரின் மூழ்கித் தவமுற்றி முளைத்த வாபோல். 45

பூவா விடையூறு புகுந்து பொருது நெஞ்சிற்
கோவா முனிசீறிட வாரி குதித்த வெல்லா
மூவா முதனாயகன் மீள முயன்ற வந்நாள்
தேவா சுரர்வேலையில் வந்தெழு திங்க ளென்ன. 46

நிறங்குங் குமமொப்பன நீணிறம் வாய்ந்த நீரி
னிறங்கும் பவளக்கொடி சுற்றின செம்பொ னேய்ந்த
பிறங்குஞ் சிகரப்படர் முன்றி றெறும்பி னாவோ
டுறங்கும் மகரங்க ளுயிர்ப்பொ டுணர்ந்து லாவ. 47

கூன்சூன் முதிரிப்பி குரைக்க நிரைத்த பாசி
வான்சூன் மழையொப்ப வயங்கு பளிங்கு முன்றி
ரூன்சூல நாளிற் றகைமுத்த முயிர்த்த சங்க
மீன்சூழ் வருமம் முழுவெண்மதி வீறு கீற. 48

பல்லா யிரமா யிரங்காசினம் பாடி மைக்குங்
கல்லார் சிமயத் தடங்கைத்தல நீண்டு காட்டத்
தொல்லார் கவியுட் புகமூழ்கி வயங்கு தோற்றத்
தெல்லா மணியீட்ட முகந்தெழு கின்ற தென்ன. 49

மனையிற் பொலிமாக நெடுங்கொடி மாலை யேய
வினையிற் றிரள்வெள் ளருவித்திர ளேங்கி வீழ
நினைவிற் கடலோ டெழலோடு முணர்ந்து நீங்காச்
சுனையிற் பனைமீன் றிமிலோடு தொடர்ந்து துள்ள. 50

கொடுநாலொ டிரண்டு குலப்பகை குற்ற மூன்று
சுடர்ஞானம் வெளிப்பட வுய்ந்த துயக்கி லார்போல்
விடநாக முழைத்தலை விம்ம லுழந்து நீங்க
நெடுநாள் பொறையுற்ற வுயிர்ப்பை நிமிர்ந்து நிற்க. 51

எழுந்தோங்கி விண்ணெடு மண்ணெருக்க விலங்கு மாடி
யுழுந்தோடு காலத் திடையும்பரி னிம்ப ரெங்குங்
கொழுந்தோட நின்ற கொழுங்குன்றை வியந்து நோக்கி
யழுந்தா மனத்தண்ண லிதென்கொ லெனவு யிர்த்தான். 52

நீர்மேற் படர்குன் றிதுகோடு நிமிர்ந்து நிற்றல்
சீர்மேற் படரா தெனச்சிந்தை யுணர்ந்து செல்வான்
வேர்மேற் படவன் றலைகீழ்ப்பட நூக்கி விண்ணேர்
ஊர்மேற் படரக் கடிதும்பரின் மீது யர்ந்தான். 53

உந்தாமு னுலைந்துயர் வேலை யொளித்த குன்றஞ்
சிந்தா குலமுற்றது பின்னரு நீர்வி லன்பால்
வந்தோங்கி யாண்டோர் சிறுமானிட வேட மாகி
யெந்தா யிதுகே ளெனவின்ன விசைத்த தன்றே. 54

வேற்றுப் புலத்தோ னெனவேய விலங்க லெல்லா
மாற்றுச் சிறையென்றரி வச்சிர மான தெய்வ
வீற்றுப்படை நூறிய வேலையின் வேலை யுய்த்துக்
காற்றுக் கிறைவ னெனைக்காத்தன னன்பு காக்க. 55

அன்ற னருங்காதல னுதவி னன்பு தூண்ட
வென்று னுனக்கீண்டு செயற்கரி தாய தின்மை
பொன்னூர் சிகரத் திடையாறினை போதி யேனு
மூன்று லுயர்ந்தே னுயர்விற்கு முயர்ந்த தோளாய். 56

கார்மேக வண்ணன் பணிபூண்டருங் காலின் மைந்தன்
தேர்வான் வருகின்றது சீதையைத் தேவ ருய்யப்
பேர்வா னயல்சேறி யிதிற்பெறும் பேறி லென்ன
நீர்வே லையுமென்னை யுரைத்தது நீதி நின்றாய். 57

நற்றுயினு நல்ல னெனக்கிவ னென்று நாடி
யிற்றேயிறை யெய்தின னேய்ந்தது கோடி யென்றுப்
பொற்றுரகன் மார்பதம் மில்லுழை வந்த போதி
லுற்றுர்செயன் மற்றுமுண் டோவென வுற்று ரைத்தான். 58

உரைத்தா னுரையாலவ னூறில னென்ப துன்னி
விரைத்தாமரை வாண்முகம் விட்டு விளங்கு வீரன்
சிரித்தா னளவே சிரித்தத்திசை செல்ல நோக்க
வரைத்தா நெடுங்குடு மித்தலை மாடு கண்டான். 59

வருந்தேலது நின்றுணை வானவன் வைத்த காத
லருந்தேனினி யாதுமென் றுசை நிரப்பி னல்லாற்
பெருந்தேன் பிழிசாலு நின்னன்பு பிணித்த போதே
யிருந்தே னுகர்ந்தே னிதன்மேலினி யீவ தென்றே. 60

முன்பிற் சிறந்தா ரிடையுள்ளவர் காதன் முற்றப்
பின்பிற் சிறந்தார் குணநன்றிது பெற்ற யாக்கைக்
கென்பிற் சிறந்தாயதொ ரூற்றுமுண் டென்ன லாமே
யன்பிற் சிறந்தாயதொர் பூசனை யார்க ணுண்டே. 61

ஈண்டியான் கடிதேகி யிலங்கை விலங்க லெய்தி
யாண்டா னடிமைத் தொழிலாற்றியென் றுற்ற லுண்டேன்
மீண்டா னுகர்வென்னின் விருந்தென வேண்டி மெய்மை
பூண்டா னவன்கட் புலம்பிற்பட முந்து போனான். 62

செவ்வான் கதிருங் குளிர்திங்களுந் தேவர் வைகும்
வெவ்வேறு விமானங் களுமீனொடு மேக மற்று
மெவ்வா யுலகத் தவுமீண்டி யிருந்த தம்மி
லொவ்வா தனவொத் திடவூழிவெங் காலு மொத்தான். 63

நீர்மாக்கடன் மேனிமிர் கின்ற நிமிர்ச்சி நேரப்
பார்மேற்றவழ் சேவடி பாய்நட வாப்ப தத்தே
தேர்மேற்குதி கொண்டவ னித்திறன் சிந்தை செய்தா
ஞர்மேற்கொலென் றெண்ணி யருக்கனு மைய முற்ருன். 64

வாளொத்தொளிர் வாலெயி றாழின் மருங்கி மைப்ப
நீளொத்துயர் வாலின் விசும்பு நிறைந்த மெய்யன்
கோளொத்த பொன்மேனி விசும்பிரு கூறு செய்யும்
நாளொத்தது மேல்வெளி கீழிரு ளூற்ற ஞாலம். 65

மூன்றுற்ற தலத்திடை முற்றிய துன்பம் வீப்பா
னேன்றுற்று வந்தான் வலிமெய்மை யுணர்த்து நீயென்
ருன்றுற்ற வாஞேர் குறைநேர வரக்கி யாகித்
தோன்றுற்று நின்ருள் சுரசைப்பெயர்ச் சிந்தை தூயாள். 66

பேழ்வாயொ ரரக்கி யுருக்கொடு பெட்பி ேஞங்கிக்
கோள்வாயரி யின்குலத் தாய்கொடுங் கூற்று முட்க
வாழ்வாயெனக் காமிட மாய்வரு வாய்கொ லென்ஞ
நீள்வாய் விசும்பு தனதுச்சி நெருக்க நின்ருள். 67

தீயே யெனலாய பசிப்பிணி தீர்த்தல் செய்ய
வாயே விரைவுற் றனையண்மினை யாண்மை யாள
நீயே யினிவந்தெ னிணங்கொள் பிணங்கெ யிற்றின்
வாயே புகுவாய் வழிமற்றிலை வானி னென்ருள். 68

பெண்பாலொரு நீபசிப் பீழை யுறுத்தல் பேர
வுண்பாயென தாக்கையை யானுத வற்கு நேர்வன்
விண்பாலவர் நாயக னேவ லிழைத்து மீண்டா
னண்பாலெனச் சொல்லிய நல்லறி வாள னக்கான். 69

காய்ந்தே மூலகங் களுங்காணநின் கற்பின் யாக்கை
யாய்ந்தே பசிதீர் வனிதாணையென் றன்ன சொன்னா
ளோர்ந்தானு முகந்தொரு வேனின தூழில் பேழ்வாய்
சேர்ந்தேகு கின்றேன் வலையாமெனிற் றின்றி யென்றான். 70

அக்காலை யரக்கியு மண்ட மனந்த மாகப்
புக்கா னிறையாத புழைப்பெரு வாய்ப்பு மூங்க
விக்காது விழுங்க நின்றாளது நோக்கி வீரன்
திக்கார வள்வாய் சிறிதாம்வகை சேணி னீண்டான். 71

நீண்டா னுடனே சுருங்காநிமிர் வாள்வ யிற்றி
னூண்டா னெனவுற்றொ ருயிர்ப்புயி ராத முன்ன
மீண்டா னதுகண்டனர் விண்ணுறை வோர்கண் மெய்மை
யாண்டான் வலனென் றலர்தூஉய்நெடி தாசி சொன்னார். 72

மின்மேற்படர் நோன்மைய னுயுடல் வீங்கி நீங்கத்
தன்மேனிய ளாயவ டாயினு மன்பு தாழ
வென்மேன்முடி யாதன வென்றினி தேத்தி நின்றாள்
பொன்மே னியனு நெடிதாசி புனைந்து போனான். 73

கீதங்க ளிசைத்தனர் கின்னரர் கீத நின்ற
பேதங்க ளியம்பினர் பேதைய ராடல் பின்னர்ப்
பூதங்க டொடர்ந்து புகழ்ந்தன பூசு ரேசர்
வேதங்க ளியம்பினர் தென்றல் விருந்து செய்த. 74

பரவுக்குரல் பணிலக்குரல் பறையின்குரல் பணையின்
விரவுக்குரல் வீணைக்குரல் விசயக்குரல் விரவா
யரவுக்குர வுயிருக்குக வசனிக்குர லடுபோ
ரூரவுக்கரு டனுமுட்கிட வுயர்கின்றன வொருபால். 75

மந்தார முந்து மகரந்த மணந்த வாடை
செந்தா மரைவாண் முகத்திற் குறுவேர் சிதைக்கத்
தந்தா முலகத் திடைவிஞ்சையர் பாணி தள்ளக்
கந்தார வீணைக் கனிசெஞ்செவி தாழ்த்து நுங்க. 76

வெங்கார் நிறப்புணரி வேலையு மொன்றப்
பொங்கார் கலிப்புன றரப்பொலிவ தேபோ
லிங்கார் கடத்திரெனை யென்னாயெ ழுந்தாள்
அங்கார தாரைபெரி தாலால மன்னாள். 77

நாதக் கடுங்குறி கணக்கிறுதி கண்ணாள்
பாதச் சிலம்பினொலி வேலையொலி பம்ப
வேதக் கொழுஞ்சுடரை நாடிநெறி மேனா
ளோதத்தின் மேவுமது கைடவரை யொத்தாள். 78

துண்டப் பிறைத்துணை யெனச்சுட ரெயிற்றாள்
கண்டத் திடைக்கறை யுடைக்கடவுள் கைம்மா
முண்டத் துரித்தவுரி யான்முளரி வந்தா
னண்டத்தி னுக்குறை யமைத்தபில வாயாள். 79

நின்றா ணெடுங்கட னிறைந்துமிர் நீர்தன்
வன்றா ளலம்பமுடி வான்முகடு வௌவ
வன்றாய் திறத்தவ னறத்தையரு ளோடுந்
தின்றா ளொருத்தியிவ ளென்பது தெரிந்தான். 80

பேழ்வா யகத்தலது பேருலக மூடு
நீள்வா னகத்தினிடை யேகுநெறி நேரா
வாழ்வா னனுக்கன்வளர் வாள்பில வயிற்றைப்
போழ்வா னினைத்தினைய வாய்மொழி புகன்றான். 81

சாயா சலந்தழுவி னுய்தழிய பின்னு
மோயா துயர்ந்தவிசை கண்டுமுணர் வில்லாய்
வாயா ளைந்துநெடு வான்வழி யடைத்தாய்
நீயாரை யென்னையிவ ணின்றநிலை யென்றான். 82

பெண்பா லெனக்கருது பெற்றியொழி வுற்றால்
விண்பா லவர்க்குமுயர் வீடுறுதன் மெய்யே
கண்பா லடுத்தவுயிர் காலன்வரு மேனு
முண்பா ளொருத்தி யதொழிப்பரிய தென்றாள். 83

திறந்தாள் வயிற்றையவ ளண்ணலிடை சென்று
றறந்தா னரற்றிய தயர்த்தமர ரெய்த்தா
ரிறந்தா னெனக்கொடொ ரிமைப்பதனின் முன்னம்
பிறந்தா னெனப்பெரிய கோளரி பெயர்ந்தான். 84

கள்வா யரக்கிசட ரக்குடர் கணத்திற்
கொள்வார் தடக்கையன் விசும்பைமிசை கொண்டான்
முள்வாய் பொருப்பின்முழை யெய்திமுக நொய்தி
னுள்வா ளரக்கொடெழு திண்கலுழ னொத்தான். 85

சாகா மருகத்தலைவ ரிற்றிலக மன்னு
னேகா வரக்கிகுடர் கொண்டிடை யெழுந்தான்
மாகால் விசைப்பவட மண்ணிலுற வாலோ
டாகாய முற்றகத லிக்குவமை யானான். 86

ஆர்த்தார்கள் வானவர்க டானவ ரழுங்கா
வேர்த்தார் விரிஞ்சனும் வியந்துமலர் வெள்ளந்
தூர்த்தா னகன்கயிலை யிற்றுயிலி லோனும்
பார்த்தான் முனித்தலைவ ராசிகள் பகர்ந்தார். 87

மாண்டா ளரக்கியவள் வாய்வயிறு காறுங்
கீண்டா னிமைப்பிடையின் மேருகிரி கீழா
நீண்டான் வயக்கதி நினைப்பினெடி தென்னப்
பூண்டா னுருத்தனுயர் வானின்வழி போனான். 88

சொற்றார்கள் சொற்றதொகை யலலதுனை யொன்றோ
முற்றா முடிந்தநெடு வானினிடை முந்நீர்
இற்றாக வெற்றெனினும் யானினி யிலங்கை
யுற்றால் விலங்குமிடை யூறென வுணர்ந்தான். 89

ஊறுகடி தூறுவன வூறிலற முன்னாத்
தேறலி லரக்கர்புரி தீமையவர் தீர
வேறுவகை யெங்குளவி ராமனென வெல்லா
மாறுமதின் மாறுபிறி தில்லென மதித்தான். 90

தசும்புடைக் கனக நாஞ்சிற் கடிமதி றணித்து நோக்கான்
அசும்புடைப் பிரசத் தெய்வக் கற்பக நாட்டை யண்மி
விசும்பிடைச் செல்லும் வீரன் விலங்கன்மே லிலங்கை மூதூர்ப்
பசுஞ்சுடர்ச்சோலைத்தாங்கோர் பவளமால் வரையிற் பாய்ந்தான்.

மேக்குறச் செல்வோன் பாய விலங்கன்மே லிலங்கை மூதூர்
நூக்குறுத் தங்கு மிங்குந் தள்ளுற நுடங்கு நோன்மை
போக்கினுக் கிடையூ றாகப் புயலொடும் பொலிந்த வாடை
தாக்குறத் தகர்ந்து சிந்துங் கலமெனத் தகர்ந்த தன்றே. 92

மண்ணடி யுற்று மீது வானுற வரம்பிற் றன்மை
யெண்ணடி யுற்ற குன்றை நிவந்துநின் றெய்த நோக்கி
விண்ணிடை யுலக மென்னு மெல்லியன் மேனி நோக்கிக்
கண்ணடி வைத்த தன்ன விலங்கையைக் கண்ணிற் கண்டான்.

நன்னக ரதனை நோக்கி நளினக்கை மறித்து நாகர்
பொன்னக ரிதனை யொக்கு மென்பது புல்லி தம்மா
வந்நக ரிதனி னன்றே யண்டத்தை முழுது மாள்வா
னிந்நக ரிருந்து வாழ்வா னிதுவதற் கேது வென்றான். 94

மாண்டதோர்நலத்திற்றாமென்றுணர்த்துதல்வாய்மைத்தன்றால்
வேண்டிய வேண்டி னெய்தி வெறுப்பின்றி வீழ்ந்து துய்க்கு
மீண்டறாம் போக வின்ப மீறில தியாண்டுக் கண்டாம்
ஆண்டது துறக்க மஃதே யருமறைத் துணிவு மம்மா. 95

உட்புல னெழுநூ றென்ப ரோசனை யுலக மூன்றில்
தெட்புறு பொருள்க ளெல்லா மிதனுழைச் செறிந்த வென்றா
னுட்புல னுணங்கு கேள்வி நுழைவின ரெனினு நோக்குங்
கட்புலன் வரம்பிற் றாமோ காட்சியுங் கரையிற் றாமோ. 96





## நிலாத்தோற்று படலம்.

பொன்கொண் டிழைத்தமணி யைக்கொடு பொதித்த
மின்கொண் டமைத்தவெயி லைக்கொடு சமைத்த
என்கொண் டியற்றிய வெனத்தெரிவி லாத
வன்கொண்டல் விட்டுமதி முட்டுவன மாடம். 1

நாகா லயங்களொடு நாகருல குந்தம்
பாகார் மருங்குமில வென்னவுயர் பண்ப
ஆகாய மஞ்சவகன் மேருவை யனுக்கும்
மாகால் வழங்குசிறு தென்றலென நின்ற. 2

மாகாரின் மின்கொடி மடக்கின ரடுக்கி
மீகார மெங்கணு நறுந்துகள் விளக்கி
ஆகாய கங்கையினை யங்கையினி னள்ளிப்
பாகாய செஞ்சொலவர் வீசுபடு காரம். 3

பஞ்சி யூட்டிய பாட்டிசைக் கிண்கிணிப் பதுமச்
செஞ்செ விச்செழும் பவளத்தின் கொழுஞ்சுடர் சிதறி
மஞ்சி னஞ்சன நிறமறைத் தரக்கியர் வடித்த
அஞ்சி லோதியொ டெவமைய வவர்க்குறு முவமை. 4

நான நாண்மலர்க் கற்பக நறுவிரை நான்ற
பானம் வாயுற வெறுத்ததா ளாறுடைப் பறவை
தேன வாம்விரைச் செங்கழு நீர்த்துயில் செய்ய
வான யாறுதம் மரமியத் தலத்தொடு மடுத்த. 5

குழலும் வீணையும் யாழுமென் றினையன குழைய
மழலை மென்மொழி கிளிக்கிருந் தளிக்கின்ற மகளிர்
சுழலு நன்னெடுந் தடமணிச் சுவர்தொறுந் துவன்று
நிழலுந் தம்மையு மெய்ம்மைநின் றறிவரு நிலைய. 6

இனைய மாடங்க ளிந்திரற் கமைவுற வெடுத்த
மனையின் மாட்சிய வென்னிலச் சொல்லுமா சுண்ணும்
அனைய தாமெனி லரக்கர்தந் திருவுக்கு மளவை
நினைய லாமன்றி யுவமையு மன்னதாய் நிற்கும். 7

மணிக ளொத்துணை பெரியவு மாறிரு மார்பின்
அணியுங் காசினுக் ககன்றன வுளவென லரிதால்
திணியு நன்னகர்த் திருமனை தெய்வமாத் தச்சன்
துணிவின் வந்தனன் றொட்டழ கிழைத்தவத் தொழில்கள். 8

மரம டங்கலுங் கற்பக மனையெலாங் கனகம்
அரம டந்தையர் சிலதிய ரரக்கியர்க் கமரர்
உரம டங்கிவந் துழையரா யுழல்பவ ரொருவர்
தரம டங்குவ தன்றிது தவஞ்செய்த தவமால். 9

போரி யன்றன தோற்றவென் றிகழ்தலிற் புறம்போய்
நேரி யன்றவன் றிசைதொறு நின்றமா நிற்க
ஆரி யன்றவ னைங்கரக் களிறுமோ ராழிச்
சூரி யன்றனித் தேருமே யிந்நகர் தொகாத. 10

வாழு மன்னுயிர் யாவையு மொருவழி வாழ
ஊழி நாயகன் றிருவயி றொத்துள திவ்வூர்
ஆழி யண்டத்தி னருக்கன்ற னலங்குதேர்ப் புரவி
ஏழு மல்லன வீண்டுள குதிரையு மெல்லாம். 11

தேவ ரென்பவர் யாருமித் திருநகர்க் கிறைவற்
கேவல் செய்பவ ரேவரு மெண்வகை யுருவின்
மூவர் தம்மினு மொருவனிவ் வுழையுளான் முயலிற்
றேவின் மாதவ மல்லது பிறிதொன்று தருமோ. 12

தழங்கு பேரியி னார்கலி ததைநெடுங் களிறு
முழங்கு மோதையு மூரிநீர் முழக்கொடு முழங்கும்
கொழுங்கு ழற்புதுக் குதலையர் நூபுரக் குரலின்
வழங்கு மப்பெருந் துவனிகள் வயின்றொறு மறையும். 13

மரக தத்தினு மற்றுள மணியினும் வனைந்த
குரக தத்தடந் தேரெலா மவைபயில் கொட்டில்
இரவி வெள்கநின் றிமைக்கின்ற வியற்கைய வென்றால்
நரக மொக்குமா னன்னெடுந் துறக்கமிந் நகர்க்கு. 14

அண்ட முற்றவும் வீங்கிரு ளகற்றிநின் றலர்வ
கண்ட வாற்றினிக் கடிநகர் நெடுமனைக் கதிர்கட்
குண்ட வாற்றலென் றுரைப்பரி தொப்பிடிற் றம்முன்
விண்ட வாய்ச்சிறு மின்மினி யென்னவும் விளங்கா. 15

திருகு வெஞ்சினத் தரக்கருங் கருநிறந் தீர்ந்தார்
அருகு போகின்ற திங்களூ மறுவற்ற தழகைப்
பருகு மிந்நகர்த் துன்னொளி பாய்தலிற் பசும்பொன்
உருகு கின்றது போன்றுள துலகுகு பூவரி. 16

தேனுஞ் சாந்தமு மான்மதஞ் செறிநறுஞ் சேறும்
வான நாண்மலர்க் கற்பக மலர்களும் வயமாத்
தான வாரியு நீரொடு மடுத்தலிற் றழீஇய
மீனுந் தானுமோர் வெறிமணங் கமழுமால் வேலை. 17

தெய்வத் தச்சனைப் புகழ்துமோ செங்கண்வா ளரக்கன்
மெய்யொத் தாற்றிய தவத்தையே வியத்துமோ விடையோன்
ஐயப் பாடிலா வரத்தையே மதித்துமோ வறியாத்
தொய்யற் சிந்தையாம் யாவரை யாதென்று துதிப்பாம். 18

வானுந் நிலனும் பெறுமாறினி மற்று முண்டோ
கானும் பொழிலும் மிவைசெங்கன கத்தி னாலும்
ஏனம் மணியா லு மியற்றிய வேனும் யாவுந்
தேனுங் கனியு மலருந்தரச் செய்த செய்கை. 19

நீரும் வையமு நெருப்புமே னிமிர்நெடுங் காலும்
வாரி வானமும் வழங்கல வாகுந்தன் வளர்ச்சி
ஊரு ளிந்நெடுங் கோபுரத் துயர்ச்சிகண் டுணர்ந்தால்
மேரு வெங்ஙனம் வெளுக்குமோ முழுமுற்றும் வெள்கி. 20

முன்னம் யாவரு மிராவணன் முனியுமென் றெண்ணிப்
பொன்னின் மாநகர் மீச்செலான் கதிரென்பர் புலவர்
கன்னி யாரையி னுயர்ச்சிகண் டிதுகடப் பரிதென்
றுன்னி நாடொறும் விலங்கினன் போதலை யுணரார். 21

தீய செய்குநர் தேவரா லனையவர் சேரும்
வாயி லல்லதோர் வரம்பமைக் குவமென மதியாற்
காய மென்னுமக் கணக்கறு பதத்தையுங் கடக்க
வெய்யு நன்மதி விட்டனன் கைலையை யெடுத்தான். 22

கறங்கு கால்புகா கதிரவ னொளிபுகா மறலி
மறம்பு காதினி வானவர் புகாரென்றல் வம்போ
திறம்பு காலத்துள் யாவையுஞ் சிதையினுஞ் சிதையா
அறம்பு காதிந்த வணிமதிட் கிடக்கைநின் றகத்தின். 23

கொண்டல் வான்றிரைக் குரைகட லிடையதாய்க் குடுமி
எண்ட வாவிசும் பெட்டநின் றிமைக்கின்ற வியல்பாற்
பண்டை நாகணைப் பள்ளியா னுந்தியிற் பயந்த
அண்ட மேயுமொத் திருந்ததவ் வகனக ரமைதி. 24

பாடு வார்பல ரெண்ணின்மற் றவரினும் பலரால்
ஆடு வார்கண்மற் றவரினும் பலருள ரமைதி
கூடு வாரிடை யின்னியங் கொட்டுவார் முட்டில்
வீடு காண்குறுந் தேவரால் விழுநடங் காண்பார். 25

வான மாதரோ டிகலுவர் விஞ்சையர் மகளிர்
ஆன மாதரோ டாடுவ ரியக்கிய ரவரைச்
சோனை வார்குழ லரக்கியர் தொடர்குவர் தொடர்ந்தால்
ஏனை நாகிய ரருநடக் கிரியையாய்ந் திருப்பார். 26

இழையு மாடையு மாலையுஞ் சாந்தமு மேந்தி
உழைய ரென்னநின் றுதவுவ நிதியங்க ளொருவர்
விழையும் போகமே யிங்கிது வாய்கொடு விளம்பின்
குழையு நெஞ்சினு னினையினு மாசென்று கொள்ளும். 27

பொன்னின் மால்வரை மேன்மணி பொழிந்தன பொருத்தி
உன்னு நான்முகத் தொருவனின் றூழ்முறை யுரைக்கப்
பன்னி நாள்பல பணியுழந் தரிதினிற் படைத்தான்
சொன்ன வானவர் தச்சனு மிந்நகர் ஞதிப்பான். 28

மகர வீணையின் மந்திர கீதத்தின் மறைந்த
சகர வேலையி னார்கலி திசைமுகந் தடவுஞ்
சிகர மாளிகைத் தலந்தொறுந் தெரிவையர் நிவந்த
அகரு தூபத்தி னழுந்தின முகிற்குல மனைத்தும். 29

பளிக்கு மாளிகைத் தலந்தொறு மிடந்தொறும் பசுந்தேன்
துளிக்குங் கற்பகத் தண்ணறுஞ் சோலைக டோறும்
அளிக்குந் தேறலுண் டாடுநர் பாடுந ராகிக்
களிக்கின் றாரலாற் கலுழ்கின்றா ரொருவரைக் காணேன். 30

தேறன் மாந்தினர் தேனிசை மாந்தினர் செவ்வாய்
ஊறன் மாந்தின ரின்னுரை மாந்தின ரூடல்
கூறன் மாந்தின ரனையவர்த் தொழுதெழு கோபத்
தாறன் மாந்தின ரரக்கியர்க் குயிரன்ன வரக்கர். 31

எறித்த குங்குமத் திளமுலை யெழுதிய தொழில்கள்
கறுத்த மேனியிற் பொலிந்தன வூடலிற் கனன்று
மறித்த நோக்கியர் மலரடி மஞ்சனப் பஞ்சி
குறித்த கோலங்கள் பொலிந்தன வரக்கர்தங் குஞ்சி. 32

விளரிச் சொல்லியர் வாயினுன் வேலையுண் மிடைந்த
பவளக் காடெனப் பொலிந்தது படைநெடுங் கண்ணால்
குவளைக் கோட்டகங் கடுத்தது குளிர்முகக் குழுவான்
முளரிக் கானக மொத்தது மூரிநீ ரிலங்கை. 33

எழுந்தனர் திரிந்து வைகு மிடத்ததா யின்று காறுங்
கிழிந்தில தண்ட மென்னு மிதனையே கிளப்ப தல்லால்
அழுந்திநின் றுவ தென்னே யலருளோ னாதி யாக
ஒழிந்தவே றுயிர்க ளெல்லா மரக்கருக் குறையும் போதா. 34

காயத்தாற் பெரியர் வீரங் கணக்கில ருலகங் கல்லும்
ஆயத்தார் வரத்தின் றன்மை யளவற்று ரறித றேற்றும்
மாயத்தா ரவர்க்கெங் கேனும் வரம்புமுண் டாமே மற்றோர்
தேயத்தார் தேயஞ் சேர்ந்தாற் றேர்விலோர் செருவின் சேறல்.

கழலிலாக் காலுங் கால வயிலிலாக் கையுங் காந்தும்
அழலிலாக் கண்ணு மில்லா வாடவ ரில்லை யன்னார்
குழலுலாய்க் களிவண் டார்க்குங் குஞ்சியாற் பஞ்சி குன்று
மழலையாழ்க் குதலைச் செவ்வாய் மாதரு மில்லை மாதோ. 36

கள்ளுறக் கனிந்த பங்கி யரக்கரைக் கடுத்த காதல்
புள்ளுறத் தொடர மேனி புலாலுறக் கடிதிற் போவ
வெள்ளுறப் பெயிற்ற செய்ய தலையின கரிய மெய்ய
உள்ளுறச் களித்த குன்றி னுயர்ச்சிய வோடை யானை. 37

வள்ளிநுண் மருங்கு லன்ன வானவர் மகளி ருள்ளந்
தள்ளுறப் பாணி தள்ளா நடம்புரி தடங்கண் மாதர்
வெள்ளிவெண் முறுவ லேன்று மடந்தையர் வெள்கு கின்றார்
கள்ளியை யரக்கர் மாதர் களியிடு குரவை காண்பார். 38

ஒறுத்தலோ நிற்க மற்றெம் முயர்படைக் கொருங்கிவ் வூர்வந்
திறுத்தலு மெளிதா மற்றும் யாவர்க்கு மியக்க முண்டாங்
கறுத்தவா ளரக்கி மாரு மரக்கருங் கழித்து வீசி
வெறுத்தபூண் வெறுக்கை யாலே வெள்ளிடை யரிதவ் வீதி. 39

வடங்களுங் குழையும் பூணு மாலையுஞ் சாந்தும் யானைக்
கடங்களுங் கலின மாவி லாழியுங் கணக்கி லாத
இடங்களி னிடங்க டோறும் யாற்றொடு மெடுத்த வெல்லாம்
அடங்கிய தென்னி லேன்னே யாழியி லாழ்ந்த துண்டோ. 40

விற்படை பெரிதென் கேனோ வேற்படை மிகுமென் கேனோ
மற்படை பெரிதென் கேனோ வாட்படை வலிதென் கேனோ
கற்பணந் தண்டு பிண்டி பாலமென் றினைய காந்தும்
நற்படை பெரிதென் கேனோ நாயகற் குரைக்கு நாளில். 41

என்றன னிலங்கை நோக்கி யினையன பிறவு மெண்ணி
நின்றன னரக்கர் வந்து நேரினு நேர்வ ரென்னத்
தன்றகை யனைய மேனி சுருக்கியச் சரளச் சாரற்
குன்றிடை யிருந்தான் வெய்யோன் குரைகடற் குளிப்ப தானான்.

ஏய்வினை யிறுதியிற் செல்வ மெய்தினான்
ஆய்வினை மனத்திலா னறிஞர் சொற்கொளான்
வீவினை நினைக்கிலா னொருவன் வெம்மையான்
தீவினை யெனவிருள் சிறுமை தீரவே. 43

கரித்தலமூன் றெயிலுடைக் கணிச்சி வானவன்
எரித்தலை யந்தண ரிழைத்த யானையை
உரித்தபே ருரிவையா லுலகுக் கோருறை
புரித்தன னாமெனப் பொலியும் பொற்பதே. 44

அணங்கர வரசர்கோ னளவி லாண்டெலாம்
பணங்களின் றலைதொறு முயிர்த்த பாய்விடம்
உணங்கலி லுலகெலா முறையி னுண்டுவெந்
திணங்கெரி புகையொடு மெழுந்த தென்னவே. 45

வண்மைமீங் காநெடு மரபின் வந்தவன்
பெண்மைமீங் காதகற் புடைய பேதையைத்
திண்மைமீங் காதவன் சிறைவைத் தானென
வெண்மைமீங் கியபுகழ் விரிந்த தென்னவே. 46

அவ்வழி யவ்விருள் பரந்த வாயிடை
எவ்வழி மருங்கினு மரக்க ரேகினர்
செவ்வழி மந்திரத் திசைய ராயினும்
வெவ்வழி யிருடர மிதித்து மீச்செல்வார். 47

இந்திரன் வளநகர்க் கேகு வாரியற்
சந்திர னுலகினைச் சார்கு வார்சலத்
தந்தக னுறையுளை யணுகு வாரயில்
வெந்தொழி லரக்கன தேவன் மேயினர். 48

பொன்னகர் மடந்தையர் விஞ்சைப் பூவையர்
பன்னக வனிதைய ரியக்கர் பாவையர்
முன்னின பணிமுறை மாறன் முந்துவார்
மின்னின மிடைந்தென மிதித்து மீச்செல்வார். 49

தேவரு மவுணருஞ் செங்க ணுகரும்
மேவரு மியக்கரும் விஞ்சை வேந்தரும்
யாவரும் விசும்பிரு ளிரிய வீண்டினர்
தாவரும் பணிமுறை தழுவுந் தன்மையார். 50

சித்திரப் பத்தியிற் றேவர் சென்றனர்
இத்துணை தாழ்ந்தன முனியு மென்றுதம்
முத்தினா ரங்களு முடியு மாலையும்
உத்தரீ யங்களுஞ் சரிய வோடுவார். 51

தீண்டருந் தீவினை தீக்கத் தீந்துபோய்
மாண்டற வுலர்ந்தது மாரு திப்பெயர்
ஆண்டகை மாரிவந் தளிக்க வாயிடை
ஈண்டற முளைத்தென முளைத்த திந்துவே. 52

வந்தன னிராகவன் றூதன் வாழ்ந்தனன்
எந்தையே யிந்திர ஞமென் றேமுறு
மந்தமில் கீட்டிசை யளக வாணுதற்
சுந்தரி முகமெனப் பொலிந்து தோன்றிற்றே. 53

கற்றைவெண் கவரிபோற் கடலின் வெண்டிரை
சுற்றுநின் றலம்வரப் பொலிந்து தோன்றிற்ருல்
இற்றதென் பகையென வெழுந்த விந்திரன்
கொற்றவெண் குடையெனக் குளிர்வெண் டிங்களே. 54

தெரிந்தொளிர் திங்கள்வெண் குடத்தி னற்றிரை
முரிந்துயர் பாற்கடன் முகந்து மூரிவான்
சொரிந்ததே யாமெனத் துள்ளி மீனெடும்
விரிந்தது வெண்ணிலா மேலுங் கீழுமே. 55

அருந்தவன் சுரபியோ வாதி வானவன்
விரிந்தபே ருதயமாம் மிளிர்வெண் டிங்களோ
வருந்தலில் பசுங்கதிர் வழங்கு தாரையாச்
சொரிந்தபா லொத்தது நிலவின் றேற்றமே. 56

எண்ணுடை யநுமன்மே லிழிந்த பூமழை
மண்ணிடை வீழ்கில மறித்தும் போகில
அண்ணல்வா ளரக்கனை யஞ்சி யாய்கதிர்
விண்ணிடைத் தங்கின போன்ற மீனெலாம். 57

எல்லியி னிமிரிருட் குறையு மவ்விருட்
கல்லிய நிலவென முறியுங் கவ்வின
புல்லிய பகையெனப் பொருவ போன்றன
மல்லிகை மலர்தொறும் வதிந்த வண்டெலாம். 58

வீசுறு பசுங்கதிர்க் கற்றை வெண்ணிலா
ஆசற வெங்கணா நுழைந்த னாயது
காசுறு கடிமதி லிலங்கைக் காவலூர்த்
தூசுறை யிட்டது போன்று தோன்றிற்றே. 59

இகழ்வரும் பெருங்குணத் திராம னெய்ததோர்
பகழியின் செலவென வநுமன் பற்றினால்
அகழ்புகுந் தாண்புகுந் திலங்கைக் கன்னவன்
புகழ்புகுந் துலாயதோர் பொலிவும் போன்றதே. 60





# இலங்கைமாதேவிவதைப்படலம்.

அவ்வழி யநுமனு மணுகலாம்வகை
எவ்வழி யென்பதை யுணர்வி னெண்ணினான்
செவ்வழி யொழுக்கினன் றேவ ரேத்தப்போய்
வெவ்வழி யரக்கரூர் மேவன் மேயினான். 1

ஆழியக மாகவரி தாயமரர் வாழும்
ஏழுலகின் மேலைவெளி காறுமுக டேறிக்
கேழரிய மாழையி னிழைத்தகிளர் வெள்ளத்
தாழிதிரி நாளுமலை யாமதிலை யுற்றான். 2

கலங்கலில் கடுங்கதிர்கண் மீதுகடி தேகா
அலங்கலயில் வஞ்சகனை யஞ்சியெனி லன்றால்
இலங்கைமதி லிங்கிதனை யேறலரி தென்றே
விலங்கியகல் கின்றன விளிந்தென வியந்தான். 3

தெவ்வளவி லாதவிறை சேறலுள தென்றால்
அவ்வளவ தன்றரண மண்டமிடை யாக
எவ்வளவி லுண்டுவெளி யீறுமது வென்னா
வெவ்வள வரக்கனை மனக்கொள வியந்தான். 4

மடங்கலரி யேறுமத மால்களிறு நாண
நடந்துதனி யேபுகுது நம்பிநனி மூதூர்
அடங்கரிய தானவயி லந்தகன தாணைக்
கடுந்திசையின் வாயனைய வாயிலெதிர் கண்டான். 5

மேருவை நிறுத்திவெளி செய்ததுகொல் விண்ணோர்
ஊர்புக வமைத்தபடி கால்கொ லுல கேழும்
சோர்வில நிலைக்கநடு விட்டதொரு தூணோ
நீர்புகு கடற்குவழி யோவென நினைந்தான். 6

எழுலகின் வாழுமுயி ரியாவையு மெதிர்ந்தால்
ஊழ்முறையி னன்றியுட னேபுகுத லொன்றோ
வாழிய ரியங்குவழி யீதென வகுத்தால்
ஆழியுள வேழினள வன்றுபகை யென்றான். 7

வெள்ளமொரு நூறொடொரு நூறுமிடை வீரக்
கள்ளவினை வெவ்வலி யரக்கரிரு கையும்
முள்ளெயிறும் வாளுமுறை மின்னமுறை நின்றார்
எள்ளரிய காவலினை யண்ணலு மெதிர்ந்தான். 8

சூலமழு வாளொடயி லேமர மூலக்கை
காலவரி விற்பகழி தற்பண முசுண்டி
கோல்கணைய நேமிகுலி சஞ்சரிகை குந்தம்
பாலமுத லாயுத மெடுத்தனர் பரித்தார். 9

அங்குச நெடுங்கவ ணடற்சிலை வழங்கும்
வெங்குலிச பாசமுதல் வெய்யபயில் கையார்
செங்குருதி யன்னசெறி குஞ்சியர் சினத்தோர்
பங்குனி மலர்ந்தொளிர் பலாசவன மொப்பார். 10

அளக்கலரி தாகிய கணக்கொடய னிற்கும்
விளக்கின மிருட்டினை விழுங்கிவெளி கால
உளக்கடிய காலன்மன முட்குமணி வாயில்
இளக்கமில் கடற்படை யிருக்கையை யெதிர்ந்தான். 11

எவ்வமர ரெவ்வுண ரெவருள ரென்னே
கவ்வைமுது வாயிலி னெடுங்கடை கடப்பார்
தெவ்வரிவர் சேமமிது சேவகனும் யாமும்
வெவ்வமர் தொடங்கிடி லெனுய்விளை யுமென்றான். 12

கருங்கடல் கடப்பதரி தன்றிநனி காவற்
பெருங்கடை கடப்பதரி தெண்ணியிறை பேரின்
அருங்கடன் முடிப்பவரி தாரமர் கிடைக்கின்
நெருங்கமர் விளைப்பர்நெடு நாளென நினைந்தான். 13

வாயில்வழி சேறலரி தன்றியும் வலத்தோர்
ஆயிலவர் வைத்தவழி யேகவழ கன்றால்
காய்கதி ரியக்கின்மதி லைக்கடிது தாவிப்
போயிநகர் புக்கிடுவ னென்றொரயல் போனான். 14

நாணா னுந்தா னல்கிய காவ னனிமூதூர்
வாணா ளந்நாள் போவதன் மேலே வழிநின்றாள்
தூணா மென்னுந் தோளுடை யானைச் சுடரோனைக்
காணா வந்தாள் கட்செவி யென்னக் கனல்கண்ணாள் 15

எட்டுத் தோளா னாலு முகத்தா னுலகேழுந்
தொட்டுப் பேருஞ் சோதி வலத்தாள் சுழல்கண்ணாள்
முட்டிப் போரின் மூவுல கத்தை முதலோடுங்
கட்டிச் சீறுங் காவல் வலத்தாள் கமையில்லாள். 16

பாரா நின்று ளெண்டிசை தோறும் பலரப்பால்
வாரா நின்று ரோவென மாரி மழையேபோல்
ஆரா நின்ற நூபுர மச்சந தருதாளாள்
வேரா மெய்யாண் மின்னி னிமைக்கு மிளிர்பூணாள். 17

வேல்வாள் சூலம் வெங்கதை பாசம் மிளிர்சங்கம்
கோல்வாள் சாபங் கொண்ட கரத்தாள் வடகுன்றம்
போல்வா டிங்கள் போழி னெயிற்றாள் புகைவாயால்
கால்வாள் காணிற் காலனு முட்குங் கதமிக்காள். 18

அஞ்சு வணத்தி னுடை யுடுத்தா ளரவெல்லாம்
அஞ்சு வணத்தின் வேக மிகுத்தா ளருளில்லாள்
அஞ்சு வணத்தி னுத்தரி யத்தா ளலையாரும்
அஞ்சு வணத்தின் முத்தொளி ராரத் தணிகொண்டாள். 19

சிந்தா ரத்தின் செச்சை யணிந்தா டெளிநூல்யாழ்
அந்தா ரத்தி னேர்வரு சொல்லா ளறைதும்பி
கந்தா ரத்தி னின்னிசை பன்னிக் களிகூறும்
மந்தா ரத்தின் மாலை யலம்பு மகுடத்தாள். 20

எல்லா முட்கு மாழி யிலங்கை யிகன்மூதூர்
நல்லா ளவ்வூர் வைகுறை யொக்கு நயனத்தாள்
நில்லாய் நில்லா யென்றுரை நேர்வா ணினையாமுன்
வல்லே சென்றாண் மாருதி கண்டான் வருகென்றான். 21

ஆகாய் செய்தா யஞ்சலை போனு மறிவில்லாய்
சாகா மூலந் தின்றுழல் வார்பாற் சலமென்னும்
பாகா ரிஞ்சிப் பொன்மதி றாவிப் பகையாதே
போகா யென்றாள் பொங்கன லென்னப் புகைகண்ணாள். 22

களியா வுள்ளத் தண்ணன் மனத்திற் கதமூள
விளியா நின்றே வீர நலத்தின் விதியோர்வான்
அளியா லிவ்வூர் காணு நலத்தா லணைகின்றேன்
எளியே னுற்றால் யாவ துனக்கிங் கிழவென்றான். 23

என்று முன்ன மேகென வேகா தெதிர்மாற்றஞ்
சொன்று யேநீ யாவ னடாவெதால் புரமட்டான்
அன்று ரன்று ரஞ்சுவ ரெய்த வளியத்தாய்
உன்று லெய்து மூர்கொலிவ் வூரென் றுறநக்காள். 24

நக்கா ளைக்கண் டையன் மனத்தோர் நகைகொண்டான்
நக்காய் நீயார் யார்சொல வந்தா யுனதாவி
உக்கா லேதா ஞேடலை யென்று ளினியிவ்வூர்
புக்கா லன்றிப் போகில னென்றான் புகழ்மிக்கான். 25

வஞ்சங் கொண்டான் வானர மல்லன் வருகாலன்
துஞ்சுங் கண்டா லென்னை யிவன்சூழ் திரையாழி
நஞ்சங் கொண்ட கண்ணுத லைப்போ னருகின்றான்
நெஞ்சங் கண்டே கல்லென நின்றே நினைவுற்றாள். 26

கொல்வா மன்றேற் கோளுறு மிவ்வூ ரெனல்கொண்டாள்
வெல்வாய் நீயே வெற்றி யெனத்தன் விழிதோறும்
வல்வாய் தோறும் வெங்கனல் பொங்க மதிவானிற்
செல்வா யென்று மூவிலை வேலைச் செலவிட்டாள். 27

தடித்தா மென்னத் தன்னெதிர் செல்லுந் தழல்வேலைக்
கடித்தா ளுகம் விண்ணின் முரிக்குங் கலுழன்போல்
ஒடித்தான் கையா லும்ப ருவப்ப வுயர்காலம்
பிடித்தா ணெஞ்சந் துண்ணென வெண்ணம் பிழையாதான். 28

இற்றுச் சூல நீறெழ லோடு மெரியொப்பாள்
மற்றுத் தெய்வப் பல்படை கொண்டே மலைவாளை
உற்றுக் கையா லாயுத மெல்லா மொழியாமற்
பற்றிக் கொள்ளா விண்ணிலெ றிந்தான் பழியில்லான். 29

வழங்குந் தெய்வப் பல்படை காணூண் மழைவான்மேல்
முழங்கும் மேக மென்ன வுரப்பி முரிகின்றாள்
கழங்கும் பந்துங் குன்றுகொ டாடுங் கரமோச்சித்
தழங்குஞ் செந்தீச் சிந்த வடித்தா டகையில்லாள். 30

அடியா முன்ன மங்கை யனைத்து மொருகையாற்
பிடியா வென்னே பெண்ணிவள் கொல்லிற் பிழையென்று
ஓடியா நெஞ்சத் தோரடி கொண்டா னுயிரோடும்
இடியே றுண்ட நாகமெ னப்பா ரிடைவீழ்ந்தாள். 31

விழுந்தா ளெழுந்தாள் வெங்குரு திச்செம் புனல்வெள்ளத்
தழுந்தா நின்றா ளன்முக னார்தம் மருளன்னி
எழுந்தாள் யாரும் யாவையு மெல்லா வுலகத்துந்
தொழுந்தாள் வீரன் றூதுவன் முன்னின் றிவைசொன்னாள். 32

ஐயகேள் வைய நல்கு மயனரு ளமைதி யாக
எய்தியிம் மூதூர் காப்ப னிலங்கையா வேனும் யானே
செய்தொழி லிழுக்கி யுள்ளந் திகைத்திந்தச் சிறுமை செய்தேன்
உய்தியென் றுரைத்தி யாயி னுணர்த்துவ லுண்மை யென்றாள்.

எத்தனை காலங் காப்பன் யானிந்த மூதூ ரென்று
முத்தனை வினவி னேற்கு முரண்வலிக் குரங்கொன் றுன்னைக்
கைத்தல மதனாற் றீண்டிக் கழிவதன் றென்னைக் காண்டி
சித்திர நகரம் பின்னைச் சிதைவது திண்ண மென்றான். 34

அன்னதே முடிந்த தைய வறம்வெல்லும் பாவந் தோற்கும்
என்னும தியம்ப வேண்டுந் தகையதோ வினிமற் றுன்னால்
உன்னிய தெல்லா முற்று முனக்குமுற் றாத துண்டோ
பொன்னகர் புகுதி யென்று புகன்றய னுலகம் புக்காள். 35





# ஊர்தேடு படலம்.

வீரனும் விரும்பி நோக்கி மெய்ம்மையே விளையு மஃதென்
றூரியன் கமல பாத மகத்துற வணங்கி யாண்டப்
பூரியா ரிலங்கை மூதூர்ப் பொன்மதி றாவிப் புக்கான்
சீரிய பாவின் வேலை சிறுபிரை தெறித்த தன்னான். 1

வான்றொடர் மணியிற் செய்த மையறு மாட கோடி
ஆன்றபே ரிருளைச் சீத்துப் பகல்செய்த வழகை நோக்கி
ஊன்றிய வுலகத் துச்சி யொற்றைவா ருருளைத் தேரோன்
தோன்றினன் கொல்லோவென்னா வறிவனுந் துணுக்க முற்றான்.

மொய்ம்மணி மாட மூதூர் முழுதிரு ளகற்றுந் தானே
மெய்ம்மையே யுணரில்யானோர்மிகையெனவிலங்கிப் போனான்
இம்மதி லிலங்கை நாப்ப ணெய்துமேற் றன்பா லெய்து
மிம்மினி யல்ல னோவவ் வெயிற்கதிர் வேந்த னென்றான். 3

பொசிவுறு பசும்பொற் குன்றிற் பொன்மதி னடுவட் பூத்து
வசையற விளங்குஞ் சோதி மணியினா லமைந்த மாடத்
தசைவிலிவ் விலங்கை மூதூ ராரிரு ளின்மை யாலே
நிசிசர ராயிற் றம்மா நெடுநகர் நிருத ரெல்லாம். 4

என்றனை னியம்பி வீதி யேகுத லிழுக்க மென்னுத்
தன்றகை யனைய மேனி சுருக்கிமா ளிகையின் சாரற்
சென்றனை னென்ப மன்னே தேவருக் கமுத மீந்த
குன்றெனை வயோத்தி வேந்தன் புகழெனக் குவவுத் தோளான்.

ஆத்துறு சாலை தோறு மானையின் கூடந் தோறும்
மாத்துறு மாடந் தோறும் வாசியின் பந்தி தோறுங்
காத்துறு கடைக டோறுங் கருங்கடல் கடந்த காலாற்
பூத்தொறுந் தாவிச் செல்லும் பொறிவரி வண்டிற் போனான். 6

பெரியநா ளொளிகொ ளுறு விதமணிப் பித்திப் பத்தி
சொரியுமா நிழல்க ளங்கே சுற்றலாற் காலின் மேன்றல்
கரியனுய் வெளிய னுகுஞ் செய்யனுய்க் காட்டுங் காண்டற்
கரியனு யெளிய னுய்த்தன் னகத்துறை யழக னேபோல். 7

கானக மயில்க ளென்னக் களிமட வன்ன மென்ன
ஆனன கமலப் போது பொலிதர வரக்கர் மாதர்
தேனுகு சரளச் சோலைத் தெய்வநீ ராற்றுத் தெண்ணீர்
வானவர் மகளி ராட்ட மஞ்சன மாடு வாரை. 8

ஈட்டுவார் தவம லான்மற் றீட்டினு வியைவ தின்மை
காட்டினர் விதியா ராகுங் காண்கிற்பார் காண்மி னம்மா
பூட்டுவார் முலைபொ ருத பொய்யிடை நையப் பூநீர்
ஆட்டுவா ரமரர் மாத ராடுவா ரரக்கர் மாதர். 9

இலக்கண மரபிற் கேற்ற வெழுவகை நரம்பி னல்யாழ்
அலர்த்தகைத் தளிர்க்கை நோவ வளந்தெடுத் தமைந்த பாடல்
கலக்குற முழங்கிற் றென்று கன்னியர் சேடி மார்கள்
மலர்க்கையான் மாடத் தும்பர் மழையின்வாய் பொத்து வாரை.

சந்தப்பூம் பந்தர் வேய்ந்த தமனிய வரங்கிற் றத்தம்
சிந்தித்த துதவுந் தெய்வ மணிவிளக் கொளிருஞ் சேக்கை
வந்தொத்துந் துருத மக்கள் விளம்பித நெறிவ ழாமற்
கந்தர்ப்ப மகளி ராடு நாடகங் காண்கின் றாரை. 11

திருத்திய பளிக்கு வேதி தெள்ளிய வேல்க ளென்னக்
கருத்தியல் புரைக்கு முண்கட் கருங்கயல் செம்மை காட்ட
வருத்திய கொழுநர் தம்பால் வரம்பின்றி வளர்ந்த காம
மருத்திய பயிர்க்கு நீர்போ லருநற வருந்து வாரை. 12

கோதறுங் குவளை நாட்டங் கொழுநர்கண் வண்ணங் கொள்ளத்
தூதளங் கனியை வென்று துவர்த்தவாய் வெண்மை தோன்ற
மாதரு மைந்தர் தாமு மொருவர்மே லொருவர் வைத்த
காதலங் கள்ளுண் டார்போன் முறைமுறை களிக்கின் றாரை. 13

விற்படர் பவளப் பாதத் தலத்தக மெழுதி மேனி
பொற்பள வில்லா வாசப் புனைநறுங் கலவை பூசி
அற்புத வடிக்கண் வாளி னஞ்சன மெழுதி யம்பொற்
கற்பகங் கொடுக்க நோக்கிக் கலன்றெரிந் தணிகின் றாரை. 14

புலியடு மதுகை மைந்தர் புதுப்பிழை யுயிரைப் புக்கு
நலிவிட வமுத வாயா னச்சுயிர்த் தயிற்க ணல்லார்
மெலிவுடை மருங்குன் மின்னி னலம்வரச் சிலம்பு விம்மி
ஒலிபட வுதைக்குந் தோறு மயிர்புள கிக்கின் றாரை. 15

உள்ளுடை மயக்கா லுண்கண் சிவந்துவாய் வெண்மை யூறித்
துள்ளுறு புருவங் கோட்டித் துடிக்கவேர் பொடிக்கத் தூய
வெள்ளிடை மருங்கு லார்த மதிமுகம் வேறொன் றாகிக்
கள்ளிடைத் தோன்ற நோக்கிக் கணவரைக் கனல்கின் றாரை. 16

ஆலையின் மலரிற் சாரன் முழையினி லமுத வாரிச்
சோலையிற் றுவச ரில்லிற் சோனகர் மனையிற் றாய
வேலையிற் கொளவு ணாத வேற்கணார் குமுதச் செவ்வாய்
வாலெயி றூறுந் தீந்தேன் மாந்தினர் மயங்கு வாரை. 17

நலனுறு கணவர் தம்மை நவையுறப் பிரிந்து போந்து
முலையுறு கலவை தீய முள்ளிலா முளரிச் செங்கேழ்
மலர்மிசை மலர்பூத் தன்ன வளைக்கையான் வதனந் தாங்கி
அலம்வரு முயிரி னோடு நெடிதிருந் தயர்கின் றாரை. 18

ஏதியங் கொழுநர் தம்பா லெய்திய கலாத்தர் வைகுந்
தாதியங் கமலச் சேக்கை யுயிரிலா வுடலிற் சாய்வார்
மாதுயர்க் காத றூண்ட வழியின்மேல் வைத்த கண்ணார்
தூதியர் முறுவ னோக்கி யுயிர்வந்து துடிக்கின் றாரை. 19

சங்கொடு சிலம்பு நூலும் பாதசா லகமுந் தாழப்
பொங்குபன் முரச மார்ப்ப வில்லுறை தெய்வம் போற்றிக்
கொங்கலர் கூந்தற் செவ்வா யரம்பையர் பாணி கொட்டி
மங்கல கீதம் பாட மலர்ப்பலி வகுக்கின் றாரை. 20

இழைதொடர் வில்லும் வாளு மிருளொடு மலைய யாணர்க்
குழைதொடர் நயனக் கூர்வேற் குமரர்நெஞ் சுருவக் கோட்டி
முழைதொடர் சங்கம் பேரி முகிலென முழங்க மூரி
மழைதொடர் மஞ்ஞை யென்ன விழாவொடு வருகின் றாரை. 21

பள்ளியின் மைந்த ரோடு மூடிய பண்பு நீங்கி
ஒள்ளிய கலவிப் பூச லுடற்றுதற் குருத்த நெஞ்சர்
மெள்ளவே யிமையை நீக்கி யஞ்சன விழுது வேய்ந்த
கள்ளவா ணெடுங்க ணென்னும் வாளுறை கழிக்கின் றாரை. 22

ஒவிய மனைய மாத ரூடின ருணர்வோ டுள்ளம்
மேவிய கரண மற்றுங் கொழுநரோ டொழிய யாணர்த்
தூவியம் பேடை யென்ன மின்னிடை துவள வேகி
ஆவியுந் தாமு மேபுக் கருங்கத வடைக்கின் றுரை. 23

இன்னர மிதுனம் பாட விண்மழை கிழித்துத் தோன்று
மின்னெனத் தரளம் வேய்ந்த வெண்ணிற விமான மூர்ந்து
பன்னக மகளிர் சுற்றிப் பலாண்டிசை பரவப் பண்ணைப்
பொன்னகர் வீதி தோறும் புதுமனை புகுகின் றுரை. 24

கோவையுங் குழையு மின்னக் கொண்டலின் முரச மார்ப்பத்
தேவர்வந் தாசி கூற முனிவர்சோ பனங்கள் செப்பப்
பாவையர் குழாங்கள் சூழப் பாட்டொடு வான நாட்டுப்
பூவையர் பலாண்டு கூறப் புதுமணம் புணர்கின் றுரை. 25

இயக்கிய ரரக்கி மார்க ளாகிய ரெஞ்சில் விஞ்சை
முயற்கறை மலராத் திங்கண் முகத்தினர் முதலி னோரை
மயக்கற நாடி யேகு மாருதி மலையின் வைகுங்
கயக்கமி றுயிற்சி யானைக் கருணனைக் கண்ணிற் கண்டான். 26

ஓசனை யேழுகன் றுயர்ந்த வும்பரின்
வாசவன் மணிமுடி கவிந்த மண்டபம்
ஏச்சற விளங்கிய திருவை யெண்வகை
ஆசையி னிலைகெட விளக்க லான்றது. 27

அன்னத னடுவணோ ரமளி மீமிசைப்
பன்னக வரசெனப் பரவை தானெனத்
துன்னிரு ளொருவழி தொக்க தாமென
உன்னருந் தீவினை யுருக்கொண் டென்னவே. 28

முன்னிய கனைகடன் முழுகி மூவகைத்
தன்னியல் கதியொடு தழுவித் தாதுகு
மன்னெடுங் கற்பக வனத்துள் வைகிய
இன்னிளந் தென்றல்வந் திழுகி யேகவே. 29

வானவர் மகளிர்கால் வருட மாமதி
ஆனனங் கண்டமண் டபத்து ளாய்கதிர்க்
கானகு காந்தமீக் கான்ற காமநீர்
தூநிற நறுந்துளி முகத்திற் றூற்றவே. 30

மூசிய வுயிர்ப்பெனு முடுகு வாதமும்
வாசலின் புறத்திடை நிறுவி வன்மையான்
நாசியி னளைவயி னடத்தக் கண்டவன்
கூசினன் குதித்தனன் குலைத்த கையினான். 31

பூழியின் றொகைவிசும் பணவப் போய்ப்புகுங்
கேழில்வெங் கிளர்கிடை யுயிர்ப்புக் கேடிலா
வாழிய வுலகெலாந் துடைக்கு மாருதம்
ஊழியின் வரவுபார்த் துழல்வ தொத்ததே. 32

பகையென மதியினைப் பகுத்துப் பாடுற
வகையில்பேழ் வாய்மடுத் தருந்து வானெனப்
புகையொடு முழங்குபே ருயிர்ப்புப் பொங்கிய
நகையிலா முழுமுகத் தெயிறு நாறவே. 33

தடைபுகு மந்திரந் தகைந்த நாகம்போல்
இடைபுக லரியதோ ருறக்க மெய்தினான்
கடையுக முடிவெனுங் காலம் பார்த்தயல்
புடைபெய ராநெடுங் கடலும் போலவே. 34

ஆவ தாகிய தன்மைய வரக்கனை யரக்கர்
கோவெ னுநின்ற குணமிலி யிவனெனக் கொண்டான்
காவ லுட்டங்கள் பொறியுகக் கனலெனக் கனன்றான்.
ஏவ லேனிவன் மூவரி னொருவனு மீட்டான். 35

குறுகி நோக்கிமற் றவன்றலை யொருபதுங் குன்றத்
திறுகு திண்புய மிருபது மிவற்கிலை யென்னு
மறுகி யேறிய முனிவெனும் வடவைவெங் கனலை
அறிவெ னும்பெரும் பரவையம் புனலினு லவித்தான். 36

அவித்து நின்றெவ னுகினு மாகவென் றங்கை
கவித்து நீங்கிடச் சிலபக லென்பது கருதாச்
செவிக்குத் தேனென விராகவன் புகழினைத் திருத்தும்
கவிக்கு நாயக னனையவ னுறையுளைக் கடந்தான். 37

மாட கூடங்கண் மாளிகை யோளிகள் மகளிர்
ஆட ரங்குக ளம்பலந் தேவரா லயங்கள்
பாடல் வேதிகை பட்டிமண் டபமுதற் பலவும்
நாடி யேகின னிராகவன் புகழன்ன நலத்தான். 38

மணிகொள் வாயிலிற் சாளரத் தாள்களின் மலரில்
கணிகொ ளுளத்திற் காலினும் புகையினுங் கலக்கும்
நுணுகும் வீங்குமற் றவனிலை யாவரே நுவல்வார்
அணுவின் மேருவி னுழியா னெனச்சொலு மறிவான். 39

ஏந்த லிவ்வழி யெவ்வழி மருங்கினு மெய்திக்
காந்தண் மெல்விரன் மடந்தையர் யாரையுங் காண்பான்
வேந்தர் வேதியர் மேலுளோர் கீழுளோர் விரும்பப்
போந்த புண்ணியன் கண்ணகன் கோயிலுட் புக்கான். 40

பளிக்கு வேதிகைப் பவளத்தின் கூடத்திற் பசுந்தேன்
துளிக்குங் கற்பகப் பந்தரிற் கருநிறத் தோரை
வெளித்து வைகுவ தருமையென் றவுருரு மேவி
ஒளித்து வாழ்கின்ற தருமமன் ருன்றனை யுற்றுன். 41

உற்று நின்றவ னுணர்வைத்தன் னுணர்விஞ லுணர்ந்தான்
குற்ற மில்லதோர் குணத்தின னிவனெனக் கொண்டான்
செற்ற நீங்கிய மனத்திஞ னெருசிறை சென்றுன்
பொற்றை மாடங்கள் கோடியோர் நொடியிடைப் புக்கான். 42

மூந்த ரம்பையர் முதலினர் முழுமதி முகத்துச்
சிந்து ரம்பயில் வாய்ச்சியர் பலரையுந் தெரிந்து
மந்தி ரம்பல கடந்தவன் மனத்தின்முன் செல்வான்
இந்தி ரன்சிறை யிருந்தவா யிலின்கடை யெதிர்ந்தான். 43

ஏதி யேந்திய தடக்கையர் பிறையெயிற் றரக்கர்
மூது ரைப்பெருங் கதைகளும் பிதிர்களு மொழிவார்
ஓதி லாயிர மாயிர முரண்வலி யரக்கர்
காது வெஞ்சினக் களியினர் காவலைக் கடந்தான். 44

முக்க ணுக்கனன் முதன்மக னறுவகை முகனும்
திக்கு நோக்கிய புயங்களுஞ் சிலகரந் தனையான்
ஒக்க நோக்கியர் குழாத்திடை யுறங்குகின் ருனைப்
புக்கு நோக்கினன் புகைபுகா வாயிலும் புகுவான். 45

வளையும் வாளெயிற் றரக்கனே கணிச்சியான் மகனே
அளையில் வாளரி யனையவன் யாவனே வறியேன்
இளைய வீரனு மேந்தலு மிவனுமென் னுவர்
உளையுமுள்ளம்போர்விளைந்தஞான்றுணர்துமென்றுணர்ந்தான்.

இவனை யின்றுணை யுடையனு மிராவணற் கென்னே
புவன மூன்றையும் வென்றதோர் பொருளெனப் புகலெஞ்
சிவனை நான்முகத் தொருவனைத் திருநெடு மாலாம்
அவனை யல்லது நிகர்ப்பவ ரென்பது மறிவோ. 47

என்று கைம்மறித் திடைநின்று காலத்தை யிகப்ப
தன்று போவதென் றுயிரத் தளவினு மடங்காத்
துன்று மாளிகை யோளிக ளிரிசறத் துருவிச்
சென்று தேடினை னிந்திர சித்தினைத் தீர்ந்தான். 48

அக்கன் மாளிகை கரந்துபோய் மேலதி காயன்
தக்க கோயிலுந் தம்பிய ரில்லமுந் தாவித்
தொக்க மந்திரத் தலைவர்மா மனைகளுந் துருவிப்
புக்கு நீங்கின னெடியிலோ ராயிரம் புக்கில். 49

இன்ன ராகிய விரும்படைத் தலைவர்க ளிருக்கைப்
பொன்னின் மாளிகை யாயிர கோடியும் புக்கான்
கன்னி மாநகர்ப் புறத்தகன் கரந்துறை காண்பான்
சொன்ன மூன்றினு நடுவணத் தகழியைத் தொடர்ந்தான். 50

தனிக்க டக்களி றெனவொரு துணையிலன் சார்வான்
பணிக்க டற்பெருங் கடவுடன் பரிபவந் துடைப்பான்
இனிக்க டப்பதன் றேழ்கடல் கிடந்ததென் றிசைத்தான்
கனிக்க டற்கதிர் தொடர்ந்தவ னகழியைக் கண்டான். 51

பாழி நன்னெடுங் கிடங்கெனப் பகர்வரேற் பலபேர்
ஊழி காலநின் றுலகெலாங் கல்லினு முடியா
ஆழி வெஞ்சினத் தரக்கனை யஞ்சியாழ் கடல்கள்
ஏழு மிந்நகர் சுலாயது கொலாமென விசைத்தான். 52

ஆய தாகிய வகன்புன லகழியை யடைந்தான்
தாய வேலையி ன்இருமடி விசைகொண்டு தாவிப்
போய காலத்தும் போக்கரி தென்பது புகன்றான்
நாய கன்புகழ் நடந்தபே ருலகெலா நடந்தான். 53

மேக்கு நால்வகை மேகமுங் கீழ்விழத்
தூக்கி னலன்ன தோயத்த தாய்த்துயர்
ஆக்கி னன்படை யன்ன வகழியை
வாக்கி னலுரை வைக்கலு மாகுமோ. 54

ஆனை மும்மத மும்பரி யாழியும்
வான மங்கையர் குங்கும வாரியும்
நான மாதர் நறைக்குழ லவியுந்
தேனு மாரமுந் தெய்வமு நாறுமால். 55

உன்னு நாரை மகன்றில் புகாரளி
அன்னங் கோழிவண் டானங்க ளாழிப்புள்
கின்னர ரங்குரண் டங்கிலுக் கஞ்சிரல
சென்னங் காகங் குணாலஞ் சிலம்புமே. 56

நலத்த மாதர்த நல்லகி லவியும்
அலத்த கக்குழம் பும்மீளந் தாடிய
விலக்க ணக்கரி யோடிள மென்னடைக்
குலப்பி டிக்குமொ ரூடல்கொ டுக்குமால். 57

நறவு நாறிய நாணறுந் தாமரை
துறைக டோறு முகிழ்த்தன தோன்றுமால்
சிறையி னெய்திய செல்வி முகத்திலே
றெவு தாமுடை யாரொடுங் கார்களோ. 58

பளிங்கு செற்றிக் குயிற்றிய பாயொளி
விளிம்பும் வெள்ளமு மெய்தெரி யாதுமேல்
தெளிந்த சிந்தைய ருஞ்சிறி யார்களோ
டளிந்த போதறி தற்கெளி தாவரோ. 59

நீல மேமுத னன்மணி நித்திலம்
மேல கீழபல் வீஒுளி வீசலால்
பாலின் வேலை முதற்பல வேலையும்
கால்க லந்தனவேயெனக் காட்டுமால். 60

அன்ன வேலை யகழியை யார்கலி
என்ன வேகடந் திஞ்சியும் பிற்படத்
துன்ன ருங்கடி மாநகர் துன்னினன்
பின்ன ரெய்திய தன்மையும் பேசுவாம். 61

கரிய நாழிகை பாதியிற் காலனும்
வெருவி யோடு மரக்கர்தம் வெம்பதி
ஒருவ னேயொரு பன்னிரு யோசனைத்
தெருவு மூன்றுநூ றுயிரந் தேடினன். 62

வேரியு மடங்கின நெடுங்கடல் விளைக்கும்
பாரியு மடங்கின தடங்கியது பாடல்
காரிய மடங்கினர்கள் கம்மியர்கள் வெம்மைத்
தூரிய மடங்கின தொடங்கிய துறக்கம். 63

இறங்கிய நிறங்கொள்கரி யேமமுற வெங்கும்
கறங்கின மறங்கொளெயில் காவலர் துடிக்கண்
பிறங்கின நறுங்குழல ரன்பர்பிரி யாதோர்
உறங்கினர் மறங்கிளரு மூடினவ ரல்லார். 64

புடந்தரு குடங்கொள்புய மைந்தர்கல விப்போர்
கடந்தன ரிடைந்தனர் களித்தமயில் போலும்
மடந்தையர் தடந்தன முகட்டிடை மயங்கிக்
கிடந்தனர் நடந்தது புணர்ச்சிதரு கேதம். 65

வாமநறை யின்றுறை மயங்கினர் மறந்தார்
காமநறை யின்றிற நுகர்ந்தனர் களித்தார்
பூமனறை வண்டறை யலங்கமளி புக்கார்
தூமநறை யின்றுறை யயின்றிலர் துயின்றார். 66

பண்ணிமை யடைத்தபல கட்பொருநர் பல்வேய்
விண்ணிமை யடைத்தென விளைந்ததிருள் வீணை
தண்ணுமை யடைத்தன தழங்கிசை வழங்கும்
கண்ணிமை யடைத்தென வடைத்தன கபாடம். 67

விரிந்தன நரந்தமுதல் மென்மலர் விளாகத்
துருஞ்சிவரு தென்றலுயி ரின்புடை யுலாவச்
சொரிந்தன கருங்கண்வரு துள்ளிதரு வெள்ளம்
எரிந்தன பிரிந்தவர்த மெஞ்சுதனி நெஞ்சம். 68

இளக்கரிழு தெஞ்சவிழு மெண்ணரும் விளக்கைத்
துளக்கியது தென்றல்பகை சோர்புணரு வாரின்
அளக்கரொ டளக்கரிய வாசையொடு வீசா
விளக்கென விளக்குமணி மையறு விளக்கம். 69

நித்தநிய மத்தொழில ராய்நிறையு ஞானத்
துத்தம ருறங்கினர்கள் யோகியர் துயின்றார்
மத்தமத வெங்களி றுறங்கின் மயங்கிப்
பித்தரு முறங்கின ரினிப்பிறரி தென்னும். 70

ஆயபொழு தம்மதி லகத்தரசர் வைகும்
தூயதெரு வொன்றொடொரு கோடிதுரு விப்போய்த்
தீயவ னிருக்கையயல் செய்தவக ழிஞ்சி
மீயது கடந்தனன் வினைப்பகையை வென்றான். 71

போரி யற்கை யிராவணன் பொன்மனை
சீரி யற்கை நிரம்பிய திங்களாத்
தார கைக்குழு விற்றழு வித்தொ டர்
நாரி யர்க்குறை வாமிட நண்ணினான். 72

மூயற்க ருங்கறை நீங்கிய மொய்ம்மதி
அயர்க்கும் வாண்முகத் தாரமு தன்னவர்
இயக்கர் மங்கையர் யாவரு மீண்டினார்
நயக்கு மாளிகை வீதியை நண்ணினான். 73

தழைந்த மொய்யொளி மெய்மணித் தாழ்தொறும்
இழைந்த நூலினு மின்னிளங் காலினும்
நுழைந்து நொய்தினின் மெய்யுற நோக்கினான்
விழைந்த வெவ்வினை வேரற வீசினான். 74

அத்தி ரம்புனை யானை யரக்கன்மேல்
வைத்த சிந்தையர் வாங்கு மூயிர்ப்பினர்
பத்தி ரம்புனை நாட்டம் பதைப்பறச்
சித்தி ரங்களௌனவிருந் தார்சிலர். 75

அள்ளல் வெஞ்சர மாரனை யஞ்சியோ
மெள்ள வேகன வின்பயன் வேண்டியோ
கள்ள மென்கொ லறிந்திலங் கண்மூகிழ்த்
துள்ள மன்றி யுறங்குகின் றார்சிலர். 76

பழுதின் மன்மதன் வெங்கணை பன்முறை
உழுத கொங்கைய ரூச லுயிர்ப்பினர்
அழுது செய்வதென் னாணை யரக்கனை
எழுத லாங்கொலென் றெண்ணுகின் றார்சிலர். 77

ஆவ தொன்றரு ளாயென தாவியைக்
கூவு கின்றிலை கூறலை சென்றோனாப்
பாவை பேசுவ போற்கண் பனிப்புறப்
பூவை யோடும் புலம்புகின் றார்சிலர். 78

ஈரத் தென்ற விழுத மெலிந்ததம்
பாரக் கொங்கையைப் பார்த்தனர் பாதகன்
வீரத் தோள்களின் வீக்க நினைந்துயிர்
சோரச் சோரத் துளங்குகின் றார்சிலர். 79

நக்க செம்மணி நாறிய நாணிழல்
பக்கம் வீசுறு பள்ளியிற் பற்பகல்
ஒக்க வாசை யுலர்த்த வுலர்ந்தவர்
செக்கர் வான்றரு திங்களொத் தார்சிலர். 80

வாளி னாற்றெளி கற்பக வல்லியர்
தூளி னாற்றிய தூங்கம ளித்துயில்
நாளி னாற்செவி யிற்புக நாமயாழ்த்
தேளி னாற்றிகைப் பெய்துகின் றார்சிலர். 81

கவ்வு தீக்கணை மேருவைக் கால்வளைத்
தெவ்வி னான்மலை யேந்திய வேந்தறோள்
வவ்வு சாந்துதம் மாமுலை வெளவிய
செவ்வி கண்டு குலாவுகின் றார்சிலர். 82

கூடி நான்குயர் வேலையுங் கோக்கநின்
ருடி ணுன்புக ழுங்கை நரம்பிருல்
நாடி நாற்பெரும் பண்ணு நயப்புறப்
பாடி ணுன்புகழ் பாடுகின் ருர்பலர். 83

இனைய தன்மை யியக்கிய ரெய்திய
மனையொ ராயிர மாயிரம் வாயில்போய்
அனைய வன்குலத் தாய்வளை யாரிடம்
நினைவி னெய்தின னீதியி னெய்தினுன். 84

எரிசுடர் மணியின் செங்கே ழிளவெயி லிடைவி டாது
விரியிருள் பருகு நாளும் விளக்கின்றி விளங்கு மாடத்
தரிவையர் குழுவு நீங்க வாசையுந் தாமு மேயாய்
ஒருசிறை யிருந்து போன வுள்ளத்தோ டுடு வாரும். 85

நகையெரிக் கற்றை நெற்றி நாவிதோய்ந் தனைய வோதி
புகையெனத் தும்பி சுற்றப் புதுமலர்ப் பொங்கு சேக்கை
பகையென வேகி யாணர்ப் பளிங்குடைச் சீதப் பள்ளி
மிகையுயி ரோடுங் காம விம்மலின் வெதும்பு வாரும். 86

சவிபடு தகைகார் வானந் தாளெருரு மேனி யாகக்
குவியுமீ ருர மாக மின்கொடி மருங்கு லாகக்
கவிரொளிச் செக்கர்க் கற்றை யோதியா மழையுண் கண்ணு
அவிர்மதி நெற்றி யாக வந்தியா ளொக்கின் ருரும். 87

பானலுண் கண்ணும் வண்ணப் படிமுறை மாறப் பண்ணைச்
சோனைமெல் லளிகள் பம்பச் சுரிகுழற் கற்றை சோர
மேனிமிர்ந் தெழுந்த மாட வெண்ணிலா முன்றி னண்ணி
வானமீன் கையின் வாங்கி மணிக்கழங் காடு வாரும். 88

உழையுழை பரந்த வான யாற்றுநின் றும்பர் நாட்டுக்
குழைமுகத் தாயந் தந்த புனல்குளிர்ப் பிலவென் றூடி
இழைதொடுத் திலங்கு மாட மிடைதடு மாற வேறி
மழைபொதுத் தொழுகு நீரான் மஞ்சன மாடு வாரும். 89

பன்னக வரசர் செங்கேழ்ப் பணமணி வலிதிற் பற்றி
இன்னுயிர்க் கணவ னீந்தா னெமன விருத்தி விஞ்சை
மன்னவர் முடியும் பூணு மாரமும் பணைய மாகப்
பொன்னிமை பலகைச் சூது துயில்கிலர் பொருகின் றாரும். 90

தென்னவெ னமுதப் பாடல் சித்திய ரிசைப்பத் தீஞ்சொற்
பன்னக மகளிர் வள்வார்த் தண்ணுமை பாணி பேணப்
பொன்னகர்த் தரளப் பந்தர்க் கற்பகப் பொதும்பர் பொற்றோள்
இன்னகை யரம்பை மாரை யாடல்கண் டிருக்கின் றாரும். 91

ஆணியிற் கிடந்த காத லகஞ்சுட வருவி யுண்கண்
சேணுய ருறக்கந் தீர்ந்த சிந்தையர் செய்வ தோரார்
வீணையுங் குழலுந் தத்த மிடறும்வேற் றுமையுந் தீர்ந்த
பாணிதள் ளாது பாட லமிர்துகப் பாடு வாரும். 92

தண்டலை வாழை யன்ன குறங்கிடை யல்குற் றட்டில்
கொண்டபூந் துகிலுங் கோவைக் கலைகளுஞ் சோரக் கூன்கள்
உண்டலம் வந்த கண்ணே சேவிட் டுலாவு கின்ற
குண்டலந் திருவில் வீசக் குரவையிற் குழறு வாரும். 93

நச்செனக் கொடிய நாகக் கள்ளொடு குருதி கக்கிப்
பிச்சுறிற் பிதற்றி யல்குற் பூந்துகில் கலாபம் பீறிக்
குச்சரித் திறத்தி ஞேசை களங்கொளக் குழூக்கொண் டண்டிச்
சச்சரிப் பாணி கொட்டி நிறைதடு மாறு வாரும். 94

தயிர்நிறத் தெறுக ளுள்ளந் தீனத்த மறிவு தள்ளப்
பயிர்வுறத் தெய்வ மென்மேற் படிந்தது பார்மி னென்று
உயிருயிர்த் திரண்டு கையு முச்சிமே லுயர நீட்டி
மயிர்சிலிர்த் துடலுங் கூசி வாய்விரித் தொடுங்கு வாரும். 95

இத்திறத் தரக்கர் மாத ரீரிரு கோடி யீட்டம்
பத்திய ருறையும் பத்திப் படர்நெடுந் தெருவும் பார்த்தான்
சித்திய ருறையு நாகர் தெருவும்பின் னுகச் சென்றான்
உத்திசை விஞ்சை மாத ருறையுளே முறையி னுற்றான். 96

வளர்ந்த காதலர் மகரிகை நெடுமுடி யரக்கனே வரக்காணார்
தளர்ந்த சிந்தைதம் மிடையினு நுடங்கிட வுயிர்கொடு தடுமாறிக்
களைந்த காநெடுங் கருவியிற் கல்வியிற் செயிரியர் கலைக்கண்ணு
லளந்த பாடல்வெவ் வரவுதஞ் செவிபுக வலம்வர லுறுகின்றார்.

புரியு நன்னெறி முனிவரும் புலவரும் புகல்கிலாப் பொறைகூர
எரியும்வெஞ்சமத் திகலடுங்கொடுந்திறலி ராவணற்கெஞ்ஞான்றும்
பரியுநெஞ்சினரிவரெனவயிர்த்ததோர்பகைகொடுபணித்திங்கள்
சொரியும்வெங்கதிர் துணைமுலைக்குவைசுடக்கொடிகளிற்றுடிக்
[கின்றார்.

சிறுகு காலங்க ளூழிக ளாம்வகை திரிந்துசிந் தனைசிந்த
முறுகு காதலின் வேதனை யுழப்பவர் முயங்கினர் முலைமுன்றில்
இறுகு சாந்தமு மெழுதுகிற் குறிகளு மின்னுயிர்ப் பொறையீர
மறுகிவாட்கண்கள்சிவப்புறநோக்கினர்வயிர்த்தனருயிர்க்கின்றார்.

ஆய விஞ்சையர் மடந்தைய ருறைவிட
மாறிரண் டமைகோடி
தூய மாளிகை நெடுந்தெருத் துருவிப்போய்த்
தொலைவின்றோன் றுலகிற்கும்

நாய கன்பெருங் கோயிலை நண்ணுவான்
கண்டன னளிர்திங்கள்
மாய நந்திய வாண்முகத் தொருதனி
மயன்மகண் மணிமாடம். 100

கண்டு கண்ணொடுங் கருத்தொடுங் கடாவினன்
காரணங் கடைநின்ற
துண்டு வேறொரு சிறப்பெங்க ணயகற்
குயிரினு முரியாளைக்
கொண்டு போந்தவன் வைத்ததோ ருறையுள்சொல்
குலமணி மனைக்கெல்லாம்
விண்டு வின்றிரு மார்பினின் மணியொத்த
திதுவென வியப்புற்றான். 101

அரம்பைமேனகைதிலோத்தமையுருப்பசியாதியாவலர்க்காமன்
சரம்பெய் தூணிபோற் றளிரடி தாங்தொடச் சாமரை பணிமாறக்
கரும்பை யுஞ்சுவை கைப்பித்த சொல்லியர் காமரங் கனியாழின்
நரம்பி னின்னிசை செவிபுக நாசியிற் கற்பக விரைநாற. 102

விழைவு நீங்கிய மேன்மையோ ராயினுங்
கீழ்மையோர் வெகுளூற்றால்
பிழைகொ னன்மைகொல் பெறுவதென் றையுறு
பீழையாற் பெருந்தென்றல்
உழையர் கூவப்புக் கேகெனப் பெயர்வதோ
ரூசலி னுளதாகும்
பழையம் யாமெனப் பண்பில செய்வரோ
பரிணதர் பயனோர்வார். 103

இன்ன தன்மையி னெரிமணி விளக்கங்க
　　ளெழில்கெடப் பொலிகின்ற
தன்ன தின்னொளி தழைப்புறத் துயிலுறு
　　தையலைத் தகைவில்லான்
அன்ன னாகிய சானகி யிவளென
　　வயிர்த்தகத் தெழுவெந்தீத்
துன்னு மாருயி ருடலொடுஞ் சுடுவதோர்
　　துயருழந் திவைசொன்னான். 104

எற்புவான்றொடர்யாக்கையாற்பெறும்பயனிழந்தனனிதுநிற்க
அற்பு வான்றனை யிற்பிறப் பதனொடு மழிந்துதன் னருந்தெய்வக்
கற்பு நீங்கிய கனங்குழை யிவளெனிற் காகுத்தன் புகழோடும்
பொற்பும் யானுமிவ் விலங்கையு மரக்கரும் பொன்றுது மின்றென்
　　　　　　　　　　　　　　　　　　　　　　　　[றான்.
மானு யர்த்திரு வடிவின ளவளிவண் மாறுகொண் டனள்கூறின்
தானி யக்கியோ தானவர் தையலோ வையுறுந் தகையானுள்
கானு யர்த்ததா ரிராமன்மே னோக்கிய காதல்கா ரிகையாட்கு
மீனு யர்த்தவன் மருங்குதான் மீளுமோ நினைத்தது மிகை
　　　　　　　　　　　　　　　　　　　　　　　　[யென்றான்.
இலக்க ணங்களுஞ் சிலவுள வென்னினு
　　மெல்லைசென் றிறுகல்லா
அலக்க ணெய்துவ தணியதுண் டென்றெடுத்
　　தறைகின்ற திவள்யாக்கை
மலர்க்க ருங்குழல் சோர்ந்துவாய் வெரீஇச்சில
　　மாற்றங்கள் பறைகின்றாள்
உலக்கு மிங்கிவள் கணவனு மழிவுமிவ்
　　வுயர்நகர்க் குளதென்றான். 107

என்று ணர்ந்துநின் றேழுறு மிந்நிலை நிற்கவித் திறனென்றுப்
பின்று சிந்தையன் பெயர்ந்தன னெடுமனைபிற்படப்பெருமேருக்
குன்றுகுன்றியாந்தகையுறவோங்கியகொற்றமாளிகைதன்னில்
சென்று புக்கன னிராவணற் கெடுப்பருங்கிரியெனத் திரடோ
[ளான்.

நிலந்து டித்தது நெடுவரை பொடித்தது நிருதர்தங் குலமாதர்
பொலந்துடிக்கமைமருங்குல்போற்கண்களும்புருவமும்பொற்றோ
வலந்துடித்தனமாதிரந்துடித்தனதடித்தின்றிமதிவானம் [ளும்
கலந்தி டித்தது வெடித்தன பூரண மங்கல கலசங்கள். 109

புக்குநின்றுதன்புலன்கொடுநோக்கினன்பொருவருந்திருவுள்ளம்
நெக்கு நின்றன னீங்குமந் தோவிந்த நெடுநகர்த் திருவென்ன
எக்கு லங்களின் யாவரே யாயினு மிருவினை யெல்லார்க்கும்
ஒக்குமூழ்முறையல்லதுவலியதொன்றில்லெனவுணர்வுற்றான்.

நூற்பெருங்கடனுணங்கியகேள்வியனேக்கினனியனென்றாள்
வேற்பெருங்கடல்புடைபரந்தீண்டியவெள்ளிடைவியன்கோயில்
பாற்பெருங்கடற்பன்மணிப்பஃறிரைப்பரப்புடைப்படர்வேலை
மாற்பெ ருங்கடல் வதிந்ததே யனையதோர் வனப்பினிற் றுயில்
[வானை.

குழவி ஞாயிறு குன்றிவர்ந் தனையன
குருமணி நெடுமௌலி
இழைக ளோடுநின் றிளவெயி லெறித்திட
விரவெனும் பொருள்வீய
முழைகொண் மேருவின் பொகுட்டிடைக் கனகனை
முருக்கிய முரட்சீயம்
தழைகொ டோளொடு தலைபல பரப்பிமுன்
றுயில்வதோர் தகையானை. 112

ஆய பொற்கலத் தாய்வளை யரம்பைய ராயவ ரணிநின்று
தூய வுக்கங்க ளியக்கினர் துயில்வரச் சுழிபடு பசுங்காற்றின்
வீய கற்பகத் தேன்றுளி விராயன வீழ்தொறு நெடுமேனி
தீய கற்சூடிச் சீதையை நினைதொறு முயிர்த்துயிர் தேய்வானை.

குழந்தைவெண்மதிக்குடுமியனெடுவரைகுலுக்கியகுலத்தோளைக்
கழிந்து புக்கிடை கலந்தன வநங்கன்வெங் கடுங்கணை பலபாய
உழந்த வெஞ்சமத் துயர்திசை யானையி னொளிமருப் புற்றிற்ற
பழந்த ழும்பினுக் கிடையிடை யேசில பசும்புண்க ளசும்பூற.

சாந்தளாவியகலவைமேற்றவழ்வுறுதண்டமிழ்ப்பசுந்தென்றல்
ஏந்து காமவெங் கனலினுக் குமிழதட் டூருத்தியி னுயிர்ப்பேறக்
காந்தண்மெல்விரற்சனகிபான்மனமுதற்கரணங்கள்கடிதோடப்
பாந்த ணீங்கிய முழையெனக் குழைவுறுநெஞ்சுபாழ் பட்டானை.

கொண்டபே ருக்க மூளத் திசைதொறுங் குறித்து மேனாள்
மண்டிய செருவின் மானத் தோள்களால் வாரி வாரி
உண்டது தெவிட்டிப் பேழ்வாய்க் கடைகடோ றொழுகிப் பாயும்
அண்டர்தம் புகழிற் றோன்றும் வெள்ளெயிற் றமைதி யானை.

வெள்ளவெண் சேக்கை வெந்து பொறியெழ வெதும்பு மேனி
புள்ளிவெண்மொக்குளென்னப்பொடித்துவேர்கொதித்துப்பொங்கக்
கள்ளவிழ் மாலை தும்பி வண்டொடுங் கரிந்து சாம்ப
ஒள்ளிய மாலை தீய வுயிர்க்கின்ற வுயிர்ப்பி னானை. 117

தேவியன் மேனி யாளிற் சிந்தைமெய்த் திருவி னேகப்
பூவிய லமளி மேலாற் பொய்யுறக் குறங்கு வானைக்
காவியங் கண்ணி தன்பாற் கண்ணிய காத னீள
ஆவியை யுயிர்ப்பென் றோது மம்மியிட் டரைக்கின் றானை. 118

மிகுந்தகை நினைப்பு முற்ற வுருவெளிப் பட்ட வேலை
நகுந்தகை முகத்தன் காத னடுக்குறு மெய்யன் வார்தேன்
உகுந்தகை மொழியாண் முன்ன மொருவகை யுள்ளத் துள்ளே
புகுந்தன ளன்றே யென்று மயிர்ப்புறம் பொடிக்கின் றானை. 119

மென்றொழிற் கலாப மஞ்ஞை வேட்கைமீக் கூரு மேனும்
குன்றொழித் தொருமாக் குன்றை யரிதிற்சேர் கொள்கை போல
வன்றொழிற் கொற்றப் பொற்றோண் மாதர்க்கு விழிசென் றுற்ற
ஒன்றொழித் தொன்றி னேக வரியதோ ரொழுக்கி னானை. 120

தழூவா நின்ற கருங்கடன்மீ துதய கிரியிற் சுடர்தயங்க
எழுவா னென்ன மின்னிமைக்கு மாரந் திகழு மியல்பிற்றாய்
முழுவா னவரா யுலகமொரு மூன்றுங் காக்கு முதற்றேவர்
மழுவா ணேமி குலிசத்தின் வாய்மை துடைத்த மார்பானை. 121

தோடுழுததார்வண்டுந்திசையானைமதந்துதைந்தவண்டுஞ்சுற்றி
மாடுழுதநறுங்கலவைவயக்களிற்றின்சிந்துரத்தைமாறுகொள்ளக்
கோடுழுதமார்பானைக்கொலையுழுதவடிவேலின்கொற்றமஞ்சித்
தாடொழுதபகைவேந்தர்முடியுழுததழும்பிருந்தசரணத்தானை.

கொண்டதோ ருருவ மாயன் குறளினுங் குறுகி நின்றான்
திண்டலை பத்துந் தோள்க ளிருபதுந் தெரிய நோக்கிக்
கண்டனன் காண்ட லோடுங் கருத்தின்முன் காலச் செந்தீ
விண்டன கண்கள் கீண்டு வெடித்தன கீழு மேலும். 123

தோளாற்ற லென்னாகு மேனிற்குஞ் சொல்லென்னும்
வாளாற்ற கண்ணாளை வஞ்சித்தான் மணிமுடியென்
தாளாற்ற லாலிடித்துத் தலைபத்துந் தகர்த்தின்றென்
ஆளாற்றல் காட்டேனே லடியேனாய் முடியேனே. 124

நடித்துவாழ் தகைமையதோ வடிமைதா னன்னுதலைப்
பிடித்தவா ளரக்கனுர் யான்கண்டும் பிழைப்பாரோ
ஒடித்துவான் ரேளனைத்துந் தலைபத்து முதைத்துருட்டி
முடித்திவ்வூர் முடித்தான்மேன் முடிவதெலா முடிந்தொழிக.

என்றாக்கி யெயிறுகடித் திருகரமும் பிசைந்தெழுந்து
நின்றாக்கி யுணர்ந்துரைப்பா னேமியோன் பணியென்றால்
ஒன்றாக்கி யொன்றிழைத்த லுணர்வுடைமைக் குரித்தன்றால்
பின்றாக்கி விதுசாலப் பிழைபயக்கு மெனப்பெயர்ந்தான். 126

ஆலம்பார்த் துண்டவன்போ லாற்றலமைந் துளரெனினும்
சீலம்பார்க் குரியோர்க ளெண்ணுது செய்குவரோ
மூலம்பார்க் குறினுலகை முற்றுவிக்கு முறைத்தெனினுங்
காலம்பார்த் திறைவேலை கடவாத கடலொத்தான். 127

இற்றைப்போர்ப் பெருஞ்சீற்ற மென்னோடு முடிந்திடுக
கற்றைப்பூங் குழலாளைச் சிறைவைத்த கண்டகனை
முற்றப்போர்முடித்ததொருகுரங்கென்றான்முனைவீரன் [தான்.
கொற்றப்போர்சிலைத்தொழிற்குக்குறையுண்டாமெனக்குறைந்

அந்நிலையான் பெயர்ந்துரைப்பா ளுய்வளைக்கை யணியிழையாள்
இந்நிலையா னுடன்றுயில்வா ளுளளல்ல ளிவனிலையும்
புன்னிலைய காமத்தாற் புரள்கின்ற நிலைபூவை
நன்னிலைய ளுளளென்னு நலமெனக்கு நல்குமால். 129

என்றெண்ணி யீண்டினியோர் பயனில்லை யெனநினையாக்
குன்றன்ன தோளவன்றன் கொடுங்கோயிற் புறங்கொண்டான்
நின்றெண்ணி யுன்னுவா னந்தோவிந் நெடுநகரிற்
பொன்றுன்னு மணிப்பூணு ளிலளென்னப் பொருமுவான். 130

கொன்றானே கற்பழியாக் குலமகளைக் கொடுந்தொழிலால்
தின்றானே வப்புறத்தே சேர்த்தானே சிறைசிறியேன்
ஒன்றானு முணர்ந்திலேன் மீண்டினிப்போ யென்னுரைக்கேன்
பொன்றாத பொழுதெனக்குக் கொடுந்துயரம் போகாதால். 131

கண்டுவரு மென்றிருக்குங் காகுத்தன் கவிகுலக்கோன்
கொண்டுவரு மென்றிருக்கும் யான்முடித்த கோளிதுவால்
புண்டரிக நயனத்தான் பாலின்னம் போவேனோ
விண்டவரோ டுடன்வீயா தியான்வாளா விளிவேனே. 132

கண்ணியநாள் கழிந்துளவாற் கண்டிலமாற் கணங்குழையை
விண்ணடைந்து மென்றாரை யாண்டிருத்தி விரைந்தயான்
எண்ணியது முடித்திலே னினிமுடியா திருப்பேனோ
புண்ணியமென் றொருபொருளென் னுழைநின்றும் போயதால்.

எழுநூ றோசனைசூழ்ந் தெயில்கடந்த திவ்விலங்கை
வாழுமா மன்னுயிர்யான் காணாத மற்றில்லை
ஊழியான் பெருந்தேவி யொருத்தியுமே யான்காணேன்
ஆழிதா யிடராழி யிடையேவீழ்ந் தழிவேனே. 134

வல்லரக்கன் றனைப்பற்றி வாயாறு குருதிவரக்
கல்லரக்குங் கரதலத்தாற் காட்டென்று காண்கேனே
எல்லாக்கு மயினுதிவே லிராவணனு மிவ்வூரும்
மெல்லரக்கி னுருகிவிழ வெந்தழலிட் டேகேனே. 135

வானவரே முதலோரை வினவுவனேல் வல்லரக்கன்
தானொருவ னுளனாக வுரைசெய்யுந் தருக்கிலார்
ஏனையர்க ளெங்குரைப்பா ரெவ்வண்ணந் தெரிகேனே
ஊனழிய நீங்காத வுயிர்சுமந்த வுணர்வில்லேன். 136

எருவைக்கு முதலாய சம்பாதி யிலங்கையிலத்
திருவைக்கண் டனனென்று னவனுரையுஞ் சிதைந்ததால்
கருவைக்கு நெடுநகரைக் கடலிடையே கரையாதென்
உருவைக்கொண் டின்னமுநா னுளனாகி யுழல்வேனோ. 137

வடித்தார்பூங் குழலாளை வானறிய மண்ணறியப்
பிடித்தானிவ் வடலரக்க னெனுமாற்றம் பிழையாதால்
எடுத்தாழி யிலங்கைதனை யிருங்கடலி லிட்டிவனை
முடித்தாலே யான்முடித னன்றென்று முணர்கின்றான். 138

எள்ளுறையு மொழியாமல் யாண்டையுரு முளனாகி
உள்ளுறையு மொருவனைப்போ லெம்மருங்கு முலாவினான்
புள்ளுறையுய் யானத்தை யுறநோக்கி யயல்போவான்
கள்ளுறையு நறுஞ்சோலை யயலொன்று கண்ணுற்றான். 139





# காட்சிப்படலம்.

மாடு நின்றவம் மணிமலர்ச் சோலையை மருவித்
தேடி யவ்வழிக் காண்பனேற் றீருமென் சிறுமை
ஊடு கண்டில னென்னிற்பின் னுரியதொன் றில்லை
வீடு வேன்மற்றவ் விலங்கன்மே லிலங்கையை வீட்டி. 1

என்று சோலைபுக் கெய்தின னிராகவன் றூதன்
ஒன்றி வானவர் பூமழை பொழிந்துநின் றுவந்தார்
அன்ற வாளரக் கன்சிறை யவ்வழி வைத்த
துன்ற லோதிதன் னிலையினைச் சொல்லுவான் றுணிந்தாம். 2

வன்ம ருங்குல்வா ளரக்கியர் நெருக்கவந் திருந்தார்
கன்ம ருங்கெழுந் தென்றுமோர் துளிவரக் காணா
நன்ம ருந்துபோ னலனற வுணங்கிய நங்கை
மென்ம ருங்குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள். 3

துயிலெ னக்கண்க ளிமைத்தலு முகிழ்த்தலுந் துறந்தாள்
வெயிலி டைத்தந்த விளக்கென வொளியிலா மெய்யாள்
மயிலி யற்குயின் மழலையாண் மானிளம் பேடை
அயிலெ யிற்றுவெம் புலிக்குழாத் தகப்பட்ட தன்னாள். 4

விழுதல் விம்முதன் மெய்யுற வெதும்புதல் வெருவல்
எழுத லேங்குத லிரங்குத லிராமனை யெண்ணித்
தொழுதல் சோருத றளங்குத றுயருழந் துயிர்த்தல்
அழுத லன்றிமற் றயலொன்றுஞ் செய்குவ தறியாள். 5

தழைத்த பொன்முலைத் தடங்கடந் தருவிபோய்த் தாழப்
புழைத்த போலநீர் நிரந்தரம் பொழிகின்ற பொழிவால்
இழைக்கு நுண்ணிய மருங்குலா ளிணைநெடுங் கண்கள்
மழைக்க ணென்பது காரணக் குறியென வகுத்தாள். 6

அரிய மஞ்சனோ டஞ்சன மிவைமுத லதிகம்
கரிய காண்டலுங் கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள்
உரிய காதல ரொருவரோ டொருவரை யுலகில்
பிரிவெ னுந்துய ருருவுகொண் டாலன பிணையாள். 7

துப்பி னாற்செய்த கையொடு கால்பெற்ற துளிமஞ்
சொப்பி னான்றனை நினைதொறு நெடுங்கண்க ளுகுத்த
அப்பி னானனைந் தருந்துய ருயிர்ப்புடை யாக்கை
வெப்பி னாற்புலர்ந் தொருநிலை யுறுதமென் றுகிலாள். 8

அரிது போகவோ விதிவலி கடத்தலென் றஞ்சிப்
பரிதி வானவன் குலத்தையும் பழியையும் பாராச்
சுருதி நாயகன் வரும்வரு மென்பதோர் துணிவால்
கருதி மாதிர மனைத்தையு மளக்கின்ற கண்ணாள். 9

கமைய னாடிரு முகத்தயல் கதுப்புறக் கவ்விச்
சுமையு டைக்கற்றை நிலத்திடைக் கிடந்தது மதியை
அமைய வாயிற்பெய் துமிழ்கின்ற வயிலெயிற் றராவிற்
குமையு றத்திரண் டொருசடை யாகிய குழலாள். 10

ஆவி யந்துகில் புனைவதொன் றன்றியே றறியாள்
தூவி யன்னமோர் புனலிடைத் தோய்கிலா தொளாற்
றேவு தண்கட லமிர்துகொண் டநங்கவேள் செய்த
ஓவி யம்புகை யுண்டதே யொக்கின்ற வுருவாள். 11

கண்டி லன்கொலா மிளவலுங் கனைகட னடுவண்
உண்டி லங்கையென் றுணர்ந்தில ருலகெலா மொறுப்பான்
கொண்டி ருந்தமை யறிந்தில ராமெனக் குழையாப்
புண்டி றந்ததி னெரிநுழைந் தாலெனப் புகைவாள். 12

மாண்டு போயின னெருவையர்க் கரசன்மற் றுளரோ
யாண்டை யென்னிலை யறிவுறுப் பார்களிப் பிறப்பில்
காண்ட லோவரி தென்றென்று விம்முறுங் கலங்கும்
மீண்டு மீண்டும்புக் கெரிநுழைந் தாலென மெலிவாள். 13

என்னை நாயக னிளவலை யெண்ணிலா வினையேன்
சொன்ன வார்த்தைகேட் டறிவில னெனத்துறந் தானோ
முன்னை யூழ்வினை முடிந்ததோ வென்றென்று முறையால்
பன்னி வாய்புலர்ந் துணர்வுதேய்ந் தாருயிர் பதைப்பாள். 14

அருந்து மெல்லட காரட வருந்துமென் றழுங்கும்
விருந்து கண்டபோ தென்னுறு மோவென்று விம்மும்
மருந்து முண்டுகொல் யான்கொண்ட நோய்க்கென்று மயங்கும்
இருந்த மாநிலஞ் செல்லரித் திடவுமாண் டெழாதாள். 15

வன்கண் வஞ்சனை யரக்கரித் துணைப்பகல் வையார்
தின்ப ரென்னினிச் செயத்தக்க தென்றுதீர்ந் தானோ
தன்கு லப்பொறை தன்பொறை யெனத்தணிந் தானோ
என்கொ லெண்ணுவ தென்னுமங் கிராப்பக லில்லாள். 16

பெற்ற தாயருந் தம்பியும் பெயர்த்தும்வந் தெய்திக்
கொற்ற மாநகர் கொண்டுசென் றூர்களோ குறித்துச்
சொற்ற வாண்டெலா முறைந்தன்றி யந்நகர் துன்னான்
உற்ற துண்டெனு விடருழந் துழுதனோ யுறுவாள். 17

மூரனை னத்தகு மொய்ம்பினோர் முன்பொரு தவர்போல்
வரனு மாயமும் வஞ்சமும் வரம்பில வல்லார்
பொரநி கழ்ந்ததோர் பூசலுண் டாமெனப் பொருமாக்
கரனை திர்ந்தது கண்டன ளாமெனக் கவல்வாள். 18

தெம்ம டங்கிய சேணிலங் கைகயன்
றன்ம டந்தையுன் றம்பிய தாமென
மும்ம டங்கு பொலிந்த முகத்தினன்
வெம்ம டங்கலை யுன்னி வெதும்புவாள். 19

மெய்த்தி ருப்பத மேவென்ற போதினும்
இத்தி ருத்துறந் தேகென்ற போதினுஞ்
சித்தி ரத்தி னலர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருந்த முகத்தினை யுன்னுவாள். 20

தேங்கு கங்கைத் திருமுடிச் செங்கணான்
வாங்கு கோல வடவரை வார்சிலை
ஏங்கு மாத்திரத் திற்றிரண் டாய்விழ
வீங்கு தோளை நினைந்து மெலிந்துளாள். 21

இன்ன லம்பர வேந்தற் கியற்றிய
பன்ன லம்பதி னுலா யிரம்படை.
கன்னன் மூன்றிற் களப்பட்டக் கால்வளை
வின்ன லம்புகழ்ந் தேத்தி வெதும்புவாள். 22

ஆழ நீர்க்கங்கை யம்பி கடாவிய
ஏழை வேடனுக் கெம்பிநின் றம்பிநீ
தோழன் மங்கை கொழுந்தி யெனச்சொன்ன
வாழி நண்பினை யுன்னி மயங்குவாள். 23

மெய்த்த தாதை விரும்பின னீட்டிய
கைத்த லங்களைக் கைகளி னீக்கிவே
றுய்த்த போது தருப்பையி லுண்பதம்
வைத்த வேதிகைச் செய்கை மனக்கொள்வாள். 24

உரங்கொ டேமலர்ச் சென்னி யுரிமைசால்
வரங்கொள் பொன்முடி தம்பி மலைந்திலன்
திரங்கு செஞ்சடை கட்டிய தீவினைக்
கிரங்கி யேங்குவ தெண்ணி யிரங்குவாள். 25

பருத்த செல்வ மொழியப் படருநாள்
அருத்தி வேதியர்க் கான்குல மீந்தவர்
கருத்தி னுசைக் கரையின்மை கண்டிறை
சிரித்த செய்கை நினைந்தழுஞ் செய்கையாள். 26

மழுவின் வாளின் மன்னரை மூவெழு
பொழுதி னூறிப் புலவுறு புண்ணினீர்
முழுகி னான்றவ மொய்ம்பொடு மூரிவில்
தழுவு மேன்மை நினைந்துயிர் சாம்புவாள். 27

ஏக வாளியவ் விந்திரன் காதன்மேற்
போக வேவி யதுகண் பொடித்தநாட்
காக முற்றுமோர் கண்ணில வாகிய
வேக வென்றியைத் தன்றலை மேற்கொள்வாள். 28

வெவ்வி ராதனை மேவருந் தீவினை
வவ்வி மாற்றருஞ் சாபமு மாற்றிய
அவ்வி ராமனை யுன்னித்தன் னாருயிர்
செவ்வி ராதுணர் வோய்ந்துட னேம்புவாள். 29

இருந்தன டிரிசடை யென்னு மின்சொலத்
திருந்திழை யொழியமற் றிருந்த தீவினை
அருந்திற லரக்கிய ரல்லு நள்ளுறப்
பொருந்தருந் துயிலிடைக் கண்பொ ருந்தினார். 30

ஆயிடைத் திரிசடை யென்னு மன்பினாற்
றாயினு மினியவ டன்னை நோக்கினாள்
தாயநீ கேட்டியென் றுணைவி யாமெனு
மேயதோர் கட்டுரை விளம்பன் மேயினாள். 31

நலந்துடிக் கின்றதோ நான்செய் தீவினைச்
சலந்துடித் தின்னமுந் தருவ துண்மையோ
பொலந்துடி மருங்குலாய் புருவங் கண்முதல்
வலந்துடிக் கின்றில வருவ தோர்கிலேன். 32

முனியொடு மிதிலையின் முதல்வன் முந்துநாள்
துனியறு புருவமுந் தோளு நாட்டமும்
இனியன துடித்தன வீண்டு மாண்டென
நனிதுடிக் கின்றன நவையி னண்ணலாய். 33

மறந்தன னீதுமோர் மாற்றங் கேட்டியால்
அறந்தரு சிந்தையென் னாவி நாயகன்
பிறந்தபார் முழுவதுந் தம்பி யேபெறத்
துறந்துகான் புகுந்தநாள் வலந்து டித்ததே. 34

நஞ்சனை யான்வனத் திழைக்க நண்ணிய
வஞ்சனை நாள்வலந் துடித்த வாய்மையால்
துஞ்சல வீண்டுதா மிடந்து டிக்குமால்
அஞ்சலென் றிரங்குதற் கடுப்ப தியாதென்றாள். 35

என்றலுந் திரிசடை யியைந்த சோபனம்
நன்றது நன்றெனு நயந்த சிந்தையாள்
உன்றுணைக் கணவனை யுறுத லுண்மையால்
அன்றியுங் கேட்டியென் றறைதன் மேயினாள். 36

உன்னிறம் பசப்புற வுயிரு யிர்ப்புற
இன்னிறத் தேனிசை யினிய நண்பினும்
மின்னிற மருங்குலாய் செவியின் மெல்லவே
பொன்னிறத் தும்பிவந் தூதிப் போயதால். 37

ஆயது தெரியிலுன் னாவி நாயகன்
ஏயதோர் தூதுவந் ததிரு மென்னுமால்
தீயது தீயவர்க் கெய்த றிண்ணமென்
வாயது கேளென மறித்துங் கூறுவாள். 38

துயிலலை யாதலிற் கனவு தோன்றல
அயில்விழி யன்னையா னமைய நோக்கினேன்
பயில்வன பழுதில பழுதி னன்றென
வெயிலினும் வெய்யன விளம்பன் மேயினாள். 39

எண்ணெய்தன் முடிதொறு மிழுகி யீறிலாத்
திண்ணெடுங் கழுதைபேய் பூண்ட தேரின்மேல்
அண்ணலவ் விராவண னரத்த வாடையன்
நண்ணினன் றென்புல னவையில் கற்பினாய். 40

மக்களுஞ் சுற்றமு மற்று ளோர்களும்
புக்கன ரப்புரம் போந்த தில்லையால்
சிக்கற நோக்கினன் றீய வின்னமும்
மிக்கன கேட்டியால் விளைவு கூறுகேன். 41

பொன்றிணி பொலங்கொடிப் பூவை கேட்டியால்
இன்றிவ ணிப்பொழு தெழுந்த தோர்களு
வன்றுணைக் கோளரி யிரண்டு மாறிலாக்
குன்றிடை யுழுவையுங் குழுக்கொண் டண்டியே. 42

வரம்பிலா மாகரி யுறையு மவ்வனம்
நிரம்புற விளந்தன நெருக்கி நேர்ந்தன
வரம்பறு பிணம்படக் கொன்ற வாழ்தரு
புரம்புக விருந்ததோர் மயிலும் போயதால். 43

ஆயிரந் திருவிளக் கமைய மாட்டிய
சேயொளி விளக்கமொன் றேந்திச் சேயவள்
நாயகன் றனிமனை நின்று நன்னுதல்
மேயினள் வீடணன் கோயின் மென்சொலாய். 44

பொன்மனை புக்கவப் பொருவில் போதினில்
என்னைநீ யுணர்த்தினை முடிந்த தில்லென
அன்னையே யதன்குறை காணென் றுயிழை
இன்னமுந் துயில்கெளு விருகை கூப்பினுள். 45

மீட்டுமத் திரிசடை யென்னு மென்சொலாள்
தோட்டடம் பொருகுழைத் தோகை யேயனுய்
கேட்டிவெங் கடுவெனக் கிளருற் பாதமாய்
நாட்டினி லியாவரு நடுங்கக் காண்டியால். 46

ஆண்டகை யிராவணன் வளர்க்கு மவ்வனல்
ஈண்டின விறந்தவா வினங்கொள் செஞ்சிகை
தூண்டரு மணிவிளக் கழலுந் தொன்மனை
நீண்டதால் வானவே றெறியக் கீழைநாள். 47

பிடிமதம் பிறந்தன பிறங்கு பேரியம்
இடியென முழங்குமா விரட்ட வின்றியே
தடியுடை முகிற்குல மின்றித் தாவில்வான்
வெடிபட வதிருமா லுதிரு மீனெலாம். 48

விற்பக வின்றியே யிரவும் விண்டர
ஏற்பக வெரிந்துள தென்னத் தோன்றுமால்
மற்பக மலர்ந்ததோண் மைந்தர் சூடிய
கற்பக மாலையும் புலவு கானுமால். 49

திரியுமா விலங்கையு மதிலுந் திக்கெலாம்
எரியுமாற் கந்தர்ப்ப நகர மெங்கணும்
தெரியுமான் மங்கல கலசஞ் சிந்துமால்
விரியுமால் விளக்கினை விழுங்கு மாவிருள். 50

தோரண முறிந்தன துணியச் சூழிமா
வாரண முறியுமால் வலத்த வாண்மருப்
பாரண மந்திரத் தறிஞர் நாட்டுறு
பூரண குடத்துநீர் நறவு பொங்குமால். 51

விண்டொடர் மதியினைப் பிளந்து மீனெழும்
புண்டொடர் குருதியிற் பொழியும் பொன்மழை
தண்டொடு மகரமீன் றனுவென் றின்னன
மண்டமர் புரியுமா லாழி மாறுற. 52

மங்கையர் மங்கலத் தாலி மற்றையார்
அங்கையின் வாங்கின ரெவரு மன்றியே
கொங்கையின் வீழ்ந்தன குதித்த முற்றமற்
றிங்கிதி லற்புத மின்னு மெண்ணுகோ. 53

மன்னவன் றேவியம் மயன்ம டந்தைதன்
பின்னவி ழோதியும் பிறங்கி வீழ்ந்தன
துன்னிருஞ் சுடர்சுடச் சுறுக்கொண் டேறின
இன்னலுண் டெனுமிதற் கேது வேறுண்டோ. 54

இவ்விடை விடையன விராம னேவிய
வெவ்விடை யனையபோர் வீரத் தூதனும்
அவ்விடை யெய்தினன் றரிதி னோக்குவான்
நொவ்விடை மடந்தைதன் னிருக்கை நோக்கினான். 55

அவ்வயி னரக்கிய ரறிவுற் றம்மவோர்
செவ்வையி றுயினமைச் செய்த தீதென
எவ்வயின் மருங்கினு மெழுந்து வீங்கினார்
வெவ்வயின் மழுவெழுச் சூல வெங்கையார். 56

வயிற்றிடை வாயினர் வளைந்த நெற்றியின்
குயிற்றிய விழியினர் கொடிய நோக்கினர்
எயிற்றினுக் கிடையிடை யானை யாளிபேய்
துயிற்கொள்வெம் பிலனெனத் தொட்ட வாயினர். 57

ஒருபது கையினு மொற்றைச் சென்னியார்
இருபது தலையின ரிரண்டு கையினர்
வெருவரு தோற்றத்தார் விகட வேடத்தார்
பருவரை யெனமுலை பலவு நாற்றினர். 58

சூலம்வாள் சக்கரந் தோட்டி தோமரம்
காலவேல் கற்பணங் கற்ற கையினர்
ஆலமே யுருவுகொண் டனைய மேனியார்
வாலமே தரித்தவன் வெருவும் வன்மையார். 59

கரிபரி வேங்கைமாக் கரடி யாளிபேய்
அரிநரி நாயென வணிமு கத்தினர்
வெரிநுறு முகத்தினர் விழிகண் மூன்றினர்
புரிதரு கொடுமையார் புகையும் வாயினர். 60

எண்ணினுக் களவிட லரிய வீட்டினர்
கண்ணினுக் களவிட லரிய காட்சியார்
பெண்ணெனப் பெயர்கொடு திரியும் பெற்றியார்
துண்ணெனத் துயிலெழுந் துணர்ந்து சுற்றினர். 61

ஆயிடை யுரையழிந் தழகன் றேவியும்
தீவினை யவர்முக நோக்கித் தேம்பினள்
நாயகன் றூதனும் விரைவி னண்ணினன்
ஒய்வில துயர்மரப் பொதும்பி னும்பரான். 62

அரக்கிய ரயின்முத லேந்து மங்கையார்
நெருக்கிய குழுவினர் துயிலு நீங்கினர்
இருக்குநர் பலரிதற் கேது வென்னெனப்
பொருக்கென வவரிடைப் பொருந்த நோக்கினன். 63

விரிமழைக் குலங்கிழித் தொளிரு மின்னெனக்
கருநிறத் தரக்கியர் குழுவிற் கண்டனன்
உருநிறத் துறுப்பழி யாத வூழியான்
அருநிறத் துற்றவெற் கமைந்த காந்தத்தை. 64

தொடற்கரு மரக்கியர் காவற் சுற்றுளாள்
மடக்கொடிச் சீதையா மாத ரேகொலாம்
கடற்றுணை நெடியதன் கண்ணி னீர்ப்பெருந்
தடத்திடை யிருந்ததோ ரன்னத் தன்மையாள். 65

வீடிய தன்றறன் யானும் வீயலேன்
தேடினன் கண்டனன் றேவி யேயெனு
ஆடினன் பாடின னங்கு மிங்கும்பாய்ந்
தோடின னுலாவின னுவகைத் தேனுண்டான். 66

எள்ளரு முருவினல் லிலக்க ணங்களும்
வள்ளறன் னுரையொடு மாறு கொண்டில
கள்ளவா ளரக்கனக் கமலக் கண்ணனார்
உள்ளுறை யுயிரினை யொளித்து வைத்தவா. 67

மூவகை யுலகையு முறையி னீக்கிய
பாவிதன் னுயிர்கொள்வா னிழைத்த பண்பிதால்
ஆவதே யையன்மெல் லரவி னீங்கிய
தேவனே யவனிவள் கமலச் செல்வியே. 68

மாசுண்ட மணியனாள் வழங்கு வெண்கதிர்த்
தேசுண்ட திங்களு மென்னத் தேய்ந்துளாள்
காசுண்ட கூந்தலாள் கற்புங் காதலும்
ஏசுண்ட தில்லையா லறத்துக் கீறுண்டோ. 69

புனைகழ விராகவன் புயத்தை யோபுகழ்
வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ
வினைகழ லரசரின் வன்மை வீக்கிடும்
சனகர்தங் குலத்தையோ யாதைச் சாற்றுகேன். 70

தேவரும் பிழைத்திலர் தெய்வ வேதியர்
ஏவரும் பிழைத்திலா ரறமு மீறின்முல்
யாவதிங் கினிச்செய லரிய தெம்பிராற்
காவதென் னடிமையும் பிழைப்பின் ருமன்றே. 71

கேழிலா ணிறையிறை கீண்ட தாமெனின்
ஆழியான் முனிவெனு மாழி மீக்கொள
ஊழியி னிறுதிவந் துறுமென் றுன்னினேன்
வாழிய ருலகினி வரம்பி ஞெலாம். 72

வெங்கனன் முழுகியும் புலன்கள் வீக்கியும்
நுங்குவ வருந்துவ நீக்கி நோற்றவர்
எங்குளர் குலனில்வந் தில்லின் மாண்புடை
நங்கையர் மனத்தவ நவிலற் பாலதோ. 73

பேணநோற் றதுமனைப் பிறவி பெண்மைபோல்
நாணநோற் றுயர்ந்தது நங்கை தோன்றலால்
மாணநோற் றீண்டிவ ளிருந்த வாறெலாம்
காணநோற் றிலனவன் கமலக் கண்களால். 74

முனிபவ ரரக்கியர் முறையி னீங்கிஞர்
இனியிவ டானலா தியாரு மில்லையால்
தனிமையும் பெண்மையுந் தவமு மின்னதே
வனிதையர்க் காகநல் லறத்தின் மாண்பெலாம். 75

தருமமே காத்ததோ சழக்கன் றென்வினைக்
கருமமே காத்ததோ கற்பின் காவலோ
அருமையே யருமையே யாரி தாற்றுவார்
ஒருமையே யெம்மஞேர்க் குரைக்கற் பாலதோ. 76

செல்வமோ விதுவவர் தீமை யோவிது
அல்லினும் பகலினு மமர ராட்செய்வார்
ஒல்லுமோ வொருவர்க்கீ துறுகண் யாதினி
வெல்லுமோ தீவினை யறத்தை மெய்ம்மையால். 77

என்றிவை யினையன வெண்ணி வண்ணவான்
பொன்றிணி முதுமரப் பொதும்பர் புக்கவண்
நின்றன னவ்வழி நிகழ்ந்த தியாதெனிற்
றுன்றுபூஞ் சோலைவா யரக்கன் றோன்றினன். 78





## நிந்தனைப்படலம்.

சிகரவண் குடுமி நெடுவரை யெவையு
மொருவழி திரண்டன சிவண
மகரிகை வயிர குண்டல மிலங்குந்
திண்டிறற் றோள்புடை வயங்கச்
சகரநீர் வேலை தழுவிய கதிரிற்
றலைதொறுந் தலைதொறுந் தயங்கும்
வகையில்பன் மகுட மிளவெயில் பரப்பக்
கங்குலும் பகல்பட வந்தான். 1

உருப்பசி யுடைவா ளெடுத்தன டொடர
மேனகை வெள்ளடை யுதவச்
செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல
வரம்பையர் குழாம்புடை யேகக்

கருப்புரச் சாந்துங் கலவையு மலருங்
கலந்துமிழ் பரிமள கந்தம்
மருப்புடைப் பொருப்போர் மாதிரக் களிற்றின்
வரிக்கைவாய் மூக்கிடை மடுப்ப. 2

நானநெய் விளக்க நாலிரு கோடி
நங்கைய ரங்கையி லேந்த
மேனிவந் தெழுந்த மணியுடை யணியின்
விரிகதி ரிருளெலாம் விழுங்கக்
கான்முதற் றொடர்ந்த நூபுரஞ் சிலம்பக்
கிண்கிணி கலையொடுங் கலிப்பப்
பானிறத் தன்னக் குழாம்படர்ந் தென்னப்
பற்பல மழலையும் பகர. 3

அந்தரம் புகுந்த துண்டென முனிவுற்
றருந்துயி னீங்கிற் றண்டைச்
சந்திர வதனத் தருந்ததி யிருந்த
தண்ணறுஞ் சோலையின் றனையோ
மந்திரம் யாதோ யாரொடும் போமோ
வென்றுமா மனமறுக் குறலால்
இந்திரன் முதலோ ரிமைப்பிலா நாட்ட
முகுழ்த்தன ருயிர்ப்பவிந் திருப்ப. 4

நீனிறக் குன்றி னெடிதினிற் றாழ்ந்த
நீத்தவெள் ளருவியி னிமிர்ந்த
பானிறப் பட்டின் மாலையுத் தரியம்
பண்புறப் பசும்பொனு ரத்தின்

மாணிற மணிக ளிடையுறப் படர்ந்த
 வாள்கதி ரிளவெயில் பொருவச்
சூணிறக் கொண்மூக் கிழித்திடை துடிக்கு
 மின்னென மார்பினூ றுளங்க. 5

தோடொறுந் தொடர்ந்த மகரவாய் வயிரக்
 கிம்புரி வலயமாச் சுடர்கள்
நாடொறுஞ் சுடருங் கலிகெழு விசும்பி
 னொளொடு கோளினை நக்கத்
தாடொறுந் தொடர்ந்த தழங்குபொற் கழலின்
 றகையொளி நெடுநிலந் தடவக்
கேடொறுந் தொடர்ந்த முறுவல்வெண் ணிலவின்
 முகமல ரிரவினுங் கிளர. 6

தன்னிறத் தோடு மாறுதந் திமைக்கு
 நீவியந் தழைபட வுடுத்த
பொன்னிறத் தூசு கருவரை மருங்கிற்
 றழுவிய புதுவெயில் பொருவ
மின்னிறக் கதிரிற் சுற்றிய பசும்பொன்
 விரற்றலை யவிரொளிக் காசின்
கன்னிறக் கற்றை நெடுநிழல் பூத்த
 கற்பக முழுவனங் கவின. 7

சன்னவீ ரத்த கோவைவெண் டரள
 மூழியி னிறுதியிற் றனித்த
பொன்னெடு வரையிற் ௫ருத்திய கோளு
 நாளுமொத் திடையிடை பொலிய

மின்னொளி மௌலி யுதயமால் வரையின்
மீப்படர் வெங்கதிர்ச் செல்வர்
பன்னிரு வரினு மிருவரைத் தவிர்வுற்
றுதித்ததோர் படியொளி பரப்ப. 8

பயிலெயிற் றிரட்டை முரட்பனை யொடியப்
படியினிற் பரிபவஞ் சுமந்த
மயிலடித் தொழுக்கி யனையமா மதத்த
மாதிரக் காவன்மால் யானை
கயிலையிற் றிரண்ட முரண்டொடர் தடந்தோட்
கனகனை துயர்வரங் கடந்த
அயிலெயிற் றரியின் சுவடுதங் கரத்தா
லளைந்தமாக் கரியினின் றஞ்ச. 9

அங்கயற் கருங்க ணியக்கியர் துயக்கி
லரம்பையர் விஞ்சையர்க் கமைந்த
நங்கையர் நாக மடந்தையர் சித்தர்
நாரிய ரரக்கியர் முதலாக்
குங்குமக் கொம்மைக் குவிமுலைக் கனிவாய்க்
கோகிலந் துயர்வுறு குதலை
மங்கைய ரீட்ட மால்வரை தழீஇய
மஞ்ஞையங் குழுவென வயங்க. 10

தொளையுறு புழைவேய் தூக்கிசை கானந்
தோய்வுறு தொருநிலை தொடர
இளையவர் மிடறு மின்னிலை யிசையக்
கிந்நரர் முறைநிறுத் தெடுத்த

இளையுறு பாண்டில் சில்லரிப் பாண்டி
 தழுவிய முழவொடுங் கெழுமி
அளையுறு மரவ மமிர்துவா யுகுப்ப
 வண்டமும் வையமு மளப்ப. 11

அன்னமூஞ் சதுக்கஞ் சாமரை யுக்க
 மாதியாம் வரிசையிற் கமைந்த
உன்னரும் பொன்னின் மணியினிற் புனைந்த
 விழைக்குல முழைக்குல மனைய
மின்னிடைச் செவ்வாய்க் குவிமுலைப் பணைத்தோள்
 வீங்குதே ரல்குலார் தாங்கி
நன்னிறக் காரின் வரவுகண் டுவக்கு
 நாடக மயிலென நடப்ப. 12

தந்திரி நெறியிற் றுக்குறு கருவி
 தாக்கின ரெழுவகைச் சதியின்
முந்துற குணிலோ டியவுறு குறட்டிற்
 சில்லரிப் பாண்டிலின் முறையின்
மந்திர கீதத் திசைப்பதந் தொடர
 வகையுறு கட்டளை வழாமல்
அந்தர வானத் தரம்பையர் கரும்பின்
 பாடலா ரருகுவந் தாட. 13

அந்தியி லநங்க னழல்படத் துரந்த
 வயின்முகப் பகழிவா யறுத்த
வெந்துறு புண்ணின் வேனுழைந் தென்ன
 வெண்மதிப் பசுங்கதிர் விரவ

மந்தமா ருதம்போய் மலர்தொறும் வாரி
வயங்குநீ ரம்மலர் வருதேன்
சிந்துநுண் டுளியின் சீகரத் துவலை
யுருக்கிய செம்பெனத் தெறிப்ப. 14

இழைபுரை மருங்கு லிறுமிறு மெனவு
மிறுகலா வனமுலை யிரட்டை
உழைபுகு செப்பி னொளிதர மறைத்த
வுத்தரீ யத்தினை ரொல்கிக்
குழைபுகு நயனங் கோட்டினர் நோக்குங்
குறுநகைக் குமுதவாய் மகளிர்
மழைபுரை யொண்கட் செங்கடை யீட்ட
மார்பினுந் தோளினு மலைய. 15

மாலையுஞ் சாந்துங் கலவையும் பூணும்
வயங்குநுண் டுசொடு காசும்
சோலையின் றொழுதிக் கற்பகத் தருவு
நிதிகளுங் கொண்டுபின் றொடரப்
பாலின்வெண் பரவைத் திரைகருங் கிரிமேற்
பரந்தெனச் சாமரை பரப்ப
வேலைநின் றுயரு முயலில்வான் மதியின்
வெண்குடை மீதுற விளங்க. 16

ஆர்தரு மகழி யருவரை யிலங்கை
யடிபெயர்த் திடுதொறு மழுந்தி
நேர்தரும் பரவைப் பிறழ்திரை தவழ்ந்து
நெடுந்தடந் திசைதொறு நிமிரச்

சார்கருங் கடுவி னெயிறுடைப் பகுவா
யநந்தனுந் தலைதடு மாற
மூரிநீ ராடை யிருநில மடந்தை
முதுகுளுக் குற்றனண் முலை. 17

கேடகத் தோடு மழுவெழுச் சூல
மங்குசங் கன்னகங் கிடுகோ
டாடகச் சுடர்வா ளயில்சிலை குலிச
முதலிய வாயுத மனைத்துந்
தாடைக் கிரட்டி யெறுழ்வலி தந்த
தகைமையர் தடவரை போலுஞ்
சூடகத் தடக்கைச் சுடுசினத் தடுபோ
ரரக்கியர் தலைதொறுஞ் சுமப்ப. 18

விரிதளிர் முகைபூ கொம்படை முதல்வே
றிவையெலா மணிபொனால் விரிந்த
தருவுயர் சோலை திசைதொறுங் கரியத்
தழலுமி ழுயிர்ப்புமுன் றவழத்
திருமக ளிருந்த திசையறிந் திருந்துந்
திகைப்புறு சிந்தையாற் கெடுத்த
தொருமணி நேடும் பஃறலை யரவி
னுழைதொறு முழைதொறு முலாவ. 19

இனையதோர் தன்மை யெறுழ்வலி யரக்க
ரேந்தல்வந் தெய்துகின் றுழை
அனையதோர் தன்மை யஞ்சனை சிறுவன்
கண்டன னமைவுற நோக்கி

விளையமுஞ் செயனு மேல்விளை பொருளு
மிவ்வழி விளங்குமென் றெண்ணி
வளைகழ லிராமன் பெரும்பெய ரோதி
யிருந்தனன் வந்தயன் மறைந்தே. 20

ஆயிடை யரக்க னரிவையர் குழுவு
மல்லவும் வேறய லகல
மேயினன் பெண்ணின் விளக்கெனுந் தகையா
ளிருந்துழி யாண்டவன் மேவப்
போயின வுயிர ளாமென நடுங்கிப்
பொறிவரி யெறும்வலிப் புகைக்கட்
காய்சின வுழுவை தின்னிய வந்த
கலையிளம் பெடையெனக் கரைந்தாள். 21

கூசி யாவி குலைவுறு வாளையும்
ஆசை யானுயி ராசழி வாளையும்
காசில் கண்ணிணை சான்றெனக் கண்டனன்
ஊச லாடி யுளையு முளத்தினன். 22

வாழி சானகி வாழி யிராகவன்
வாழி நான்மறை வாழிய ரந்தணர்
வாழி நல்லற மென்றென்று வாழ்த்தினன்
ஊழி தோறு முலாவுறுங் கீர்த்தியான். 23

அவ்வி டத்தரு கெய்திய ரக்கன்முன்
எவ்வி டத்தெனக் கின்னரு ளீவது
நொவ்வி டைக்குயி லேநுவல் வாயென்முன்
வெவ்வி டத்தை யமிழ்தென வேண்டுவான். 24

ஈசற் காயினு மீடழி வுற்றிறை
வாசிப் பாடழி யாத மனத்தினான்
ஆசைப் பாடுமெந் நாளுமடர்த்திடக்
கூசிக் கூசி யிவையிவை கூறினான். 25

இன்றி றந்தனன் நாளை யிறந்தனன்
என்றி றந்தருந் தன்மையி னாலெனைக்
கொன்றி றந்தபின் கூடுதி யோகுழை
சென்றி றங்கி மறந்தரு செங்கணாய். 26

உலக மொன்றொ டிரண்டொருங் கோம்புமென்
அலகில் செல்வத் தரசிய லாணையிற்
திலக மேயுன் றிறத்தநங் கன்றரு
கலக மல்ல தெளிமையுங் காண்டுமோ. 27

பூந்தண் வார்குழற் பொற்கொழுந் தேபுகழ்
ஏந்து செல்வ மிகழ்ந்தனை யின்னுயிர்க்
காந்தன் மாண்டிலன் காடு கடந்துபோய்
வாழ்ந்த வாழ்வது மானிடர் வாழ்வன்றே. 28

நோற்கின் றார்களு நுண்பொரு ளுண்ணிதிற்
பார்க்கின் றாரும் பெறும்பயன் பார்த்தியேல்
வார்க்குன் றாமுலை யாயென்சொன் மௌலிமேல்
ஏற்கின் றாரொ டுனுறை யின்பமால். 29

பொருளும் யாழும் விளரியும் பூவையும்
மருவு நாளு மழலை வழங்குவாய்
தெருளு நான்முகன் செய்ததுன் சிந்தையின்
அருளு மின்மருங் கும்மரி தாக்கியோ. 30

ஈண்டு நாளு மிளமையு மீண்டில
மாண்டு மாண்டு பிறிதுறு மாலைய
வேண்டு நாள்வழி தேவிளிந் தாலினி
யாண்டு வாழ்வ திடருழந் தாழ்தியோ. 31

இழவெ னக்குயிர்க் கெய்தினு மெய்துக
குழைமு கத்துநின் சிந்தனை கோடலால்
பழக நிற்புறும் பண்பிவை காமத்தோ
டழகி னுக்கினி யாருள ராவரோ. 32

பெண்மை யும்மழ கும்பிற பூமனத்
திண்மை யும்முதல் யாவையுஞ் செய்யவாய்க்
கண்மை யும்பொருந் திக்கரு ணைப்படா
வண்மை யென்கொல் சனகரின் மாண்டவா. 33

வீட்டுங் காலத் தலறிய மெய்க்குரல்
சேட்டுங் காண்டற் கிருத்திகொல் கிள்ளைநீ
நாட்டுங் காளெடு நல்லறத் தின்பயன்
ஊட்டுங் காலத் திகழ்வ துறுங்கொலோ. 34

தக்க தென்னுயிர் வீடெனிற் றூழ்க்கில
தொக்க செல்வ முலையு மொருத்திநீ
புக்கு யர்ந்த தெனும்புகழ் போக்கிவே
றுக்க தென்னு முறுபழி கோடியோ. 35

தேவர் தேவியர் சேவடி கைதொழும்
தாவின் மூன்றுல கின்றனி நாயகம்
மேவு கின்றது நுன்கண் விலக்கினை
யாவ ரேழையர் நின்னி னிலங்கிழாய். 36

குடிமை மூன்றுல குஞ்செயுங் கொற்றத்தென்
அடிமை கோடி யருளுதி யாலெனு
முடியின் மீது முகுழ்த்துயர் கையினன்
படியின் மேல்விழுந் தான்பழி பார்க்கலான். 37

காய்ந்தன சலாகை யன்ன வுரைவந்து கதுவா முன்னம்
தீய்ந்தன செவிக ளுள்ளந் திரிந்தது சிவந்த சோரி
பாய்ந்தன கண்க ளொன்றும் பரிந்தில ளுயிர்க்கும் பெண்மைக்
கேய்ந்தனர் வல்ல வெய்ய மாற்றங்க ளினைய சொன்னாள். 38

மல்லடு திரடோள் வஞ்சன் மனம்பிறி தாகும் வண்ணம்
கல்லொடுந் தொடர்ந்த நெஞ்சங் கற்பின்மேற் கண்ட துண்டோ
இல்லொடுந் தொடர்ந்த மாதர்க் கியைந்தன வல்ல வென்றன்
சொல்லிதுதெளியக்கேட்டிதுரும்பெனக்கனன்றுசொன்னாள்.

மேருவை யுருவல் வேண்டின் விண்பிளந் தேகல் வேண்டின்
ஈரெழு புவனம் யாவு முற்றுவித் திடுதல் வேண்டின்
ஆரியன் பகழி வல்ல தறிந்திருந் தறிவி லாதாய்
சீரிய வல்ல சொல்லித் தலைபத்துஞ் சிந்து வாயோ. 40

அஞ்சினை யாத லாலாண் டாரிய னற்ற நோக்கி
வஞ்சனை மானென் றேவி மாயையான் மறைத்து வந்தாய்
உய்ஞ்சனை போதி யாகின் விடுதியுன் குலத்துக் கெல்லாம்
நஞ்சினை யெதிர்ந்த போது நோக்குமே நினது நாட்டம். 41

பத்துள தலையுந் தோளும் பலபல பகழி தூவி
வித்தக வில்லி னாற்குத் திருவிளை யாடற் கேற்ற
சித்திர விலக்க மாவ தல்லது செருவி லேற்கும்
சத்தியை போலு மேனாட் சடாயுவாற் றரையின் வீழ்ந்தாய். 42

தோற்றனை பறவைக் கன்று துள்ளுநீர் வெள்ளஞ் சென்னி
ஏற்றவன் வாளால் வென்று யன்றெனி னிறத்தி யன்றே
நோற்றநோன் புடைய வாழ்நாள் வரமிவை நுனித்த வெல்லாம்
கூற்றினுக் கன்றே வீரன் சரத்திற்குங் குறித்த துண்டோ. 43

பெற்றுடை வரனு நாளும் பிறந்துடை யுரனும் பின்னும்
மற்றுடை யெவையுந் தந்த மலரயன் முதலோர் வார்த்தை
விற்றொடை யிராமன் கோத்து விடுதலும் விலக்குண் டெல்லாம்
இற்றிடைந்திறுதன்மெய்யேவிளக்கின்முன்னிருளுண்டாமோ.

குன்றுநீ யெடுத்த நாடன் சேவடிக் கொழுந்தா லுன்னை
வென்றவன் புரங்கள் வேவத் தனிச்சரந் துரந்த மேரு
என்றுணைக் கணவ னுற்றற் குரனிலா திற்று வீழ்ந்த
அன்றெழுந் துயர்ந்த வோசை கேட்டிலை போலு மம்மா. 45

மலையெடுத் தெண்டிசை காக்கு மாக்களை
நிலைகெடுத் தேனெனு மாற்ற னேருநீ
சிலையெடுத் திளையவ னிற்கச் சேர்ந்திலை
தலையெடுத் தின்னமு மகளிர்த் தாழ்தியோ. 46

ஏழைநின் றொளித்துறை யின்ன தாமென
வாழியங் கோமக னறிய வந்தநாள்
ஆழியு மிலங்கையு மழியத் தாழுமோ
ஊழியுந் திரியுமுன் னுயிரொ டோயுமோ. 47

வெஞ்சின வரக்கரை விளிகை வீரமோ
வஞ்சனை நீசெய வள்ளல் சீற்றத்தால்
எஞ்சலி லுலகெலா மெஞ்சு மெஞ்சுமென்
றஞ்சுகின் றேனிதற் கறமுஞ் சான்றரோ. 48

அங்கண்மா ஞாலமும் விசும்பு மஞ்சவாழ்
வெங்கணாய் புன்றொழில் விலக்கி மேற்கொளாச்
செங்கண்மா னுன்முகன் சிவனென் றேகொலா
மெங்கணா யகனையு நினைந்த தேழைநீ. 49

மானுய ரவரென மனக்கொண் டாயெனின்
கானுயர் வரைநிகர் காத்த வீரியன்
தானொரு மனிதனாற் றளர்ந்து ளானெனின்
தேனுயர் தெரியலான் றன்மை தேர்தியால். 50

இருவரென் றிகழ்ந்தனை யென்னின் யாண்டெல்லை
ஒருவனன் றேயுல கழிக்கு மூழியான்
செருவருங் காலையென் மெய்மை தேர்தியால்
பொருவருந் திருவிழந் தநாயம் பொன்றுவாய். 51

பொற்கணன் றம்பியென் றினைய போர்த்தொழில்
விற்கொணான் பொருவுதோ ளவுணர் வேறுளார்
நற்கணார் நல்லறந் துறந்த நாளினும்
இற்கண ரிறந்தில ரிறந்து நீங்கினர். 52

பூவிலோ னாதி யாகப் புலன்கள்போ நெறியிற் போகாத்
தேவரோ வவுணர் தாமோ நிலைநின்று வினையிற் றீர்ந்தார்
ஏவலெவ் வுலகுஞ் செய்யச் செல்வநிற் கிசைந்த தேழாய்
பாவமோ முன்னீ செய்த தருமமோ தெரியப் பாராய். 53

இப்பெருஞ் செல்வ நின்க ணீந்தபே ரீசன் யாண்டும்
அப்பெருஞ் செல்வந் துய்ப்பா னின்றுமா தவத்தி னன்றே
ஒப்பருந் திருவி னீங்கி யுறவொடு முலக்க வுன்னித்
தப்புதி யறத்தை யேழாய் தருமத்தைக் காமி யாதே. 54

மறந்திறம் பாத தோலா வலியின ரெனினு மாண்டார்
அறந்திறம் பினரு மக்கட் கருடிறம் பினரு மன்றே
பிறந்திறந் துழலும் பாசப் பிணக்குடைப் பிணியிற் றீர்ந்தார்
துறந்தரும்பகைகண் மூன்றுந்துடைத்தவர்பிறர்யார்சொல்லாய்.

தென்றமி ழுரைத்தோன் முன்னுத் தீதுதீர் முனிவர் யாரும்
புன்றொழி லரக்கர்க் காற்றே நோற்கிலம் புகுந்த போதே
கொன்றரு ளின்று லன்றூர் குறைவது சரதங் கோவே
என்றனர் யானே கேட்டே னீயதற் கிசைவ செய்தாய். 56

உன்னையுங் கேட்டு மற்றுன் னூற்றமு முடைய நாளும்
பின்னையிவ் வரக்கர் சேனைப் பெருமையு முனிவர் பேணிச்
சொன்னபி னுங்கை மூக்கு மும்பியர் தோளுந் தாளும்
சின்னபின் னங்கள் செய்த வதனைநீ சிந்தி யாயோ. 57

ஆயிரந் தடக்கை யானின் னைநான்கு கரமும் பற்றி
வாய்வழி குருதி சோரக் குத்திவான் சிறையில் வைத்த
தாயவன் வயிரத் தோள்க ணித்தவன் றொலைந்த மாற்றம்
நீயறிந் திலையோ நீதி நெறியறிந் திலாத நீசா. 58

கடிக்கும்வல் லரவுங் கேட்கு மந்திரங் களிக்கின் றோயை
அடுக்குமீ தடாதென் றுன்ற வேதுவோ டறிவு காட்டி
இடிக்குந ரில்லை யுள்ளா ரெண்ணிய தெண்ணி நின்னை
முடிக்குந ரென்ற போது முடிவன்றி முடிவ துண்டோ. 59

என்ற றத்துறை கேட்டலு மிருபது நயனம்
மின்றி றப்பன வொத்தன வெயில்விடு பகுவாய்
குன்றி றத்தெழித் துரப்பின குறிப்பெருங் காமன்
தன்றி றத்தையுங் கடந்தது சீற்றத்தின் றகைமை. 60

வளர்ந்த நாணினன் மாதிர மனைத்தையு மறைவித்
தளர்ந்த தோளின னனல்சொரி கண்ணின னவளைப்
பிளந்து தின்பனென் றுடன்றனன் பெயர்ந்தனன் பெயராக்
கிளர்ந்த சீற்றமுங் காதலு மெதிரெதிர் கிடைப்ப. 61

அன்ன காலையி னநுமனு மருந்ததிக் கற்பின்
என்னை யாளுடை நாயகன் றேவியை யென்முன்
சொன்ன நீசன்கை தொடுவதன் முன்றுகைத் துழக்கிப்
பின்னை நின்றது செய்குவ னென்பது பிடித்தான். 62

தனியி னின்றனன் றலைபத்துங் கடித்துகத் தாக்கிப்
பனியின் வேலையி லிலங்கையைக் கீழுறப் பாய்ச்சிப்
புனித மாதவத் தணங்கினைக் கொண்டுடன் போவன்
இனிதி னென்பது நினைந்தனன் கரம்பிசைந் திருந்தான். 63

ஆண்ட வாளரக் கன்கனன் றண்டத்தை யழிப்பான்
மூண்ட காலவெந் தீயென முற்றிய சீற்றம்
நீண்ட காதனீர் நீத்தத்தின் நவிவுறு நிலையின்
மீண்டு நின்றொரு தன்மையா லிவையிவை விளம்பும். 64

கொல்வனென்றுடன்றேனுன்னைக்கொல்வதுகுறித்துச்சொன்
சொல்லளவவற்றுக்கெல்லாங்காரணந்தெரியச்சொல்லின் [ன
ஒல்வதீ தொல்லா தீதென் றெனக்குமொன் றுலகத் துண்டோ
வெல்வதுந் தோற்ற லுனும் விளையாட்டின் விளைந்த மேனாள்.

ஒன்றுகே ளுரைக்க நிற்கோ ருயிரென வுரியான் றன்னைக்
கொன்றுகோ ளிழைத்தா னீநின் னுயிர்விடிற் கூற்றங் கூடும்
என்றவ ருயிரு நீங்கு மென்பதை யிையய வெண்ணி
அன்றுநான் வஞ்சஞ் செய்த தாரெனக் கமரி னேர்வார். 66

மானென்ப தறித்து போன மானுட ராவார் மீண்டி
யானென்ப தறிந்தால் வாரா ரேழைநீ யெண்ணி நோக்கில்
தேனென்ப தறிந்த சொல்லாய் தேவர்தா மவுணர் தாமெங்
கோனென்ப தறிந்த பின்னைத் திறம்புவார் குறையி னல்லால்.

ஒவன்றோரு மிருக்க யார்க்கு மேலவர் விளிவி லாதோர்
என்றோரு மிருக்க வன்றே யிந்திர னேவல் செய்ய
ஒன்றாத வுலக மூன்று மூணர்கின்ற வொருவன் யானே
மென்றோளா யிதற்கு வேறோர் காரணம் விரிப்ப துண்டோ. 68

மூவருந் தேவர் தாமு முரணுக முற்றுங் கொற்றம்
பாவைநின்பொருட்டினுலோர்பழிபெறப்பயன்றீர்நோன்பின்
ஆவியின் மனிதர் தம்மை யடுகிலே னவரை யீண்டக்
கூவிநின் றேவல் கொள்வன் காணுதி குதலைச் சொல்லாய். 69

சிற்றியற் சிறுமை யாற்றற் சிறுதொழின் மனித ரோடே
முற்றிய தாவில் வீர முனிவென்கண் முளையா தேனும்
இற்றையிற் பகலி லெய்தி யிருவரை யொருகை யால்யான்
பற்றினன் கொணருந் தன்மை காணுதி பழிப்பி லாதாய். 70

பதவிய மனித ரேனும் பைந்தொடி நின்னைத் தந்த
உதவியை யுணர நோக்கி னுயிர்கொலைக் குரிய ரல்லர்
சிதைவுற லவர்க்கு வேண்டிற் செய்திறன் றேர்ந்த தெண்ணின்
இதனினக் கீதே யாகி னியற்றுவல் காண்டி யின்னும். 71

பள்ளநீ ரயோத்தி நண்ணிப் பரதனே முதலி னோராண்
டுள்ளவர் தம்மை யெல்லா முயிர்குடித் தாழித் தீயின்
வெள்ளநீர் மிதிலை யோரை வேரறுத் தெளிதி னெய்திக்
கொள்வனின் னுயிரு மென்னை யறிந்திலை குறைந்த நாளோய்.

ஈதுரைத் தழன்று பொங்கி யெரிகதிர் வாளை நோக்கித்
தீதுயிர்க் கிழைக்கு நாளுந் திங்களோ ரிரண்டிற் றீர்ந்த
தாதலி னின்ன தென்னென் றறிந்தவா றறிதி யென்றுப்
போதரிக் கண்ணி னுளை யகத்துவைத் துரப்பிப் போனான். 73

அஞ்சுவித் தானு மொன்று லறிவுறத் தேற்றி யானும்
வஞ்சியிற் செவ்வி யாளை வசித்தென்பால் வரச்செ யீரேல்
நஞ்சுமக் காவ னென்று நகையிலா முகத்துப் பேழ்வாய்
வெஞ்சினத் தாக்கி மார்க்கு வேறுற வுணர்த்திப் போனான். 74

போயின னரக்கன் பின்னைப் பொங்கரா நுங்கிக் கான்ற
தூயவெண் மதியை யொத்த தோகையைத் தொடர்ந்து சுற்றித்
தீயவல் லரக்கி மார்க டெழீஇத்தெழித் துரப்பிச் சிந்தை
மேயின வண்ண மெல்லாம் விளம்புவ ருடன்று மிக்கார். 75

முன்முன் னின்றார் கண்கனல் சிந்தி முடுகுற்றார்
மின்மின் னென்னுஞ் சூலமும் வேலு மிவையோச்சிக்
கொன்மின் கொன்மின் கொன்று குறைத்துக் குடராரத்
தின்மின் றின்மி னென்று தெழித்தார் சிலரெல்லாம். 76

வையந் தந்த நான்முகன் மைந்தன் மகன்மைந்தன்
ஐயன் வேத மாயிரம் வல்லோ னறிவாளன்
மெய்யன் புன்பால் வைத்துள தல்லால் வினைவென்றோன்
செய்யும் புன்மை யாதுள தென்றார் சிலரெல்லாம். 77

மண்ணிற் றீய மானுயர் தத்தம் வழியோடும்
பெண்ணிற் றீயோய் நின்முதன் மாயும் பிணிசெய்தாய்
புண்ணிற் கோலிட் டாலன சொல்லிப் பொதுநோக்கா
தெண்ணிக் காணு மெம்மையு மென்றார் சிலரெல்லாம். 78

புக்க வழிக்கும் போந்த வழிக்கும் புகைவெந்தீ
ஒக்க விதைப்பா னுற்றனை யன்றே வுணர்வில்லாய்
இக்கண மிற்று முன்னில மெல்லா மினிவாழாய்
சிக்க வுரைத்தோ மென்று கதித்தார் சிலரெல்லாம். 79

கொல்வா னுற்றோர் பெற்றியும் யாதுங் குறையாதார்
வெல்வா னங்கோன் றின்னுமின் வம்மென் பவர்மெய்யும்
வல்வாய் வெய்யோ னேவலு மெல்லா மனம்வைத்தாள்
நல்லா ணல்ல கண்கள் கலுழ்ந்தே நகுகின்றாள். 80

இன்றே ரன்ன வெய்திய காலத் திடைநின்றாள்
முன்னே சொன்னேன் கண்ட கனவின் முடிவம்மா
பின்னே வாளா பேதுறு வீரேற் பிழையென்றாள்
அன்னே நன்றென் றரவ ரெல்லா மறிவுற்றார். 81

அறிந்தா ரன்ன முச்சடை யென்பா ளவள்சொல்லப்
பிறிந்தார் சீற்ற மன்னனை யஞ்சிப் பிறிகில்லார்
செறிந்தா ராய தீவினை யன்னார் தெறுவென்னார்
நெறிந்தா ரோதிப் பேதையு மாவி நிலைநின்றாள். 82





# திருவாழிகாட்டு படலம்.

காண்டற் கொத்த காலமு மீதே தெறுகாதல்
தூண்டற் கொத்த சிந்தையி னாருந் துயருற்றார்
வேண்டத் துஞ்சா ரென்றொரு விஞ்சை வினைசெய்தான்
ஆண்டுக் குற்றா ராமென வெல்லா மயர்வுற்றார். 1

துஞ்சா தாருந் துஞ்சுதல் கண்டா யெருற்றாள்
நெஞ்சா லொன்று முய்வழி காணா ணெகுகின்றாள்
அஞ்சா நின்றா ளங்நெடு நாளு மழிவுற்றாள்
எஞ்சா வன்பா லின்ன பகர்ந்தாங் கிடருற்றாள். 2

கருமே கநெடுங் கடல்கா ரனையான்
தருமே தனியே னென்தா ருயிர்தான்
உருமே றுறழ்வெஞ் சிலைநா ணொலிதான்
வருமே யுரையாய் வலியார் வலியே. 3

கல்லா மதியே கதிர்வா ணிலவே
செல்லா விரவே சிறுகா விருளே
எல்லா மெனையே முனிவீர் நினையா
வில்லா ளனையா தும்விளித் திலிரோ. 4

தழல்வீ சவுலாய் வருவா டைதழீஇ
அழல்வீ ரெனதா வியநிந் திலிரோ
நிழல்வீ ரையனு ருடனீர் நெடுநாள்
உழல்வீர் கொடியீ ருரையா டலிரோ. 5

வாரா தொழியா னெனும்வன் மையினால்
ஓரா யிரகோ டியிடர்க் குடைவேன்
தீரா வொருநாள் வலிசே வகனே
நாரா யணனே தனிநா யகனே. 6

தருவொன் றியகா னடைவாய் தவிர்நீ
வருவன் சிலநா ளினின்மா நகர்வாய்
இருவென் றனையின் னருடா னிதுவோ
ஒருவென் றனியா வியையுண் ணுதியோ. 7

பேணும் முணர்வே யுயிரே பெருநாள்
நாணென் றுழல்வீர் தனிநா யகனைக்
காணுந் தனையுங் கழிவீ ரலிர்நான்
பூணும் பழியோ டுபொருந் துவதோ. 8

முடியா முடிமன் னன்முடிந் திடவும்
படியே ழுநெடுந் துயர்பா விடவும்
மடியா நெறிவந் துவனம் புகுதும்
கொடியான் வருமென் றுகுலா வுவதோ. 9

என்றென் றுயிர்விம் மியிருந் தழிவாள்
மின்றன் னுமருங் குல்விளங் கிழையாள்
ஒன்றென் னுயிருண் டெனினுண் டிடர்யான்
பொன்றும் பொழுதே புகழ்பூ ணுமெனா. 10

பொறையிருந் தாற்றியென் னுயிரும் போற்றினேன்
அறையிருங் கழலவற் காணு மாசையால்
நிறையிரும் பல்பக னிருதர் நீணகர்
சிறையிருந் தேனையும் புனிதன் நீண்டுமோ. 11

உன்னினர் பிறரென வுணர்ந்து முய்ந்தவர்
சொன்னன சொன்னன செவியிற் றூக்கவும்
மன்னுயிர் காத்திருங் காலம் வைகினேன்
என்னின்வே றரக்கியர் யாண்டை யார்கொலோ. 12

சொற்பிரி யாப்பழி சுமந்து தூங்குவேன்
நற்பிறப் புடைமையு நாணு நன்றரோ
கற்புடை மடந்தையர் கதையு ளோர்கடாம்
இற்பிரிந் துய்ந்தவர் யாவர் யானலால். 13

பிறர்மனை யெய்திய பெண்ணைப் பேணுதல்
திறனல தென்றுயிர்க் கிறைவன் நீர்ந்தனன்
புறனல மென்றவப் போது போக்கியான்
இறனல தியற்றிவே றென்கொண் டாற்றுகேன். 14

எப்பொழு திப்பெரும் பழியி னெய்தினேன்
அப்பொழு தேயுயிர் துறக்கு மாணையேன்
ஒப்பரும் பெருமறு வுலக மோதயான்
துப்பழிந் துய்வது துறக்கந் துன்னவோ. 15

அன்பழி சிந்தைய ராய வாடவர்
வன்பழி சுமக்கவுஞ் சுமக்க வானுயர்
துன்பழி பெரும்புகழ்க் குலத்துட் டோன்றினேன்
என்பழி துடைப்பவ ரென்னின் யாவரோ. 16

வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கியென்
மஞ்சனை வைதுபின் வழிக்கொள் வாயென்று
நஞ்சனை யானகம் புகுந்த நங்கைநான்
உய்ஞ்சன னிருத்தலு முலகங் கொள்ளுமோ. 17

வல்லியன் மறவர்தம் வடிவிற் றீர்பவர்
வெல்லினும் வெல்கபோர் விளிந்து வீடுக
இல்லிய லறத்தையா னிறந்து வாழ்ந்தபின்
சொல்லிய வென்பழி யவரைச் சுற்றுமோ. 18

வருந்தலின் மானமா வனைய மாட்சியர்
பெருந்தவ மடந்தையர் முன்பு பேதையேன்
கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வரூர்
இருந்தவ ளிவளென வேச நிற்பனே. 19

அற்புத னரக்கர்தம் வருக்க மாசற
விற்பணி கொண்டருஞ் சிறையின் மீட்டநாள்
இற்புகத் தக்கிலே யென்னின் யானுடைக்
கற்பினை யெப்பரி சிழைத்துக் காட்டுகேன். 20

ஆதலா னிறத்தலே யறத்தி னுறெனுச்
சாதல்காப் பவருமென் றவத்திற் சாம்பினுர்
ஈதலா திடமும்வே றில்லை யென்றொரு
போதுலா மாதவிப் பொதும்ப ரெய்தினுள். 21

கண்டன னநுமனுங் கருத்து மெண்ணினுன்
கொண்டனன் றுணுக்கமெய் தீண்டக் கூசுவான்
அண்டர்நா யகனரு டேன் யானெனுத்
தொண்டைவாய் மயிலினைத் தொழுது தோன்றினுன். 22

அடைந்தன னடியனே னிராம னுணையால்
குடைந்துல கனைத்தையு நாடுங் கொட்பினால்
மிடைந்தவ ருலப்பிலர் தவத்தை மேவலான்
மடந்தைநின் சேவடி வந்து நோக்கினேன். 23

ஈண்டுநீ யிருந்ததை யிடரின் வைகுறும்
ஆண்டகை யறிந்தில னதற்குக் காரணம்
வேண்டுமோ வரக்கர்தம் வருக்கம் வேரொடு
மாண்டில வீதலான் மாறுவே றுண்டோ. 24

ஐயுற வுளதடை யாள மாரியன்
மெய்யுற வுணர்த்திய வுரையும் வேறுள
கையுறு நெல்லியிற் கடிதிற் காண்டியால்
நெய்யுறு விளக்கனாய் நினையல் வேறென்றான். 25

என்றவ னிறைஞ்ச நோக்கி யிரக்கமு முனிவு மெய்தி
நின்றவ னிருத னல்ல னெறிநின்று பொறிக ளைந்தும்
வென்றவ னல்ல னாகின் விண்ணவ னாகல் வேண்டும்
நன்றுணர் வுரையுந் தூய னவையிலன் போலு மென்னா. 26

அரக்கனே யாக வேறோ ரமரனே யாக வல்ல
குரக்கினத் தலைவ னேதா னாகுக கொடுமை யாக
இரக்கமே யாக வந்தெங் கெம்பிரா னாமஞ் சொல்லி
உருக்கின னுணர்வைத் தந்தா னுயிரிதி னுதவி யுண்டோ. 27

எனநினைத் தெய்த நோக்கி யிரங்குமெ னுள்ளங் கள்ளம்
மனனகத் துடைய ராய வஞ்சகர் மாற்ற மல்லன்
நினைவுடைச் சொற்கள் கண்ணீர் நிலம்புகப் புலம்பா நின்றான்
வினவுதற் குரிய னென்னா வீரநீ யாவ னென்றாள். 28

ஆயிடைத் தலைமேற் கொண்ட வங்கையா னன்னை நின்னைத்
தூயவன் பிரிந்த பின்னைத் தேடிய துணைவன் றொல்லைக்
காய்கதிர்ச் செல்வன் மைந்தன் கவிகுல மவற்றுக் கெல்லாம்
நாயகன் சுக்கி ரீவ னென்றுள னவையிற் றீர்ந்தான். 29

மற்றவன் முன்னோ னந்நா ளிராவணன் றன்னை வாலின்
இற்றுகக் கட்டி யெட்டுத் திசையினு மெழுந்து பாய்ந்த
வெற்றியன் றேவர் வேண்ட வேலையை விலங்கன் மத்தில்
சுற்றிய நாகந் தேய வமிர்தெழக் கடைந்த தோளான். 30

அன்னவன் றன்னை யுங்கோ னம்பொன்றா லாவி வாங்கிப்
பின்னவற் கரசு நல்கித் துணையெனப் பிடித்தா னெங்கள்
மன்னவன் றனக்கு நாயேன் மந்திரத் துள்ளேன் வானின்
நன்னெடுங் காலின் மைந்த னாமமு மநும னென்பேன். 31

எழுபது வெள்ளங் கொண்ட வெண்ணன வுலக மெல்லாம்
தழுவிநின் றெடுப்ப வேலை தனித்தனிக் கடக்குந் தாள
குழுவின வுங்கோன் செய்யக் குறித்தது குறித்துப் பின்னும்
வழுவில செய்தற் கொத்த வானரம் வானி னீண்ட. 32

துப்புறு பரவை யேழுஞ் சூழ்ந்தபா ரேழு மாழ்ந்த
ஒப்புறு நாகர் நாடு மும்பரி னிம்பர் காறும்
இப்புறந் தேடி நின்னை யெதிர்ந்தில வென்னி னண்டத்
தப்புறம் போயுந் தேட வவதியி னமைந்து போன. 33

புன்றொழி லரக்கன் கொண்டு போந்தநாட் பொதிந்த தூசின்
குன்றினெம் மருங்கி னிட்ட வணிகலக் குறியி னாலே
வென்றியா னடியனேனை வேறுகொண் டிருந்து கூறித்
தென்றிசைச் சேறி யென்றா னவனருள் சிதைவ தாமோ. 34

கொற்றவற் காண்டுக் காட்டிக் கொடுத்தபோ தடுத்த தன்மை
பெற்றியி னுணர்தற் பாற்றே வுயிர்நிலை பிறிது முண்டோ
இற்றைநா ளளவும் பொன்னே யன்றுநீ யிழித்து நீத்த
மற்றைநல் லணிகள் காணும் மங்கலங் காத்த மன்னோ. 35

ஆயவன் றன்மை நிற்க வங்கதன் வாலி மைந்தன்
ஏயவன் றென்பால் வெள்ள மிரண்டுட னெழுந்த சேனை
மேயின படர்ந்து தீர வனையவன் விடுத்தா னென்னைப்
பாய்புன லிலங்கை மூதூர்க் கென்றனன் பழியை வென்றான்.

இஃதவ னுரைத்த லோடு மெழுந்துபே ருவகை யேற
வெய்துற வொடுங்கு மேனி வானுற விம்மி யோங்கி
உய்தல்வந் துற்ற தோவென் றருவிநீ ரொழுகு கண்ணாள்
ஐயசொ லையன் மேனி யெப்படிக் கறிதி யென்றாள். 37

படியுரைத் தெடுத்துக் காட்டும் படித்தன்று படிவம் பண்பின்
முடிவுள வுவமை யெல்லா மிலக்கண மொழியு முன்னர்த்
துடியிடை யடையா ளத்தின் றொடரவை தொடர்தி யென்று
அடிமுதன் முடியின் காறு மறிவுற வநுமன் சொல்வான். 38

சேயிதழ்த் தாமரை யென்று சேணுளோர்
ஏயின ரதன்றனை யெளிய தில்லையால்
நாயகன் றிருவடி குறித்து நாடிறின்
பாய்திரைப் பவளமுங் குவளைப் பண்பினும். 39

தளங்கெழு கற்பக முகுழுந் தண்டுறை
இளங்கொடிப் பவளமுங் கிடக்க வென்னவை
துளங்கொளி விரற்கெதி ருதிக்குஞ் சூரியன்
இளங்கதி ரொக்கினு மொக்கு மேந்திழாய். 40

சிறியவும் பெரியவு மாகித் திங்களோ
மறுவில பத்துள வல்ல மற்றினி
எறிசுடர் வயிரமோ திரட்சி யெய்தில
அறிகில னுகிர்க்கியா னுவமை யாவன. 41

பொருந்தில நிலனொடு போந்து கானிடை
வருந்தின வெனினது நூலே மாறுகொண்
டிருந்தது நின்றது புவனம் யாவையும்
ஒருங்குடன் புணர்வஃ துரைக்கற் பாலதோ. 42

தாங்கணைப் பணிலமும் வளையுந் தாங்கரா
வீங்கணைப் பள்ளியா னெனினும் வேறினிப்
பூங்கணைக் காற்கொரு பரிசு தான்பொரும்
ஆங்கணைக் காவமோ வாவ தன்னமே. 43

அறங்கிளர் பறவையி னரச னொடெழிற்
பிறங்கெருத் தனையன பிறரும் பெற்றுடை
மறங்கிளர் மதகரிக் கரமு நாணின
குறங்கினுக் குவமையிவ் வுலகிற் கூடுமோ. 44

வலஞ்சுழித் தொழுகுநீர் வழங்கு கங்கையின்
பொலஞ்சுழி யென்றலும் புன்மை பூவொடு
நிலஞ்சுழித் தெழுமணி யுந்தி நேரினி
இலஞ்சியம் பொருவும்வே றுவமை யாண்டதோ. 45

பொருவரு மரகதப் பொலங்கொண் மால்வரை
வெருவுற விரிந்துயர் விலங்க லாகத்தைப்
பிரிவற நோற்றன ளென்னிற் பின்னையத்
திருவினிற் றிருவுளார் யாவர் தெய்வமே. 46

நீடுறு கீட்டிசை நின்ற யானையின்
கோடுறு கரமெனச் சிறிது கூறலாம்
தோடுறு மலரெனச் சுரும்பு சுற்றுருத்
தாடொடு தடக்கைவே றுவமை சாலுமோ. 47

பச்சிலைத் தாமரை பகற்கண் டாலன்ன
கைச்செறி முகுமுகிர் கனக னென்பவன்
வச்சிர யாக்கையை வகிர்ந்த வன்றெழில்
நிச்சய மன்றெனி னைய நீக்குமே. 48

திரண்டில வொளியில திருவின் சேர்வில
முரண்டரு மேருவின் முரிய மூரிநாண்
புரண்டில புகழில பொருப்பென் றென்றுபோன்
றிரண்டில புயங்களுக் குவமை யேற்குமோ. 49

கடற்படு பணிலமுங் கன்னிப் பூகமும்
மிடற்றினுக் குவமையென் றுரைக்கும் வெள்ளியோர்க்
குடற்பட வொண்ணுமோ வுரகப் பள்ளியான்
இடத்துறை சங்கமொன் றிருக்க வெங்களால். 50

அண்ணறன் றிருமுகங் கமல மாமெனின்
கண்ணினுக் குவமைவே றியாது காட்டுவேன்
தண்மதி யாமென வுரைக்கத் தக்கதோ
திண்ணுடல் பொலிந்ததோ மெலிந்து தேயலால். 51

ஆரமு மகிலு நீவி யகன்றதோ ளமலன் செவ்வாய்
நாரமுண் டலர்ந்த செங்கேழ் நளினமென் றுரைக்க நாணும்
ஈரமுண் டமுத மூறு மின்னுரை யியம்பா தேனும்
மூரல்வெண் முறுவல் பூவாப் பவளமோ மொழியற் பாற்றே. 52

முத்தங் கொல்லோ முழுநிலவின் முறியின்
றிறனோ முறையமுதக்
தொத்தின் றுள்ளி வெள்ளியினந் தொடுத்த
கொல்லோ துறையறத்தின்
வித்து முளைத்த வங்குரங்கொல் வேறே
சிலகொன் மெய்முகுழ்த்த
கொத்தின் றொகைகொல் யாதென்று பல்லுக்
குவமை கூறுகேன். 53

எள்ளா நிலத்திந் திரநீலத் தெழுந்த கொழுந்து மரகதத்தின்
விள்ளா முழுமா நிழற்பிழம்பும் வேண்ட வேண்டு மேனியதோ
கள்ளா வோதி கோபத்தைக் கவ்வ வந்து சார்ந்ததுவும்
கொள்ளா வள்ள திருமூக்கிற் குவமை பின்னுங் குணிப்பாமோ.

பணிக்கச் சுரத்துக் கரன்முதலோர் கவந்தப் படையும் பல்பேயும்
தனிக்கைச் சிலையும் வானவரு முனிவர் குழுவுந் தனியறமும்
இனிக்கட் டழிந்த தரக்கர்குல மென்னுஞ் சுருதி யீரிரண்டும்
குனிக்கக் குனித்த புருவத்துக் குவமை நீயே கோடியால். 55

வருநாட் டோன்றுந் தனிமறுவும் வளர்வுந் தேய்வும் வாளரவம்
ஒருநாட் கவ்வு முறுகோளு மிறப்பும் பிறப்பு மொழிவுற்றால்
இருநாட் பகலி னிலங்குமதி யலங்க லிருளி னெழினிழற்கீழ்ப்
பெருநா ணிற்பி னவனெற்றிப் பெற்றிற் றாகப் பெறுமன்றே.

நீண்டு குழன்று நெய்த்திருண்டு நெறிந்து செறிந்து நெடுநீலம்
பூண்டு புரிந்து சரிந்துகடை சுருண்டு புகையு நறும்பூவும்
வேண்டு மல்ல வெனத்தெய்வ வெறியே கமழு நறுங்குஞ்சி
ஈண்டு சடையா யினவென்றான் மழையென் றுரைத்த விழி
[வன்றோ.

புல்ல லேற்ற திருமகளும் பூவும் பொருந்தப் புவியேழின்
எல்லை யேற்ற நெடுஞ்செல்வ மெதிர்ந்த தொன்று மஃதின்றி
அல்ல லேற்ற கானகத்து மழியா நடையை யிழிவான
மல்ல லேற்றி லுளதென்முன் மத்த யானை வருந்தாதோ. 58

என்ன மொழிய வம்மொழிகேட் டெரியி னிட்ட மெழுகென்
தன்னை யறியா தயர்வாளைத் தரையின் வணங்கி நாயகனார்[னத்
சொன்ன குறிகே ளடையாளச் சொல்லு முளவா லவைதோகை
அன்ன நடையாய் கேட்கென்று வறிய வறைவா னயினான்.59

நடத்தலரி தாகுநெறி நாள்கள்சில தாயர்க்
கடுத்தபணி செய்திவ ணிருத்தியென வச்சொற்
குடுத்ததுணி யோடுமுயி ருக்கவுட லோடும்
எடுத்தமுனி வோடுமய னின்றது மிசைப்பாய். 60

நீண்டமுடி வேந்தனரு ளேந்திநிறை செல்வம்
பூண்டதனை நீங்கிநெறி போத லுறு நாளின்
ஆண்டநக ரரரையொடு வாயிலக லாமுன்
யாண்டையது கானென விசைத்தது மிசைப்பான். 61

எள்ளரிய தேர்தரு சுமந்திர னிசைப்பான்
வள்ளல்வழி வாசக மெனத்துயர் மறந்தாள்
கிள்ளையொடு பூவைகள் வளர்த்தல்கிள வென்னும்
பிள்ளையுரை யின்றிற முணர்த்துதி பெயர்த்தும். 62

மீட்டுமுரை வேண்டுவன வில்லையென மெய்ப்பேர்
தீட்டியது தீட்டரிய செய்கையது செவ்வே
நீட்டிதென நேர்ந்தன னெனுநெடிய கையால்
காட்டினனொ ராழியது வாணுதலி கண்டாள். 63

இறந்தவர் பிறந்தபய னெய்தினர்கொ லென்கோ
மறந்தவ ரறிந்துணர்வு வந்தனர்கொ லென்கோ
துறந்தவுயிர் வந்திடை துடித்ததுகொ லென்கோ
திறந்தெரிவ தென்னைகொலி நன்னுதலி செய்கை. 64

இழந்தமணி புற்றர வெதிர்ந்ததென லானாள்
பழந்தன மறைந்தன படைத்தவரை யொத்தாள்
குழந்தையை யுயிர்த்தமல டிக்குவமை கொண்டாள்
உழந்தவிழி பெற்றதொ ருயிர்ப்பொறியு மொத்தாள். 65

வாங்கினண் முலைக்குவையில் வைத்தனள் சிரத்தால்
தாங்கினண் மலர்க்கண்மிசை யொற்றின டடந்தோள்
வீங்கினண் மெலிந்தனள் குளிர்ந்தனள் வெதுப்போ
டேங்கின ளுயிர்த்தன ளிதின்னதென லாமே. 66

மோக்குமுலை வைத்துற முயங்குமொழி நன்னீர்
நீக்கிநிறை கண்ணிணை தழும்புபட நீள
நோக்குநுவ லக்கருது மொன்றுநுவல் கில்லாள்
மேக்குநிமிர் விம்மலள் விழுங்கலுறு கின்றாள். 67

நீண்டவிழி நேரிழைதன் மின்னினிற மெல்லாம்
பூண்டதொளிர் பொன்னனைய பொம்மனிற மெய்யே
ஆண்டகைதன் மோதிர மடுத்தபொரு ளெல்லாம்
தீண்டளவில் வேதிகைசெய் தெய்வமணி கொல்லோ. 68

இருந்துபசி யாவிட ருழந்தவர்க ளெய்தும்
அருந்துமமு தாகிய தறத்தவரை யண்மும்
விருந்துமென லாகியது வீயுமுயிர் மீளும்
மருந்துமென லாகியது வாழிமணி யாழி. 69

இத்தகைய ளாகியுயி ரேமுற விளங்கும்
முத்தநகை யாள்விழியி னவிமுலை முன்றில்
தத்தியுக மென்குதலை தள்ளவுயிர் தந்தாய்
உத்தம வெனாவினைய வாசக முரைத்தாள். 70

மும்மையா முலகந் தந்த முதல்வற்கு முதல்வ முற்றுஞ்
செம்மையா லுயிர்தந் தாய்க்குச் செயலென்னா லெளிய துண் [டே
அம்மையா யத்த னாய வப்பனே யருளின் வாழ்வே
இம்மையே மறுமை தானு நல்கினை யிசையோ டென்றாள். 71

பாழியாம் பணைத்தோள் வீரா துணையிலேன் பரிவு தீர்த்த
வாழியாய் வள்ள லேயான் மறுவிலா மனத்தா னென்னில்
ஊழியோர் பகலா யோதும் யாண்டெலா முலக மேழும்
ஏழும்வீ வுற்ற வன்று மின்றென விருத்தி யென்றாள். 72

மீண்டுரை விளம்ப லுற்றாள் விழுமிய குணத்தோய் வீரன்
யாண்டையா னிளவ லோடு மெவ்வழி யெய்திற் றன்னை
ஆண்டகை யடியேன் செய்கை யார்சொல வறிந்த தென்றாள்
தாண்டிர டடந்தோ ளானு முற்றது சொல்ல லுற்றான். 73

உழைக்குலத் தீய மாய வுருவுகொண் டுறுதல் செய்தான்
மழைக்கரு நிறத்து மாய வரக்கன்மா ரீச னென்பான்
இழைத்தட மார்பத் தண்ண லெய்யப்போய் வெய்ய சொல்லால்
அழைத்ததவ் வோசை யுன்னை மயக்குற்ற தரக்கன் சொல்லால்.

இக்குர விளவல் கேளா தொழிகென விறைவ னிட்டான்
மெய்க்குரற் சாபம் பின்னை விளைந்தது விதியின் வெம்மை
பொய்க்குர லன்று போலாம் பொருள்பின்பு பயக்குமென்பான்
கைக்குரல் வரிவி லானு மிளையவன் வரவு கண்டான். 75

கண்டபி னிளைய வீரன் முகத்தினுற் கருத்தை யோர்ந்த
புண்டரீ கக்க ணுனு முற்றது புகலக் கேட்டான்
வண்டுறை சோலை வந்தா னின்றிரு வடிவு காணுன்
உண்டுயி ரிருந்தா னின்ன லுழத்தற்கே யேது வன்ரே. 76

தேண்டிநேர் கண்டேன் வாழி தீதில னெங்கோ னுகம்
பூண்டமெய் யுயிரோய் போதப் பொய்யுயிர் போலநின்ற
ஆண்டகை நெஞ்சி னின்று மகன்றிலை யழிவுண் டாமோ
ஈண்டுநீ யிருந்தா யாண்டங் கெவ்வுயிர் விடுமி ராமன். 77

அந்நிலை யாய வண்ண லாண்டுநின் றன்னை நின்னைத்
துன்னிருங் கானும் யாறு மலைகளுந் தொடர்ந்து நாடி
இன்னுயி ரின்றி யேங்கு மியந்திரப் படிவ மொப்பான்
தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயுவை வந்து சார்ந்தான். 78

வந்தவன் மேனி நோக்கி வானுயர் துயரின் வைகி
எந்தைநீ யுற்ற தென்னை யியம்பென விலங்கை வேந்தன்
சுந்தரி நின்னைச் செய்த வஞ்சனை சொல்லச் சொல்ல
வெந்தன வுலக மென்ன நிமிர்ந்தது சீற்ற வெந்தீ. 79

சீறியிவ் வுலக மூன்றுந் தீந்துகச் சினவா யம்பால்
நூறுவ னென்று கைவி ஞேக்கிய காலை நோக்கி
ஊறொரு சிறியோன் செய்ய முனிதியோ வுலகை யுள்ளம்
ஆறுதி யென்று தாதை யாற்றலிற் சீற்ற மாற்றி. 80

எவ்வழி யேகிற் றன்ஞேன் யாண்டையா னுறையுள் யாது
செவ்வியோய் கூறு கென்னச் செப்புவா னுற்ற செவ்வி
வெவ்விய விதியின் கோட்பால் வீடினன் கழுகின் வேந்தன்
எவ்வமில் வரிவிற் செங்கை யிருவரு மிடரின் வீழ்ந்தார். 81

அயர்த்தவ ரரிதிற் றேறி யாண்டொழிற் றுதைக் காண்டுச்
செயத்தகு கடன்கள் யாவுந் தேவரு மருளச் செய்தார்
கயத்தொழி லரக்கன் றன்னை நாடிநாங் காண்டு மென்னுப்
புயற்றொடு குடுமிக் குன்றுங் கானமுங் கடிது போனார். 82

அவ்வழி யவனைக் காணு ராயின ரரிதிற் றேறிச்
செவ்விழி நீர்தாஞ் செல்லு நெடுவழி சேறு செய்ய
வெவ்வழ லுற்ற மெல்லென் மெழுகென வழியு மெய்யன்
இவ்வழி யினைய பன்னி யறிவழிந் திரங்க லுற்றான். 83

கன்மத்தை ஞாலத் தவராருள ரேக டந்தார்
பொன்மொய்த்த தோளான் மயல்கொண்டு புலன்கள் வேறாய்
நன்மத்தை நாகத் தயல்சூடிய நம்ப னேபோல்
உன்மத்த னானன் றனைபொன்று முணர்ந்தி லாதான். 84

போதாயின போதுன தண்புன லாடல் பொய்யோ
சீதா பவளக் கொழுந்தன்னது தேடி யென்கண்
நீதா தருகிற் றிலையே னெருப்பாதி யென்னுக்
கோதா வரியைச் சினங்கொண்டனன் கொண்ட லொப்பான்.

குன்றே கடிதோடினை கோமளக் கொம்ப ரன்ன
என்றேவியைக் காட்டுதி காட்டலை யென்னி லிவ்வம்
பொன்றே யமையும் மூனுடைக்குல முள்ள வெல்லாம்
இன்றே பிளவா வெரியாக்கரி யாக்க வென்றான். 86

பொன்மா னுருவாற் சிலமாயை புணர்க்க வன்றே
என்மா னகல்வுற்ற திப்பொழு தெங்க ணென்னு
நன்மான்களை நோக்கிநுந் நாமமு மாய்ப்ப னின்றே
வின்மாண் கொலைவாளியி னென்று வெகுண்டு நின்றான். 87

வேறுற்ற மனத்தவ னின்னதொர் விம்ம லோடே
ஆறுற்ற நெஞ்சிற் றனதாருயி ராய தம்பி
கூறுற்ற சொல்லென் றுளகோதறு நன்ம ருந்தால்
தேறுற் றுயிர்பெற் றியல்புஞ்சில சொல்ல லுற்றான். 88

வந்தா னிளையோனொடு வானுயர் தேரின் வைகும்
நந்தா விளக்கின் வருமெங்குல நாதன் வாழும்
சந்தார் தடங்குன் றினிற்றன்னுயிர்க் காத லோனும்
செந்தா மரைக்கண் ணனுநட்டனர் தேவ ருய்ய. 89

உண்டாயது முற்றது முற்று முணர்த்தி யுள்ளம்
புண்டானுற நோயுற விம்முறு கின்ற போழ்தின்
எண்டா னிழந்திட் டனனேந்திழை யாங்கள் காட்டக்
கண்டா னுயர்போதமும் வேதமுங் காண்கி லாதான். 90

தணிகின்ற நெஞ்சிற் றொடர்தன்மைய னாய தன்மை
துணிகொண் டிலங்குஞ் சுடர்வேலவன் றாய நின்கண்
அணிகண் டுழியே யமிர்தந்தெளித் தால மாறாப்
பிணிகொண்டது பண்டதுண் டாயினும் பேர்ப்ப தன்றால். 91

அயர்வுற் றரிதிற் றெளிந்தம்மலைக் கப்பு றத்தோர்
உயர்பொற் கிரியுற்றுளன் வாலியென் றோங்க லொப்பான்
துயருற்ற விராவணன் வாலிடைப் பண்டு தூங்க
மயர்வுற்ற பொருப்பொடு மால்கட லாவி வந்தான். 92

ஆயானை யோரம் பினிலாருயிர் வாங்கி யன்பிற்
றூயான் வயினவ் வரசீந்தவன் சுற்று சேனை
மேயான் வருவா னெனவிட்டனன் மேவு காறும்
ஏயா னிருந்தா னிடைதிங்க ளிரண்டு மூன்றும். 93

பிற்கூடிய சேனை பெருந்திசை பின்ன வாக
விற்கூடு நுதற்றிரு நின்னிடை மேவ வேவித்
தெற்கூ டுருவக் கடிதேவினன் சேர்ந்த தென்ன
முற்கூடிய கூறினன் காலமோர் மூன்றும் வல்லான். 94





## விசுவரூபப்படலம்.

அன்பின னம்முறை யுணர்த்த வாரியன்
வன்பொறை நெஞ்சினன் வருத்த முன்னுவாள்
என்புற வுருகினா ளிரங்கி யேங்கினள்
துன்பமு மூவகையுஞ் சுமந்த வுள்ளத்தாள். 1

நையுறு சிந்தைய ணயன் வாரியந்
தொய்யல்வெஞ் சுழியிடைச் சுழிக்கு மேனியள்
ஐயநீ யளப்பரு மளக்கர் நீந்தினை
எய்திய தெப்பரி சியம்புவா யென்றாள். 2

சுருங்கிடை யுன்னொரு துணைவன் றூயதாள்
ஒருங்குடை யுணர்வினு ரோய்வின் மாயையின்
பெருங்கடல் கடந்தனர் பெயரும் பெற்றியாற்
கருங்கடல் கடந்தனன் காலினு லென்முன். 3

இத்துணைச் சிறியதோ ரெண்ணில் யாக்கையை
தத்தினை கடலது தவத்தி னுயதோ
சித்தியி னியன்றதோ செப்புவா யென்முள்
முத்தினு நிலவினு முறுவன் முற்றினுள். 4

சுட்டின னின்றனன் ருெழுத கையினன்
விட்டுயர் தோளினன் விசும்பின் மேக்குயர்
எட்டரு நெடுமுக டெய்த நீளுமேல்
முட்டுமென் றுருவொடு வளைந்த மூர்த்தியான். 5

செவ்வழிப் பெருமையென் றுரைக்குஞ் செம்மைதான்
வெவ்வழிப் பூதமோ ரைந்தின் மேலதோ
அவ்வழித் தன்றெனி னநுமன் பாலதோ
எவ்வழித் தாகுமென் றெண்ணு மீட்டதோ. 6

ஒத்துயர் கனகவான் கிரியி ேனுங்கிய
மெய்த்துறு மரந்தொறு மின்மி னிக்குலம்
மொய்த்துள வாமென முன்னும் பின்னரும்
தொத்தின தாரகை மயிரின் சுற்றெலாம். 7

கண்டல மறிவொடு கடந்த காட்சிய
விண்டலத் திருபுடை விளங்கு மெய்மையக்
குண்டல மிரண்டுமக் கோளின் மாச்சுடர்
மண்டல மிரண்டொடு மாறு கொண்டவே. 8

எணில வொருகுரங் கீதென் றெண்ணலாள்
ஆணியை யநுமனை யமைய நோக்குவாள்
சேணுயர் பெருமையென் றிறத்த தன்றெனா
நாணுறு முலகெலா மளந்த நாயகன். 9

எண்டிசை மருங்கினு முலகம் யாவினும்
தண்டலி லுயிரெலாந் தன்னை நோக்கின
அண்டமென் றதினுறை யமரர் யாரையும்
கண்டனன் றானுந்தன் கமலக் கண்களால். 10

எழுந்துயர் நெடுந்தகை யிரண்டு பாதமும்
அழுந்துற வழுத்தலி னிலங்கை யாழ்கடல்
விழுந்தது நிலமிசை விரிந்த வெண்டிரை
தழைந்தன புரண்டன மீனந் தாமெலாம். 11

வஞ்சியம் மருங்குலம் மறுவில் கற்பினள்
கஞ்சமும்புரைவன கழலுங் கண்டிலாள்
அஞ்சின ளிவ்வுரு வடங்குவா யென்றாள்
துஞ்சின ரரக்கரென் றுவக்குஞ் சூழ்ச்சியாள். 12

முழுவது மிவ்வுருக் காண முற்றிய
குழுவில துலகினிக் குறுகுவா யென்றாள்
எழுவினு மெழிலிலங் கிராமன் றோள்களைத்
தழுவின ளாமெனத் தளிர்க்குந் தன்மையாள். 13

ஆண்டகை யநுமனு மருள தாலென
மீண்டனன் விசும்பெனும் பதத்தை மீச்செல்வான்
காண்டலுக் குரியதோ ருருவங் காட்டினன்
தூண்டரு விளக்கனை ளினைய சொல்லினாள். 14

இடந்தா யுலகை மலையோடு மெடுத்தாய்
விசும்பை யிவைசுமக்கும்
படந்தா ழரவை யொருகரத்தாற் பறித்தா
யெனினும் பயனின்றால்
நடந்தா யிடையே யென்றாலு நாளை
நினக்கு நளிர்கடலைக்
கடந்தா யென்றா லென்னாகுங் காற்றா
மன்ன கடுமையாய். 15

ஆழி நெடுங்கை யாண்டகைதன் னருளும் புகழு மழிவின்றி
ஊழி பலவு நிலைநிறுத்தற் கொருவ னீயே யுளையானாய்
பாழி நெடுந்தோள் வீரநின் பெருமைக் கேற்பப் பகையிலங்கை
ஏழு கடற்கு மப்புறத்த தாகா தொழிந்த திழிவன்றே. 16

அறிவு மீதே யுருவீதே யாற்ற லீதே யரும்புலத்தின்
செறிவு மீதே செயலீதே தேற்ற மீதே தோற்றத்தின்
நெறியு மீதே நினைவீதே நீதி யீதே நினக்கென்றால்
வெறிய றன்றோ குணங்களான் விரிஞ்சன் முதலா மேலானோர்.

மின்னே யெயிற்று வல்லரக்கர் வீக்க
நோக்கி வீரற்குப்
பின்னே பிறந்தா னல்லதோர் துணையி
லாத பிழைநோக்கி
உன்னா நின்றே யுடைகின்றே னொழிந்தே
னைய முயிருயிர்த்தேன்
என்னே நிருத ரென்னவ ரிவனே
யெங்கோன் றுணையென்றால். 18

மாண்டே னெனினும் பழுதன்றே யின்றே
மாயச் சிறைநின் றும்
மீண்டே னென்னை யொறுத்தாரைக் குலங்க
ளோடும் வேரறுத்தேன்
பூண்டே னெங்கோன் பொலங்கழலும் புகழே
யன்றிப் புன்பழியும்
தீண்டே னென்று மனமகிழ்ந்தா டிருவின்
முகத்துத் திருவன்னாள். 19

அண்ணற்பெரியோ னடிவணங்கி யறிய வுரைப்பா னருந்ததியே
வண்ணக் கடலி னிடைக்கிடந்த மணலிற் பலரால் வானரத்தின்
எண்ணற் கரிய படைத்தலைவ ரிராமற் கடியார் யானவர்தம்
பண்ணைக் கொருவ னெனப்போந்தே னேவக் கடவ பணிசெய்
வேன். 20

வெள்ள மெழுப துளதன்றே வீரன் சேனை யிவ்வேலைப்
பள்ள மொருகை நீரள்ளிக் குடிக்கப் போதும் பான்மைத்தோ
கள்ள வரக்கர் கடியிலங்கை காணு தொழிந்த தாலன்றே
உள்ள துணையு முளதாவ தறிந்து மின்னு முளதாமோ. 21

வாலி யிளவ லவன்மைந்தன் மயிந்தன் றுமிந்தன் வயக்குமுதன்
நீல னிடபன் குமுதாக்கன் பனசன் சாம்பன் நெடும்பரதன்
கால னனைய துன்மருடன் காம்பன் கவயன் கவயாக்கன்
ஞால மறியு நளன்சங்கன் நயிந்தன் றுயிந்த னரனென்பான்.22

தம்பன் றாமத் தனிப்பெயரோன் றதியின் வதனன்சதவலியென்
றிம்ப ருலகோ டெவ்வுலகு மெடுக்கு மிடுக்க ரிராமன்கை
அம்பி னுதவும் படைத்தலைவ ரவரை நோக்கி னிவ்வரக்கர்
வம்பின் முலையா யுறையிடவும் போதார் கணக்கு வரம்புண்டோ.



## சூடாமணிப்படலம்.

உண்டுதுணை யென்னவெளி தோவுலகி னம்மா
புண்டரிகை மேருவென வின்னல்புகல் கின்றாள்
அண்டமுத றாயகன தாவியனை யாளைக்
கொண்டகல்வ தேகரும மென்றுணர்வு கொண்டான். 1

கேட்டியடி யேனுரை முனிந்தருளல் கேளார்
வீட்டியிடு மேலவனை வேறல்வினை யன்றால்
ஈட்டியினி யென்பல விராமனெதிர் நின்னைக்
காட்டியடி தாழ்வனிது காண்டியிது காலம். 2

பொன்றிணி பொலங்கொடியென் மென்மயிர் பொருந்தித்
துன்றிய புயத்தினி திருந்திதுயர் விட்டாய்
இன்றுயில் விளக்கவொ ரிமைப்பினிறை வைகும்
குன்றிடை யுனைக்கொடு குதிப்பனிடை கொள்ளேன். 3

அறிந்திடை யரக்கர்தொடர் வார்களுள ராமேல்
முறிந்துதிர நூறியெதி ரென்சின முடிப்பேன்
நெறிந்தகுழ லின்னைநிலை கண்டுநெடி யோன்பால்
வெறுங்கைபெய ரேனொருவ ராலும்விளி யாதேன். 4

இலங்கையொடு மேகுதிகொ டென்னினு மிடந்தென்
வலங்கொளொரு கைத்தலையில் வைத்தெதிர் தடுப்பான்
விலங்கினரை நூறிவரி வெஞ்சிலையி னோர்தம்
பொலங்கொள்கழ றாழ்குவ னிதன்னைபொரு ளன்றால். 5

அருந்ததி யுரைத்தியழ கற்கருகு சென்றான்
மருந்தனைய தேவிநெடு வஞ்சர்சிறை வைப்பில்
பெருந்துயரி னோடுமொரு வீடுபெற லில்லா
திருந்தன ளெனப்பகரி னென்னடிமை யென்னாம். 6

புண்டொடர் வகற்றிய புயத்தினொடு புக்கேன்
விண்டவர் பதத்தையும் விரித்துரைசெய் கேனோ
கொண்டுவரு கிற்றில னுயிர்க்குறுதி கொண்டேன்
கண்டுவரு கிற்றன னெனக்கழறு கேனோ. 7

இருக்குமதில் சூழ்கட லிலங்கையை யிமைப்பின்
உருக்கியெரி யாவிக லரக்கரையு மொன்றா
முருக்கிநிரு தக்குல முடித்துவினை முற்றிப்
போருக்கவகல் கென்னினு மதின்றுபுரி கின்றேன். 8

இந்துநுத லின்னொடவ ணெய்தியிகல் வீரன்
சிந்தையுறு வெந்துயர் தவிர்ந்துதெளி வோடும்
அந்தமி லரக்கர்குல மற்றவிய நூறி
நந்தலில் புவிக்கணிடர் பிற்களைத னன்றால். 9

வேறினி விளம்பவுள தன்றுவிதி யாலிப்
பேறுபெற வென்கணரு டந்தருளு பின்போல்
ஆறுதுய ரஞ்சொலிள வஞ்சியடி யன்றோள்
ஏறுகடி தென்றுதொழு தின்னன விசைத்தான். 10

ஏய நன்மொழி யெய்த விளம்பிய
தாயின் முன்னிய கன்றனை யான்றனை
ஆய தன்மை யரியதன் றாமெனத்
தூய மென்சொ லினையன சொல்லினாள். 11

அரிய தன்றுநின் னாற்றலுக் கேற்றதே
தெரிய வெண்ணினை செய்வதுஞ் செய்தியே
உரிய தன்றென வோர்கின்ற துண்டதென்
பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால். 12

வேலை யின்னிடை யேவந்து வெய்யவர்
கோலி வெஞ்சர நின்னொடுங் கோத்தபோ
தால மன்னவர்க் கல்லையெற் கல்லையால்
சால வுந்தடு மாறுந் தனிமையோய். 13

அன்றி யும்பிறி துள்ளதொன் றாரியன்
வென்றி வெஞ்சிலை மாசுணும் வேறினி
நன்றி யென்பதம் வஞ்சித்த நாய்களின்
நின்ற வஞ்சனை நீரு நினைத்திரோ. 14

கொண்ட போரினுங் கொற்றவன் விற்றொழில்
அண்ட ரேவரு நோக்கவென் னாக்கையைக்
கண்ட போரரக் கன்விழி காகங்கள்
உண்ட போதன்றி யானுள னாவனோ. 15

வெற்றி நாணுடை வில்லியர் விற்றொழில்
முற்று நாணி லரக்கியர் மூக்கொடும்
அற்ற நாணின ராயின போதன்றிப்
பெற்ற நாணமும் பெற்றிய தாகுமோ. 16

பொற்பி றங்க விலங்கை பொருந்தலர்
எற்பு மால்வரை யாகில தேயெனின்
இற்பி றப்பு மொழுக்கு மிழுக்கமில்
கற்பும் யான்பிறர்க் கெங்ஙனங் காட்டுகேன். 17

அல்லன் மாக்க ளிலங்கைய தாகுமோ
எல்லை நீத்த வுலகங்கள் யாவுமென்
சொல்லி னாற்சுடு வேனது தூயவன்
வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன். 18

வேறு முண்டது கேளொன்று மெய்ம்மையோய்
ஏறு சேவகன் மேனியல் லாலிடை
ஆறு மைம்பொறி நின்னையு மாணெனக்
கூறு மிவ்வுருத் தீண்டுதல் கூடுமோ. 19

தீண்டு வானெனி னித்தனைச் சேண்பகல்
ஈண்டு மோவுயிர் மெய்யி னிமைப்பின்முன்
மாண்டு தீர்வனன் றேநிலம் வன்கையால்
கீண்டு கொண்டெழுந் தேகினன் கீழ்மையான். 20

மேவு சிந்தையின் மாதரை மெய்தொடின்
தேவு வன்றலை சிந்துக தீயெனப்
பூவின் வந்த புராதன னேபுகல்
சாவ முண்டென தாருயிர் தந்ததால் 21

அன்ன சாப முளதென வாணையான்
மின்னு மௌலியன் வீடணன் மெய்ம்மையன்
கன்னி யென்வயின் வைத்த கருத்துளாள்
சொன்ன துண்டு துணுக்க மகற்றுவாள். 22

ஆய துண்மையு மாகும தன்றெனின்
மாய்வ தென்று மறம்வழு வாதென்றும்
நாய கன்வலி யெண்ணியு நானுடைத்
தூய்மை காட்டவு மித்துணைத் தாங்கினேன். 23

ஆண்டு நின்று மரக்க னகழ்ந்துகொண்
டீண்டு வைத்த திளவ லியற்றிய
நீண்ட சாலை யொடுநிலை நின்றது
காண்டி யையநின் மென்மலர்க் கண்களால். 24

தீர்வி லேனி தொருபொழு துஞ்சிலை
வீரன் மேனியை மானுமிவ் வீங்குநீர்
நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவன்
சோரு மாருயிர் காக்குந் துணிவினால். 25

ஆத லாலது காரிய மன்றைய
வேத நாயகன் பாலினி மீண்டனை
போதல் காரிய மென்றனள் பூவையுங்
கோதி லானு மினையன கூறினான். 26

நன்று நன்றிவ் வுலகுடை நாயகன்
தன்று ணைப்பெருந் தேவி தவத்தொழில்
என்று சிந்தை களித்துவந் தேத்தினான்
நின்ற சங்கை யிடரொடு நீக்கினான். 27

இருளு ளால மிராவண ஞலிது
தெருளு நீயினிச் சில்பக நீங்குற
மருளு மன்னவற் கியான்சொ லும் வாசகம்
அருளு வாயென் றடியி னிறைஞ்சினன். 28

இன்ன மீண்டொரு திங்க ளிருப்பன்யான்
நின்னை நோக்கிப் பகர்ந்தது நீதியாய்
பின்னை யாவி பிடிக்கின்றி லேனந்த
மன்ன னுணை யிதனை மனக்கொணீ. 29

ஆரந் தாழ்திரு மார்பற் கமைந்ததோர்
தாரந் தானல்ல ளேனுந் தயாவெனும்
ஈரந் தானகத் தில்லையென் ருலுந்தன்
வீரங் காத்தலை வேண்டென்று வேண்டுவாய். 30

ஏத்தும் வென்றி யிளையவற் கிதொரு
வார்த்தை சொல்லுதி மன்னரு ளாலெனைக்
காத்து நின்றவற் கேகட னென்றிடை
கோத்த வெஞ்சிறை வீடென்று கூறுவாய். 31

திங்க ளொன்றிலென் செய்தவந் தீர்த்ததால்
இங்கு வந்தில னேயெனின் யாணர்நீர்க்
கங்கை யாற்றங் கரையடி யேற்குந்தன்
செங்கை யாற்கடன் செய்கென்று செப்புவாய். 32

சிறக்கு மாமியர் மூவர்க்குஞ் சீதையாண்
டிறக்கின் ருடொழு தாளெனு மின்னசொல்
அறத்தி னயகன் பாலரு ளின்மையால்
மறக்கு மாயினு நீமற வேலையா. 33

வந்தெ னைக்கரம் பற்றிய வைகல்வாய்
இந்த விப்பிற விக்கிரு மாதரைச்
சிந்தை யாலுந் தொடேனென்ற செவ்வரம்
தந்தை வார்த்தை திருச்செவி சாற்றுவாய். 34

ஈண்டு நாளிருந் தின்னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்துதன் மேனியைத்
தீண்ட லாவதோர் தீவினை தீர்வரம்
வேண்டி னுடொழு தென்று விளம்புவாய். 35

அரசு வீற்றிருந் தாளவு மாய்மணிப்
புரசை யானையின் வீதியிற் போதவும்
விரசு கோலங்கள் காண விதியிலேன்
உரைசெய் தென்னையென் னூழ்வினை யுன்னுவேன். 36

தன்னை நோக்கி யுலகந் தளர்தற்கும்
அன்னை நோய்க்கும் பரதனங் காற்றுறும்
இன்ன னேய்க்குமங் கேகுவ தன்றியே
என்னை நோக்கியிங் கெங்ஙன மெய்துமோ. 37

எந்தையாய் முதலிய கிளைஞர் யார்க்குமென்
வந்தனை விளம்புதி கவியின் மன்னநீ
சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப்போய்
அந்தமி றிருநகர்க் கரச னுக்குவாய். 38

இத்திற மினையவள் விளம்ப வின்னமுந்
தத்துற லொழிந்திலை தைய னீயெனு
எத்திறத் தேதுவு மியைந்த வின்னுரை
ஒத்தன தெரிவுற வுணர்த்தி னனரோ. 39

வீவாய் நீயிவண் மெய்யஃதே
ஓய்வா னின்னுயி ருய்வானும்
போய்வா னந்நகர் புக்கன்றோ
வேய்வான் மௌலியு மெய்யன்றோ. 40

கைத்தோ டுஞ்சிறை கற்போயை
வைத்தோ னின்னுயிர் வாழ்வானும்
பொய்த்தோர் வில்லிகள் போவாராம்
இத்தோ டொப்ப தியாதுண்டோ. 41

நல்லோய் நின்னை நலிந்தோனைக்
கொல்லே மெம்முயிர் கொண்டங்கே
எல்லோ முஞ்செல வெங்கோனும்
வில்லோ டுஞ்செல வேண்டாவோ. 42

நீந்தா வின்னலி னீந்தாமே
தேய்ந்தா றாத பெருஞ்செல்வம்
ஈந்தா னுக்குனை யீயாதே
ஓய்ந்தா லெம்மி னுயர்ந்தார்யார். 43

நன்றா நல்வினை நல்லோரைத்
தின்றார் தங்குடர் பேய்தின்னக்
கொன்றா லல்லது கொள்ளோமு
டென்றா னுக்கிவை யேலாவோ. 44

முன்னே கொல்வான் மூவுலகும்
பொன்னே பொங்கிய போர்வில்லான்
என்னே நீயிலை யென்றாலும்
பின்னே செம்மை பிடிப்பானே. 45

மாட்டா தார்சிறை வைத்தோயை
மீட்டா மென்கில மீள்வாமேல்
நாட்டார் நல்லவர் நன்னூலும்
கேட்டா ரிவ்வுரை கேட்பாரோ. 46

பூண்டாள் கற்புடை யாள்பொய்யாள்
தீண்டா வஞ்சகர் தீண்டாமுன்
மாண்டா ளென்று மனந்தேறி
மீண்டால் வீரம் விளங்காதோ. 47

கெட்டே நீயுயிர் கேதத்தால்
விட்டா யென்றிடின் மேலன்பால்
ஓட்டா ரோடுல கோரம்பாற்
சுட்டா லுந்தொலை யாமன்றே. 48

கோளா ளுனுயிர் கோளோடும்
மூளா வெஞ்சின முற்றாக
மீளா வெல்வன வேறுண்டோ
மாளா தோபுவி வானோடும். 49

தாழித் தண்கட றம்மோடும்
ஏழுக் கேழுல கெல்லாமன்
றூழிக் கையவ னம்பம்மா
ஊழித் தீயென வுண்ணாதோ. 50

படுத்தான் வானவர் பற்றாரைத்
தடுத்தா டீவினை தக்கோரை
எடுத்தா னல்வினை யெந்நாளும்
கொடுத்தா னென்றிசை கொள்ளாயோ. 51

சின்னு ணீயிடர் தீராதாய்
இன்னு வைகலி னெல்லோரும்
நன்னாள் காணுத னன்றன்றே
உன்னு னல்லற முண்டாளுல். 52

புளிக்குங் கண்டகர் புண்ணீருட்
குளிக்கும் பேய்குடை யுந்தோறும்
ஒளிக்குந் தேவ ருவந்துள்ளம்
களிக்குந் நல்வினை காணுயோ. 53

ஊழியி னிறுதியி னுருமெ றிந்தெனக்
கேழ்கிளர் சுடுகணை கிழித்த புண்பொழி
தாழிருங் குருதியிற் றரங்க வாழ்கடல்
ஏழுமொன் ருகினின் றிரைப்பக் காண்டியால். 54

ஆலியம் பெருவயி றலைத்துச் சோர்வுறும்
ஆலியங் கண்ணிய ரறுத்து நீத்தன
வாலியுங் கடப்பரும் வனப்ப வானுயர்
தாலியம் பெருமலை தயங்கக் காண்டியால். 55

விண்ணினீ ளியநெடுங் கழுதும் வெஞ்சிறை
எண்ணினீ ளியபெரும் பறவை யீட்டமும்
புண்ணினீர் புணரியிற் படிந்து பூவையர்
கண்ணினீ ராற்றிடைக் குளிக்கக் காண்டியால். 56

கரம்பயின் முரசினங் கறங்கக் கைதொடர்
நரம்பினு மிமிழிசை நவில நாடக
அரம்பைய ராடிய வரங்கி னுண்டொழிற்
குரங்குகண் முறைமுறை குனிப்பக் காண்டியால். 57

புரையுறு புன்றொழி லரக்கர் புண்பொழி
திரையுறு குருதியா றீர்ப்பச் செல்வன
வரையுறு பிணப்பெரும் பிறக்க மண்டின
கரையுறு நெடுங்கட றார்ப்பக் காண்டியால். 58

வினையுடை யரக்கரா மிருந்தில் வெந்துகச்
சனகியென் றொருதண னடுவட் டங்கலான்
அனகன்கை யம்பெனு மளவி லூதையால்
கனகநீ டிலங்கைநின் றுருகக் காண்டியால். 59

தாக்கிக விராவணன் றலையிற் றுவின்
பாக்கிய மனையநின் பழியின் மேனியை
நோக்கிய கண்களை நுதிகொண் மூக்கினால்
காக்கைகள் கவர்ந்துகொண் டுண்ணக் காண்டியால். 60

மேலுற விராவணற் கழிந்து வெள்கிய
நீலுறு திசைக்கரி திரிந்து நிற்பன
வாலுற வனையவன் றலையை வவ்வலில்
காலுறு கணைகடிந் திடுவ காண்டியால். 61

நீர்த்தெழு கணைமழை வழங்க நீலவான்
வேர்த்ததென் றிடையிடை வீசுந் தூசுபோல்
போர்த்தெழு பொலங்கொடி யிலங்கைப் பூழியோ
டார்த்தெழு கழுதிரைத் தாடக் காண்டியால். 62

நீணிற வரக்கர்தங் குருதி நீத்தநீர்
வேலைமிக் காற்றொடு மீள வேலைசூழ்
ஞாலமுற் றுங்கடை யுகத்து நச்சறுக்
காலனும் வெறுத்துயிர் காலக் காண்டியால். 63

இந்நிலை யுடையவன் றரிக்கு மென்றியேல்
மெய்ந்நிலை யுணர்ந்துழீஇ யிடைந்த தீதெனின்
பொய்ந்நிலை காண்டியான் புகன்ற யாவுமுன்
கைந்நிலை நெல்லியின் கனியிற் காட்டுவேன். 70

தீர்த்தனுங் கவிக்குலத் தரசுந் தேவிநின்
வார்த்தைகேட் டுவப்பதன் முன்ன மாழ்கடல்
தூர்த்தன விலங்கையைச் சூழ்ந்த மாக்குரங்
கார்த்தது கேட்டுவந் திருத்தி யன்னைநீ. 71

எண்ணரும் பெரும்படை யீண்டி யிந்நகர்
நண்ணிய பொழுதத்து நடுவ ணங்கைநீ
விண்ணுறக் கலுழன்மேல் விளங்கும் விண்டுவிற்
கண்ணனை யென்னெடு முதுகிற் காண்டியால். 72

அங்கதன் றேண்மிசை யிளவ லம்மலைப்
பொங்குவெங் கதிரெனப் பொலியப் போர்ப்படை
இங்குவந் திறுக்குநீ யிடரு மையமும்
சங்கையு நீங்குதி தனிமை நீங்குவாய். 73

குராவருங் குழலியிக் குறித்த நாளினே
விராவரு நெடுஞ்சிறை மீட்கி லானெனின்
பராவரும் பழியொடும் பாவம் பற்றுதற்
கிராவண னவனிவ னிராம னென்றனன். 74

ஆக விம்மொழி யைச்சில கேட்டயர் வுற்றாள்
ஓகை கொண்டுக ளிக்கும னத்தளு வந்தாள்
போகை நன்றிவ னென்பது புந்தியின் வைத்தாள்
தோகை யுஞ்சில வாசக மின்னன சொன்னாள். 75

அணங்கிள மகளிரோ டரக்கர் நாடுறு
மணங்கிளர் கற்பகச் சோலை வாவிவாய்ப்
பிணங்குறு வான்முறை பிடித்து மாலைய
கணங்கொடு குரக்கினங் குளிப்பக் காண்டியால். 64

செப்புற லென்பல தெய்வ வாளிகள்
இப்புறத் தரக்கரை முருக்கி யேகின
முப்புறத் துலகையு முடுக்கி மூட்டலான்
அப்புறத் தரக்கரு மவியக் காண்டியால். 65

ஈண்டொரு திங்களிவ் விடரின் வைகுதல்
வேண்டுவ தன்றுநான் விரைவின் வீரனைக்
காண்டலே குறைவுபின் காலம் வேண்டுமோ
ஆண்டகை யினியொரு பொழுது மாற்றுமோ. 66

ஆவியுண் டென்னுமீ துண்டுன் னாருயிர்ச்
சேவகன் றிருவுருத் தீண்டத் தீகிலாப்
பூவிலை தளிரிலை பொரிந்து வெந்திலாக்
காயிலை கொடியிலை நெடிய கானெலாம். 67

சோகம்வந் துறுவது தெளிவு தோய்ந்தன்றே
மேகம்வந் திடித்துவந் துருமு வீழ்கினும்
ஆகமும் புயங்களு மழுந்த வைந்தலை
நாகம்வந் தடர்ப்பினு முணர்வு நாறுமோ. 68

மத்துறு தயிரென வந்து சென்றிடை
தத்துறு முயிரொடும் புலன்க டள்ளுறும்
பித்துநின் பிரிவினிற் பிறந்த வேதனை
எத்தனை யுளவவை யெண்ணு மீட்டவோ. 69

இந்நிலை யுடையவன் றரிக்கு மென்றியேல்
மெய்ந்நிலை யுணர்ந்துழீ இ மிடைந்த தீதெனின்
பொய்ந்நிலை காண்டியான் புகன்ற யாவுமுன்
கைந்நிலை நெல்லியின் கனியிற் காட்டுகேன். 70

தீர்த்தனுங் கவிக்குலத் தரசுந் தேவிநின்
வார்த்தைகேட் டுவப்பதன் முன்ன மாழ்கடல்
தூர்த்தன விலங்கையைச் சூழ்ந்த மாக்குரங்
கார்த்தது கேட்டுவந் திருத்தி யன்னைநீ. 71

எண்ணரும் பெரும்படை யீண்டி யிந்நகர்
நண்ணிய பொழுதத்து நடுவ ணங்கைநீ
விண்ணுறக் கலுழன்மேல் விளங்கும் விண்டுவிற்
கண்ணனை யென்னெடு முதுகிற் காண்டியால். 72

அங்கதன் றோண்மிசை யிளவ லம்மலைப்
பொங்குவெங் கதிரெனப் பொலியப் போர்ப்படை
இங்குவந் திறுக்குநீ யிடரு மையமும்
சங்கையு நீங்குதி தனிமை நீங்குவாய். 73

குராவருங் குழலியிக் குறித்த நாளினே
விராவரு நெடுஞ்சிறை மீட்கி லானெனின்
பராவரும் பழியொடும் பாவம் பற்றுதற்
கிராவண னவனிவ னிராம னென்றனன். 74

ஆக விம்மொழி யைச்சில கேட்டயர் வுற்றாள்
ஓகை கொண்டுக ளிக்கும னத்தளு வந்தாள்
போகை நன்றிவ னென்பது புந்தியின் வைத்தாள்
தோகை யுஞ்சில வாசக மின்னன சொன்னாள். 75

சேறி யையவி ரைந்தனை தீயன வெல்லாம்
வேறி யானினி யொன்றும்வி ளம்பலன் மேலோய்
கூறு கின்றன முன்குறி யுற்றன கோமாற்
கேறு மென்றிவை சொல்லின ளின்சொலி சைப்பாள். 76

நாக மொன்றிய நல்வரை யின்றலை மேனாள்
ஆகம் வந்தெனை யள்ளுகிர் வாளின ளைந்த
காக மொன்றைமு னிந்தயல் கல்லெழு புல்லால்
வேக வெம்படை விட்டது மெல்லவி ரிப்பாய். 77

அங்க தஞ்சிந டுங்கிய யன்பதி யண்ம
இங்கு நின்வர வென்னவெ னக்கனல் வெய்த
மங்கை பங்கனெ டெண்டிசை யுஞ்செல மற்றோர்
தங்க டங்களி டங்கட விர்த்தமை தைப்பாய். 78

இந்தி ரன்றரு மைந்தனு றுந்துயர் யாவும்
அந்த ரந்தனி னின்றவர் கண்டினி யந்தோ
எந்தை தன்சர ணன்றியோர் நன்றியி லாதால்
வந்த வன்சரண் வீழ்கென வுற்றதும் வைப்பாய். 79

ஐய னின்சர ணஞ்சர ணென்றவ னஞ்சி
வையம் வந்துவ ணங்கிட வள்ளன்ம கிழ்ந்தே
வெய்ய வன்கணி ரண்டொடு போகென விட்ட
தெய்வ வெம்படை யுற்றது மையதெ ரிப்பாய். 80

எந்தை நின்சர ணஞ்சர ணென்றவி தன்னால்
மூந்து நின்குறை யும்பொறை தந்தன முந்துன்
சந்த மொன்றுகொ டித்திரள் கண்க டமக்கே
வந்தோர் கண்மணி நிற்கென வைத்ததும் வைப்பாய். 81

வேகம் விண்டுசெ யந்தன்வ ணங்கிவி சும்பில்
போக வண்டர்கள் கண்டலர் கொண்டுபொ ழிந்தார்
நாக னம்பணி ளங்கிளை நன்குண ராத
பாகு தங்கிய வென்றியி னின்சொல்ப ணிப்பாய். 82

என்னொ ரின்னுயிர் மென்கிளிக் கியார்பெய ரீகேன்
மன்ன வென்றலு மாசறு கைக்கயன் மாதென்
அன்னை தன்பெய ராகென வன்பினொ டன்னாட்
சொன்ன மெய்ம்மொழி சொல்லுதி மெய்ம்மைதொ டர்ந்தோய்.

என்று ரைத்தினி யித்தனை பேரடை யாளம்
ஒன்று ணர்த்துவ தில்லென வெண்ணி யுணர்ந்தாள்
தன்றி ருத்துகி லிற்பொதி வுற்றது தானே
வென்ற தச்சுடர் மேலொடு கீழுற மெய்யால். 84

வாங்கி னாடன்ம லர்க்கையி னன்னது முன்னா
ஏங்கி னானட லநுமனு மென்கொலி தென்னா
வீங்கி னான்வியந் தானுல கேழும்வி ழுங்கித்
தூங்கு காரிருண் முற்றுமி ரிந்தது சுற்றும். 85

மஞ்ச லங்கொளி யோனுமிம் மாநகர் வந்தான்
அஞ்ச லன்னென வெங்கண ரக்கர யிர்த்தார்
சஞ்ச லம்புரி சக்கர வாகமு டன்றாட்
கஞ்ச மும்மலர் வுற்றன காந்தின காந்தம். 86

கூந்தன் மென்மழைக் கொண்மூவின் மேலெழு கோளின்
வேந்த னன்னது மெல்லிய றன்னெழின் மேனி
சேந்த தந்தமில் சேவகன் சேவடி யென்னக்
காந்து கின்றது காட்டினன் மாருதி கண்டான். 87

சூடை யின்மணி கண்மணி யொப்பது தொன்ஞள்
ஆடை யின்கணி ருந்தது பேரடை யாளம்
நாடி வந்தென தின்னுயிர் நல்கிய நம்பா
கோடி யென்றுகொ டுத்தனண் மெய்ப்புகழ் கொண்டாள். 88

தொழுது வாங்கினன் சுற்றிய தூசினின் முற்றப்
பழுது றுவகை பந்தனை செய்தனன் வந்தித்
தழுது மும்மைவ லங்கொடி றைஞ்சின னன்போ
டெழுது பாவையு மேத்தின னேகின னிப்பால். 89





# பொழிலிறுத்தபடலம்.

நெறிக்கொடு வடக்குற நினைப்பினி னிமிர்ந்தான்
பொறிக்குல மலர்ப்பொழி லிடைக்கடிது போவான்
சிறுத்தொழின் முடித்தகற நீதென றெரிந்தான்
மறித்துமொர் செயற்குரிய காரிய மதித்தான். 1

ஈனமுறு பற்றலரை யெற்றியெயின் மூதூர்
மீனநில யத்தினுக வீசிவிழி மானை
மானவன் மலர்க்கழலின் வைத்துமில னென்றால்
ஆனபொழு தெப்பரிசி னடிய னேவென். 2

வஞ்சனை யரக்கனை நெருக்கிநெடு வாலால்
அஞ்சினுட னஞ்சுதலை தோளுற வசைத்தேன்
வெஞ்சிறையில் வைத்துமிலன் வென்றுமில னென்றால்
தஞ்சமொரு வர்க்கொருவ ரென்றறகு மன்றே. 3

கண்டநிரு தக்கடல் கலக்கினன் வலத்தில்
திண்டிற லரக்கனு மிருக்கவொர் திறத்தின்
மண்டவுத ரத்தவண் மலர்க்குழல் பிடித்துக்
கொண்டுசிறை வைத்திடுத லிற்குறைவு முண்டோ. 4

மீட்டுமினி யெண்ணும்வினை வேறுமுள தன்றால்
ஒட்டியிவ் வரக்கரை யுலைத்துரிமை யெல்லாம்
காட்டுமிது வேகரும மன்னவர் கடும்போர்
மூட்டும்வகை யாவதுகொ லென்றுமுயல் கின்றான். 5

இப்பொழி வினைக்கடி திறுக்குவ னிறுத்தால்
அப்பெரிய பூசல்செவி சார்தலு மரக்கர்
வெப்புறு சினத்தரெதிர் மேல்வருவர் வந்தால்
துப்புற முருக்கியுயி ருண்பனிது சூதால். 6

வந்தவர்கள் வந்தவர்கண் மீள்கிலர் மடிந்தால்
வெந்திற லரக்கனும் விலக்கரும் வலத்தால்
முந்துமெனி னன்னவன் முடித்தலை யிடித்தென்
சிந்தையுறு கோபமு மவித்தினிது செல்வேன். 7

என்றுநினை யாவிரவி சந்திர னியங்கும்
குன்றமிரு தோளனைய தன்னுருவு கொண்டான்
அன்றுல கெயிற்றடையு மேனமென லானான்
துன்றுகடி காவினை யடிக்கொடு துகைத்தான். 8

முடிந்தன பிளந்தன முரிந்தன நெரிந்த
மடிந்தன பொடிந்தன மறிந்தன முறிந்த
இடிந்தன தகர்ந்தன வெரிந்தன சரிந்த
ஒடிந்தன வொசிந்தன வுதிர்ந்தன பிதிர்ந்த. 9

வேரொடு மறிந்தசில வெந்தசில விண்ணில்
காரொடு செறிந்தசில காலினொடு வேலைத்
தூரொடு பறிந்தசில தும்பியொடு வானோர்
ஊரொடு மலைந்தசில வுக்கசில நெக்க. 10

சோலைமுதன் மற்றைய சுழற்றின திசைப்போர்
ஆலைநுக ரக்குளகு மானவடி பற்று
மேனிமிர விட்டன விசும்பின்வழி மீப்போய்
வானவர்க ணந்தன வனத்தையு மடித்த. 11

அலைந்தன கடற்றிரை யரக்கரகன் மாடம்
குலைந்துக விடிந்தன குலக்கிரிக ளோடு
மலைந்துபொடி யுற்றன மயங்கிநெடு வானத்
துலைந்துவிழு மீனினொடு வெண்மல ருதிர்ந்த. 12

முடக்குநெடு வேரொடு முகந்துலக முற்றும்
கடக்கும்வகை வீசின களித்ததிசை யானை
மடப்பிடியி னுக்குதவ மையினிமிர் கைவைத்
திடுக்கியன வொத்தன வெயிற்றினிடை நால்வ. 13

விஞ்சையுல கத்தினு மியக்கர்மலை மேலும்
துஞ்சுதலில் வானவர் துறக்கநக ரத்தும்
பஞ்சியடி வஞ்சியர்கண் மொய்த்தனர் பறித்தார்
நஞ்சமனை யானுடைய சோலையி னறும்பூ. 14

பொன்றிணி வயப்பய மரன்றிசைகள் போவ
மின்றிரிவ வொத்தன வெயிற்கதிரு மொத்த
ஒன்றினுட னொன்றிடை யுடைந்துதிர வூழின்
தன்றிர ளொடுக்கிவிழு தாரகையு மொத்த. 15

புள்ளினொடு வண்டுஞிமி றுங்களிகொள் பூவும்
கள்ளுமுகை யுந்தளிர்க ளோடினிய காயும்
வெள்ளநெடு வேலையிடை மீனினம் விழுங்கித்
துள்ளின மரன்பட நெரிந்தன துடித்த. 16

தூவிய மலர்த்தொகை சுமந்துதிசை தோறும்
பூவின்மண நாறுவ புலால்கமழ்கி லாத
தேவியர்க ளோடுமுயர் தேவரினி தாடும்
ஆவியென லாயதிரை யார்கலிக ளம்மா. 17

இடந்தமணி வேதியு மிறுத்தகடி காவும்
தொடர்ந்தன தொடர்ந்தன படிந்துநெறி தூரக்
கடந்துசெல வென்பது கடந்தவிரு காலால்
நடந்துசெல லாகுமென லாகியது நன்னீர். 18

வேனில்விளை யாடுசுட ரோனினொளி விம்மும்
யானையிடை வீசிய விரும்பணை மரத்தால்
தானவர்கண் மாளிகை தகர்ந்துபொடி யான
வானவிடி யாலொடியு மால்வரைகண் மான. 19

எண்ணறரு கோடிக ளெறிந்தன செறிந்தே
தண்ணென்மழை போலிடை தழைந்தது சலத்தால்
அண்ணலநு மானட லிராவணன தந்நாள்
விண்ணுமொரு சோலையுள தாமென விரித்தான். 20

தேனுறை தளிர்க்கணிறை புட்பல சிலம்பப்
பூநிறை மணித்தரு விசும்பினிடை யேபோய்
மேன்முறை நெருக்கவொளி வாளொடுவில் வீச
வானிடை நடக்கும்வி மானமென லான. 21

சாகநெடு மாபணை தழைத்தன தனிப்போர்
நாகமனை யானெறிய மேனிமிர்வ நாளு
மாகநெடு வானிடை யிழிந்துபுனல் வாரும்
மேகமென லானநெடு மாகடலின் வீழ்வ. 22

ஊன முற்றிடை மண்ணி லுதித்தவர்
ஞான முற்றிட நண்ணினர் வீடெனத்
தான கற்பகத் தண்டரு விண்டலம்
போன புக்கன முன்னுறை பொன்னகர். 23

மணிகொள் குட்டிம மட்டித்து மண்டபம்
துணிப டுத்தயல் வாவிக டேர்த்தொளிர்
திணிசு வர்த்தலஞ் சிந்திச் செயற்கரும்
பணிய டுத்துயர் குன்றம் பகுத்தரோ. 24

வேங்கை செற்று மராமரம் வேர்பறித்
தோங்கு கற்பகம் பூவொ டொடித்துராய்ப்
பாங்கர் சண்பகப் பத்தி பறித்தயல்
மாங்க னிப்பணை மட்டித்து மாற்றியே. 25

சந்த னங்க டகர்ந்தன தாள்பட
இந்த னங்களின் வெந்தெரி சிந்திட
முந்த னங்க வசந்தன் முகங்கெட
நந்த னங்கள் கலங்கி நலங்கியே. 26

காம ரங்களி வண்டு கலங்கிட
மாம ரங்கண் மடிந்தன மண்ணொடு
தாம ரங்க வரங்கு தகர்ந்துகப்
பூம ரங்க ளொரிந்து பொரிந்தவே. 27

குழையுங் கொம்புங் கொடியுங் குயிற்குலம்
விழையுந் தண்டளிர்ச் சூழலு மென்மலர்ப்
புழையும் வாசப் பொதும்பும் பொலங்கொடேன்
மழையும் வண்டு மயிலு மடிந்தவே. 28

பவள மாக்கொடி வீசின பன்மழை
துவளு மின்னெனச் சூழ்வரை சுற்றிடத்
திவளும் பொற்பணை மாமரஞ் சேர்ந்தன
கவள யானையி னோடையிற் காந்தவே. 29

பறவை யார்த்தெழு மோசையும் பன்மரம்
இறவெ டுத்த விடிக்குர லோசையும்
அறவ ஞார்த்தெழு மோசையு மண்டத்தின்
புறநி லத்தையுங் கைம்மிகப் போயதே. 30

பாட லம்படர் கோங்கொடும் பன்னிசைப்
பாட லம்பனி வண்டொடு பஃறிரைப்
பாட லம்புயர் வேலையிற் பாய்ந்தன
பாட லம்படப் புள்ளினம் பாறவே. 31

வண்ட லம்புந லாற்றின் மராமரம்
வண்ட லம்புன லாற்றின் மடிந்தன
விண்ட லம்புக நீங்கிய மென்புலில்
விண்ட லம்புக நீண்மரம் வீழ்ந்தன. 32

தாம ரைத்தடம் பொய்கைசெஞ் சந்தனம்
தாம ரைத்தன வொத்தது தைத்தலின்
காம ரக்களி வண்டொடுங் கள்ளொடும்
காம ரக்கடல் பூக்கடல் கண்டவே. 33

புல்லு பொற்பணைப் பன்மணிப் பொன்மரம்
கொல்லு மிப்பொழு தேயெனுங் கொள்கையால்
எல்லி யிட்டு விளங்கிய விந்திரன்
வில்லு மொத்தன விண்ணுற வீசின. 34

மயக்கு பொற்குல வல்லிகள் வாரின
இயக்கு றத்திசை தோறு மெறிந்தன
வெயிற்க திர்க்கற்றை யற்றுற வீழ்ந்தன
புயற்க டற்றலை புக்கன போல்வன. 35

சிந்து வாரந் திசைதொறுஞ் சென்றன
சிந்து வாரம் புரைதிரை சேர்ந்தன
தந்து வாரம் புதவொடு தாளறத்
தந்து வாரந் துகள்படச் சாய்ந்தவே. 36

நந்த வானத்து நாண்மலர் நாறுதேன்
நந்த வானத்து நாண்மலர் நாறின
சிந்த வானந் திரிந்துகச் செம்மணி
சிந்த வானந் திரிந்த திரைக்கடல். 37

ஆனைத் தானமு மாட லரங்கமும்
பானத் தானமும் பாய்பரிப் பந்தியும்
ஏனைத் தாரணி தேரொடு மிற்றன
கானத் தார்தரு வண்ணல் கடாவவே. 38

பெரிய மாமர மும்பெருங் குன்றமும்
இரிய வீசலி னிந்நெடும் பொன்மதில்
நெரிய மாட நெருப்பெழ நீறெழ
இரியல் போன விலங்கையு மெங்கணும். 39

தொண்டையங் கனிவாய்ச் சீதை துயக்கிணு லென்னைச் சுட்
விண்டவா னவர்தம் முன்னே விரிபொழி விறுத்து வீசக்[டாய்
கண்டனை நின்று யென்று காணுமே லரக்கன் காய்தல்
உண்டென வெருவினன்போ லொளித்தனனுடுவின்கோமான்.

மீட்டுமினி யெண்ணும்வினை வேறுமுள தன்றால்
ஓட்டியிவ் வரக்கரை யுலைத்துரிமை யெல்லாம்
காட்டுமிது வேகரும மன்னவர் கடும்போர்
மூட்டும்வகை யாவதுகொ லென்றுமுயல் கின்றான். 5

இப்பொழி லினைக்கடி திறுக்குவ னிறுத்தால்
அப்பெரிய பூசல்செவி சார்தலு மரக்கர்
வெப்புறு சினத்தரெதிர் மேல்வருவர் வந்தால்
துப்புற முருக்கியுயி ருண்பனிது சூதால். 6

வந்தவர்கள் வந்தவர்கண் மீள்கிலர் மடிந்தால்
வெந்திற லரக்கனும் விலக்கரும் வலத்தால்
முந்துமெனி னன்னவன் முடித்தலை யிடித்தென்
சிந்தையுறு கோபமு மவித்தினிது செல்வேன். 7

என்றுநினை யாவிரவி சந்திர னியங்கும்
குன்றமிரு தோளனைய தன்னுருவு கொண்டான்
அன்றுல கெயிற்றடையு மேனமென லானான்
துன்றுகடி காவினை யடிக்கொடு துகைத்தான். 8

முடிந்தன பிளந்தன முறிந்தன நெரிந்த
மடிந்தன பொடிந்தன மறிந்தன முறிந்த
இடிந்தன தகர்ந்தன வெரிந்தன சரிந்த
ஒடிந்தன வொசிந்தன வுதிர்ந்தன பிதிர்ந்த. 9

வேரொடு மறிந்தசில வெந்தசில விண்ணில்
காரொடு செறிந்தசில காலினொடு வேலைத்
தூரொடு பறிந்தசில தும்பியொடு வானோர்
ஊரொடு மலைந்தசில வுக்கசில நெக்க. 10

சோலைமுதன் மற்றைய சுழற்றின திசைப்போர்
ஆலைதுக ரக்குளகு மானவடி பற்று
மேனிமிர விட்டன விசும்பின்வழி மீப்போய்
வானவர்க ணந்தன வனத்தையு மடித்த. 11

அலைந்தன கடற்றிரை யரக்கரகன் மாடம்
குலைந்துக விடிந்தன குலக்கிரிக ளோடு
மலைந்துபொடி யுற்றன மயங்கிநெடு வானத்
துலைந்துவிழு மீனினொடு வெண்மல ருதிர்ந்த. 12

முடக்குநெடு வேரொடு முகந்துலக முற்றும்
கடக்கும்வகை வீசின களித்ததிசை யானை
மடப்பிடியி னுக்குதவ மையினிமிர் கைவைத்
திடுக்கியன வொத்தன வெயிற்றினிடை நால்வ. 13

விஞ்சையுல கத்தினு மியக்கர்மலை மேலும்
துஞ்சுதலில் வானவர் துறக்கநக ரத்தும்
பஞ்சியடி வஞ்சியர்கண் மொய்த்தனர் பறித்தார்
நஞ்சமனை யானுடைய சோலையி னறும்பூ. 14

பொன்றிணி வயப்பய மரன்றிசைகள் போவ
மின்றிரிவ வொத்தன வெயிற்கதிரு மொத்த
ஒன்றினுட னொன்றிடை யுடைந்துதிர வூழின்
தன்றிர ளொடுக்கிவிழு தாரகையு மொத்த. 15

புள்ளினொடு வண்டுஞிமி றுங்களிகொள் பூவும்
கள்ளுமுகை யுந்தளிர்க ளோடினிய காயும்
வெள்ளநெடு வேலையிடை மீனினம் விழுங்கித்
துள்ளின மரன்பட நெரிந்தன துடித்த. 16

தூவிய மலர்த்தொகை சுமந்துதிசை தோறும்
பூவின்மண நாறுவ புலால்கமழ்கி லாத
தேவியர்க ளோடுமுயர் தேவரினி தாடும்
ஆவியென லாயதிரை யார்கலிக ளம்மா. 17

இடந்தமணி வேதியு மிறுத்தகடி காவும்
தொடர்ந்தன தொடர்ந்தன படிந்துநெறி தூரக்
கடந்துசெல வென்பது கடந்தவிரு காலால்
நடந்துசெல லாகுமென லாகியது நன்னீர். 18

வேனில்விளை யாடுசுட ரோனிறொளி விம்மும்
யானையிடை வீசிய விரும்பணை மரத்தால்
தானவர்கண் மாளிகை தகர்ந்துபொடி யான
வானவிடி யாலொடியு மால்வரைகண் மான. 19

எண்ணறரு கோடிக ளெறிந்தன செறிந்தே
தண்ணென்மழை போலிடை தழைந்தது சலத்தால்
அண்ணலநு மானட லிராவணன தந்நாள்
விண்ணுமொரு சோலையுள தாமென விரித்தான். 20

தேனுறை தளிர்க்கணிறை புட்பல சிலம்பப்
பூநிறை மணித்தரு விசும்பினிடை யேபோய்
மேன்முறை நெருக்கவொளி வாளொடுவில் வீச
வானிடை நடக்கும்வி மானமென லான. 21

சாகநெடு மாபணை தழைத்தன தனிப்போர்
நாகமனை யானெறிய மேனிமிர்வ நாளு
மாகநெடு வானிடை யிழிந்துபுனல் வாரும்
மேகமென லானநெடு மாகடலின் வீழ்வ. 22

ஊன முற்றிடை மண்ணி லுதித்தவர்
ஞான முற்றிட நண்ணினர் வீடெனத்
தான கற்பகத் தண்டரு விண்டலம்
போன புக்கன முன்னுறை பொன்னகர். 23

மணிகொள் குட்டிம மட்டித்து மண்டபம்
துணிப டுத்தயல் வாவிக ளேர்த்தொளிர்
திணிசு வர்த்தலஞ் சிந்திச் செயற்கரும்
பணிய டுத்துயர் குன்றம் பகுத்தரோ. 24

வேங்கை செற்று மராமரம் வேர்பறித்
தோங்கு கற்பகம் பூவொ டொடித்துராய்ப்
பாங்கர் சண்பகப் பத்தி பறித்தயல்
மாங்க னிப்பனை மட்டித்து மாற்றியே. 25

சந்த னங்க டகர்ந்தன தாள்பட
இந்த னங்களின் வெந்தெரி சிந்திட
முந்த னங்க வசந்தன் முகங்கெட
நந்த னங்கள் கலங்கி நலங்கியே. 26

காம ரங்களி வண்டு கலங்கிட
மாம ரங்கண் மடிந்தன மண்ணொடு
தாம ரங்க வரங்கு தகர்ந்துகப்
பூம ரங்க ளொரிந்து பொரிந்தவே. 27

குழையுங் கொம்புங் கொடியுங் குயிற்குலம்
விழையுந் தண்டளிர்ச் சூழலு மென்மலர்ப்
புழையும் வாசப் பொதும்பும் பொலங்கொடேன்
மழையும் வண்டு மயிலு மடிந்தவே. 28

பவள மாக்கொடி வீசின பன்மழை
துவளு மின்னெனச் சூழ்வரை சுற்றிடத்
திவளும் பொற்பணை மாமரஞ் சேர்ந்தன
கவள யானையி னுடையிற் காந்தவே. 29

பறவை யார்த்தெழு மோசையும் பன்மரம்
இறவெ டுத்த விடிக்குர லோசையும்
அறவ ணார்த்தெழு மோசையு மண்டத்தின்
புறநி லத்தையுங் கைம்மிகப் போயதே. 30

பாட லம்படர் கோங்கொடும் பன்னிசைப்
பாட லம்பனி வண்டொடு பஃறிரைப்
பாட லம்புயர் வேலையிற் பாய்ந்தன
பாட லம்படப் புள்ளினம் பாறவே. 31

வண்ட லம்புந லாற்றின் மராமரம்
வண்ட லம்புன லாற்றின் மடிந்தன
விண்ட லம்புக நீங்கிய மென்புலில்
விண்ட லம்புக நீண்மரம் வீழ்ந்தன. 32

தாம ரைத்தடம் பொய்கைசெஞ் சந்தனம்
தாம ரைத்தன வொத்தது தைத்தலின்
காம ரக்களி வண்டொடுங் கள்ளொடும்
காம ரக்கடல் பூக்கடல் கண்டவே. 33

புல்லு பொற்பணைப் பன்மணிப் பொன்மரம்
கொல்லு மிப்பொழு தேயெனுங் கொள்கையால்
எல்லி யிட்டு விளங்கிய விந்திரன்
வில்லு மொத்தன விண்ணுற வீசின. 34

மயக்கு பொற்குல வல்லிகள் வாரின
இயக்கு றத்திசை தோறு மெறிந்தன
வெயிற்க திர்க்கற்றை யற்றுற வீழ்ந்தன
புயற்க டற்றலை புக்கன போல்வன. 35

சிந்து வாரந் திசைதொறுஞ் சென்றன
சிந்து வாரம் புரைதிரை சேர்ந்தன
தந்து வாரம் புதவொடு தாளறத்
தந்து வாரந் துகள்படச் சாய்ந்தவே. 36

நந்த வாநத்து நாண்மலர் நாறுதேன்
நந்த வானத்து நாண்மலர் நாறின
சிந்த வாநந் திரிந்துகச் செம்மணி
சிந்த வானந் திரிந்த திரைக்கடல். 37

ஆனைத் தானமு மாட லரங்கமும்
பானத் தானமும் பாய்பரிப் பந்தியும்
ஏனைத் தாரணி தேரொடு மிற்றன
கானத் தார்தரு வண்ணல் கடாவவே. 38

பெரிய மாமர மும்பெருங் குன்றமும்
இரிய வீசலி னிந்நெடும் பொன்மதில்
நெரிய மாட நெருப்பெழ நீறெழ
இரியல் போன விலங்கையு மெங்கணும். 39

தொண்டையங் கனிவாய்ச் சீதை துயக்கினு லென்னைச் சுட்
விண்டவா னவர்தம் முன்னே விரிபொழி லிறுத்து வீசக்[ டாய்
கண்டனை நின்று யென்று காணுமே லரக்கன் காய்தல்
உண்டென வெருவினுன்போ லொளித்தனனுடுவின்கோமான்.

காசறு மணியும் பொன்னுங் காந்தமுங் கருல்வ தான
மாசறு மரங்க ளாகக் குயிற்றிய மதனச் சோலை
ஆசைக டோறு மைய னங்கையா லள்ளி யள்ளி
வீசிய விளக்க லாலே விளங்கின வுலக மெல்லாம். 41

கதறின வெருவி யுள்ளங் கலங்கின விலங்கு கண்கள்
குதறின பறவை வேலை குளித்தன குளித்தி லாத
பதறின பதைத்த வானிற் பறந்தன பறந்து பார்வீழ்ந்
துதறின சிறையை மீள வொடுக்கின வுலர்ந்து போன. 42

தோட்டொடுந் துதைந்த தெய்வ மரந்தொறுந் தொடுத்த புட்டம்
கூட்டொடுந் துறக்கம் புக்க குன்றெனக் குவவுத் திண்டோட்
சேட்டகன் பரிதி மார்பன் சீறியுந் தீண்ட றன்றால்
மீட்டவன் கருணை செய்தாற் பெறும்பதம் விளம்ப லாமோ. 43

பொய்ம்முறை யரக்கர் காக்கும் புள்ளுறை புதுமென் சோலை
விம்முறு முள்ளத் தன்ன மிருக்குமவ் விருக்க மொன்றும்
மும்முறை யுலக மெல்லா முற்றுற முடிவ தான
அம்முறை யையன் வைகு மாலென நின்ற தம்மா. 44

உறுசுடர்ச் சூடைக் காசவ் வுயிரினை யுயிரொப் பானுக்
கறிகுறி யாக விட்டா ளாதலான் வறிய ளந்தோ
செறிகுழற் சீதைக் கென்றோர் சிகாமணி தெரிந்து வாங்கி
எறிகட லீவ தென்ன வெழுந்தன னிரவி யென்பான். 45

தாழிரும் பொழில்க ளெல்லாந் துடைத்தொரு தமிய னின்றான்
ஏழிரண் டேழு நாடு மளந்தவ னெனலு மானான்
ஆழியி னடுவ ணின்ற வருவரைக் கரசு மொத்தான்
ஊழியி னிறுதிக் காலத் துருத்திர மூர்த்தி யொத்தான். 46

இன்னன நிகழும் வேலை யரக்கிய ரெழுந்து பொங்கிப்
பொன்மலை யென்ன நின்ற புனிதனைப் புகன்று நோக்கி
அன்னையீ தென்னை மேனி யார்கொலென் றச்ச முற்றார்
நன்னுத றன்னை நோக்கி யறிதியோ நங்கை யென்றார். 47

தீயவர் தீய செய்த தீயவர் தெரியி னல்லால்
தூயவர் துணித லுண்டே நும்முடைச் சூழ லெல்லாம்
ஆயமா னெய்த வம்மா னிளையவ னரக்கர் செய்த
மாயமென் றுரைக்க வேயு மெய்யென மையல் கொண்டேன்.

என்றன ளரக்கி மார்கள் வயிறலைத் திரியல் போகிக்
குன்றமு முலகும் வானுங் கடல்களுங் குலைய வோட
நின்றதோர் சமித்தங் கண்டா னீக்குவ னிதனை யென்னாத்
தன்றடக் கைக ணீட்டிப் பற்றினன் றதை யொப்பான். 49

கண்கொள வரிது மீது கால்கொள வரிது தன்கால்
எண்கொள வரிதி ராவு மிருள்கொள வரிது மாக
விண்கொள நிவந்த மேரு வெள்குற வெதும்பி யுள்ளம்
புண்கொள வுயர்ந்த திப்பார் பொறைகொள வெளிது போலாம்.

பொங்கொளி நெடுங்கை நீட்டிப் புதியபால் பொழிவ தொக்கும்
திங்களை நக்கு கின்ற விருளெலாம் வாரித் தின்ற
தங்கைபத் திரட்டி யான்றன் றுணையா லழகு மானப்
பங்கயத் தொருவன் றனே பசும்பொனாற் படைத்த தம்மா. 51

தூணெலாஞ் சுடருங் காசு சுற்றெலா முத்தஞ் சொன்னம்
பேணலா மணியின் பத்திப் பிடரெலா மொளிகள் விம்மச்
சேணெலாம் விரியுங் கற்றைச் சேயொளிச் செல்வற் கேயும்
பூணலா மெம்ம னோராற் புகழலாம் பொதுமைத் தன்றே. 52

வெள்ளியங் கிரியைப் பண்டவ் வெந்தொழி லரக்கன் வேரோ
டள்ளின னென்னக் கேட்டா னத்தொழிற் கழிவு தோன்றப்
புள்ளிமா மேரு வென்னும் பொன்மலை யெடுப்பான் போல
வள்ளுகிர்த் தடக்கை நீட்டி மண்ணின்றும் வாங்கி யண்ணல். 53

விட்டன னிலங்கை தன்மேல் விண்ணுற விரிந்த மாடம்
பட்டன பொடிக ளான பகுத்தன பாங்கு நின்ற
சுட்டன பொறிகள் பின்னைத் துளங்கின ரரக்கர் தாமும்
கெட்டனர் வீர ரம்மா பிழைப்பரோ கேடு சூழ்ந்தார். 54

நீரிடு துகில ரச்சர் நெருப்பிடு நெஞ்சர் நெக்குப்
பீரிடு முருவர் தெற்றிப் பிணங்கிடு தாளர் பேழ்வாய்
ஊரிடு பூச லார வுலைத்தன ரோடி யுற்றார்
பாரிடு பழுவச் சோலை பாலிக்கும் பருவத் தேவர். 55

அரிபடு சீற்றத் தான்ற னருகுசென் றடியில் வீழ்ந்தார்
கரிபடு திசைக ளீண்ட காவலாய் காவ லாற்றேம்
கிரிபடு குவவுத் திண்டோட் குரங்கிடை கிழித்து வீச
எரிபடு துகிலி னெய்தி னிற்றது கடிகா வென்றார். 56

சொல்லிட வெளிய தன்றாற் சோலையைக் காலிற் கையிற்
புல்லொடு துகளு மின்றிப் பொடிபட நூறிப் பொன்றேல்
வில்லிடு வோமந் தன்னை வேரொடு வாங்கி வீசச்
சில்லிட மொழியத் தெய்வ விலங்கையுஞ் சிதைந்த தென்றார்.

ஆடகத் தருவின் சோலை பொடிபடுத் தரக்கர் காக்கும்
தேடரு மோமம் வாங்கி யிலங்கையைச் சிதைத்த தம்மா
கோடர மொன்றே நன்றி திராக்கதர் கொற்றஞ் சொற்றல்
மூடரு மொழியா ரென்று மன்னனு முறுவல் செய்தான். 58

தேவர்கள் பின்னு மன்ன வதனுருச் சுமக்குந் திண்மைப்
பூவல யத்தை யன்றோ புகழ்வது புலவர் போற்றும்
மூவரி னொருவ னென்று புகல்கினு முடிவி லாத
ஏவமக் குரங்கை யைய காணுதி யின்ன மென்றார். 59

மண்டலங் கிழிந்த வாயின் மறிகடன் மோழை மண்ட
எண்டிசை சுமந்த மாவுந் தேவரு மிரியல் போகத்
தொண்டைவா யரக்கி மார்கள் சூல்வயி றுடைந்து சோர
அண்டமும் பிளந்து விண்ட தாமென வநும ஞர்த்தான். 60





# கிங்கரர்வதைப்படலம்.

அருவரை முழையின் மூட்டு மசனியி னிடிப்பு மாழி
வெருவரு முழக்கு மீசன் வில்லிறு மொலியு மென்னக்
குருமணி மகுட கோடி முடித்தலை குலுங்கும் வண்ணம்
இருபது செவியி னூடு நுழைந்ததவ் வெழுந்த வோசை. 1

புல்லிய முறுவ றோன்றப் பொருமையுஞ் சிறிது பொங்க
எல்லையி லாற்றன் மாக்க ளெண்ணிறந் தாரை யேவி
வல்லையி லகலா வண்ணம் வானையும் வழியை மாற்றிக்
கொல்லலீர் குரங்கை நொய்திற் பற்றுதிர் கொணர்தி ரென்றான்.

சூலம்வாண் முசலங் கூர்வே றோமரந் தண்டு பிண்டி
பாலமே முதலா வுள்ள படைக்கலம் படைத்த கையர்
ஆலமே யனைய மெய்ய ரகலிட மழிவு செய்யும்
காலமே லெழுந்த மூரிக் கடலெனக் கடிது செல்வார். 3

நானில மதனி னுண்டு போமென நவிலி னச்சொல்
தேனினுங் களிப்புச் செய்யுஞ் சிந்தையர் தெரித்துமென்னின்
கானினும் பெரிய ரோசை கடலினும் பெரியர் கீர்த்தி
வானினும் பெரியர் மேனி மலையினும் பெரியர் மாதோ. 4

திருகுறுஞ் சினத்துத் தேவர் தானவ ரென்னுந் தெவ்வர்
இருகுறும் பெறிந்து நின்ற விசையினார் வசையென் றெண்ணப்
பொருகுறும் பொன்று வென்று புணர்வது பூவுண் வாழ்க்கை
ஒருகுறுங் குரங்கென் றெண்ணி நெடிதுநா ணுழக்கு நெஞ்சர்.

கட்டிய வாள ரிட்ட கவசத்தர் கழலர் திக்கைத்
தட்டிய தோளர் மேகந் தடவிய கையர் வானை
எட்டிய முடியர் தாளா லிடறிய பொருப்ப ரீட்டிக்
கொட்டிய பேரி யென்ன மழையெனக் குமுறுஞ் சொல்லார். 6

வானவ ரெறிந்த தெய்வ வயப்படை வடுக்கண் மற்றைத்
தானவர் துரந்த வேதித் தழும்பொடு தயங்குந் தோளர்
யானையும் பிடியும் வாரி யிடும்பில வாய ரீன்ற [கண்ணர்.
கூனல்வெண் பிறையிற் றோன்று மெயிற்றினர் கொதிக்குங் 7

சக்கர முலக்கை தண்டு தாரைவாள் பரிகஞ் சங்கு
முற்கர முசுண்டி பிண்டி பாலம்வேல் சூல முட்கோல்
பொற்கரங் குலிசம் பாசம் புகர்மழு வெழுபொற் குந்தம்
விற்கருங் கவண்விட் டேறு கழுக்கடை யெழுக்கண் மின்ன. 8

பொன்னிறங் கருலுந் தெய்வப் பூணினர் பொருப்புத் தோளர்
மின்னின்ற படையுங் கண்ணும் வெயில்விரிக் கின்ற மெய்யர்
என்னென்றார்க் கென்னென் னென்றா ரெய்திய தறிந்தி லாதார்
முன்னின்றார் முதுகு தீயப் பின்னின்றார் முடுகு கின்றார். 9

வெய்துறு படையின் மின்னர் வில்லினர் வீசு காலர்
மையுறு விசும்பிற் றோன்று மேனியர் மடிக்கும் வாயர்
கைபரந் துலகம் பொங்கிக் கடையுக முடியுங் காலைப்
பெய்யவென் றெழுந்த மாரிக் குவமைசால் பெருமை பெற்றார்.

பணியுறு செயலை சிந்தி யோமமும் பறித்த தம்மா
தனியொரு குரங்கு போலா நன்றுநந் தருக்கென் கின்றார்
இனியொருபழிமற்றுண்டோவிதனினென்றிரைத்துப்பொங்கி
முனிவுறு மனத்திற் றாவி முந்துற முடுகு கின்றார். 11

எற்றுறு முரசும் விண்ணு ணேறுவிட் டெடுத்த வார்ப்பும்
சுற்றுறு கழலுஞ் சங்குந் தெழிதெழித் துரப்புஞ் சொல்லும்
உற்றுடன் ஹென்று யோங்கி யொலித்தெழுந் தூழிப் பேர்வில்
நற்றிரைக் கடல்க ளோடு மழைகளை நாவ டக்க. 12

தெருவிட மில்லென் றெண்ணி வானிடைச் செல்கின் றாரும்
புருவமுஞ் சிலையுங் கோட்டிப் புகையுயிர்த் துயிர்க்கின் றாரும்
ஒருவரி னொருவர் முந்தி முறைமறுத் துருக்கின் றாரும்.
விரிவில திலங்கை யென்று வழிபெறார் விளிக்கின் றாரும். 13

வாளுறை விதிர்க்கின் றாரும் வாயினை மடிக்கின் றாரும்
தோளுறக் கொட்டிக் கல்லைத் துகள்படத் துகைக்கின் றாரும்
தாள்பெயர்த் திடம்பெ றாது தருக்கினர் நெருக்கு வாரும்
கோள்வளை யெயிறு தின்று தீயெனக் கொதிக்கின் றாரும். 14

அனைவரு மலையென நின்றா ரனைவரு படைகள் பயின்றார்
அனைவரு மமரி னுயர்ந்தா ரகலிட நெளிய நடந்தார்
அனைவரும் வரனி னமைந்தா ரசனியி னணிக ளணிந்தார்
அனைவரு மமரரை வென்றா ரசுரரை யுயிரொடு தின்றார். 15

குறுகின கவசரு மின்போல் குரைகழ லுரகரும் வன்போர்
முறுகின பொழுதினு டைந்தார் முதுகிடை முறுவல் பயின்றார்
இறுகின நிதிகிழ வன்பே ரிசைகெட வளகை யெறிந்தார்
தெறுகுந ரின்மையர் வன்றே டினவுற வுலகு திரிந்தார். 16

வரைகளை யிடறுமி னென்முன் மறிகடல் பருகுமி னென்முல்
இரவியை விழவிடு மென்று லெழுமழை பிழியுமி னென்முல்
அரவின தரசனை யொன்றோ தரையினொ டறையுமினென்முல்
தரையினை யெடுமெடு மென்று லொருவர தமைதல் சமைந்தார்.

தூளியி னிமிர்பட லம்போ யிமையவர் விழிதுற வெம்போர்
மீளியி னினமென வன்முள் வெறிபுலி விரைவ தெனப்போய்
ஆளியி னணியென வன்றே லலைகடல் விடமென வஞ்சா
வாளியின் விசைகொடு திண்கார் வரைவரு வனமென வந்தார்.

பொறிதர விழியுமி ரொன்றோ புகையுக வயிலொளி மின்போல்
செறிதர வுருமதிர் கின்முர் திசைதொறுந்திசைதொறுஞ்சென்
எறிதரு கடையுக வன்கா லிடறிட வுருமி னினம்போய் [ருர்
மறிதர மழையகல் விண்போல் வடிவழி பொழிலை வளைந்தார்.

வயிரொலிவளையொலிவண்கார்மழையொலிமுரசொலிமண்பால்
உயிருலை வுறநிமி ரும்போ ருருமொலி செவியி னுணர்ந்தான்
வெயில்விரிகதிரவனும்போய்வெருவிடவெளியிடைவிண்டோய்
கயிலையின் மலையென நின்முனவையவர் வருதொழில்கண்டான்.

இதவிய லிதுவென முந்தே யியைவுற வினிது தெரிந்தான்
பதவிய லறிவு பயந்தா லதனிலொர் பயனுள துண்டோ
சிதவியல் கடிபொழி லொன்றோ சிதறிய செயறரு திண்போர்
உதவிய வினிதி னுவந்தா னெவரினு மதிக முயர்ந்தான். 21

இவனிவ னிவனென நின்மு ரிதுவென முதலி யெதிர்ந்தார்
பவனனின் முடுகி நடந்தார் பகலிர வுறமிடை கின்முர்
புவனியு மலையும் விசும்பும் பொருவரு நகரு முடன்போர்
துவனியி லதிர விடம்போற் சுடர்விடு படைக டரந்தார். 22

கழைகளு மறிகட லும்போய் மதனற முரசம றைந்தார்
முழைகளி னிதழ்க டிறந்தார் முதுபுகை கதுவ முனிந்தார்
பிழையில படவர வின்றோள் பிடரிற வடியிடு கின்றார்
கழைதொடர் வனமெரியுண்டா லெனவெறிபடைஞர்கலந்தார்.

அறவனு மதனை யறிந்தா னனைவரு மமைய நடந்தான்
இறவரு வயிர நெடுந்தோ ளெழுபனை மரமிக வன்கால்
உறவரு துணையென வொன்றோ வுதவிய வதனை யுவந்தான்
நிறைகடல் கடையு நெடுந்தாண் மலையென நடுவணி மிர்ந்தான்.

பருவரை புரைவன வன்றோள் பனிமலை யருவி நெடுங்கால்
சொரிவனபலவென மண்டோய் துறைபொருகுருதிசொரிந்தார்
ஒருவரை யொருவர் தொடர்ந்தா ருயர்தலை யுடையவுருண்டார்
அருவரை நெரிய விழும்பே ரசனியு மசைய வறைந்தான். 25

பறைபுரை விழிகள் பறிந்தார் படியிடை நெடிது படிந்தார்
பிறைபுரை யெயிறு மிழந்தார் பிடரொடு தலைகள் பிளந்தார்
குறையுயிர் சிதற நெரிந்தார் குடரொடு குருதி சொரிந்தார்
முறைமுறை படைக ளெறிந்தார் முடையுடன் மறிய முறிந்தார்.

புடையிடை விடுகென வின்காய் பொறியிடைமயிர்கள்புகைந்தார்
தொடையொடு முதுகு துணிந்தார் சுழிபடு குருதி சொரிந்தார்
படையிடை யொடிய நெடுந்தோள் பறிதர வயிறு திறந்தார்
இடையிடை மலையின் விழுந்தா ரிகல்பொர முடுகி யெழுந்தார்.

புதைபடவிருளின் மிடைந்தார் பொறியிடைநெடிதுபுரண்டார்
விதைபடு முயிரர் விழுந்தார் விழியொடு மொழியு மிழந்தார்.
கதைகொடு முதிர மலைந்தார் கணைபொழி சிலையர் கலந்தார்
உதைபட வுரனு நெரிந்தா ருதறொடு குருதியு மிழ்ந்தார். 28

அயலயன் மலையொ டறைந்தா னடிபகை யளகை யடைந்தார்
வெயிலிடை மறைய விரிந்தார் மிசையுல கிடைய மிடைந்தார்
புயமொடு கடலின் விழுந்தார் புடைபுடை திசைதிசை சென்றார்
உயர்வுற விசையி னெறிந்தா னுடலொடு முலகு துறந்தார். 29

பற்றித் தாளொடு தோள்பறித் தெழுந்தவர் பகழி
இற்ற குத்திர மிடந்தன வாமெனக் கிடந்தார்
கொற்ற வாலிடைக் கொடுந்தொழி லரக்கரை யடங்கச்
சுற்றி வீசலிற் பம்பர மெனநின்று சுழன்றார். 30

வாள்க ளிற்றன விற்றன வரிசிலை வயிரத்
தோள்க ளிற்றன விற்றன சுடர்மழுச் சூலம்
நாள்க ளிற்றன விற்றன நகையெயிற் றீட்டம்
தாள்க ளிற்றன விற்றன படையுடைத் தடக்கை. 31

தெறித்த வன்றலை தெறித்தன செறிசுடர்க் கவசம்
தெறித்த பைங்கழல் தெறித்தன சிலம்பொடு பொலந்தார்
தெறித்த பன்மணி தெறித்தன பெரும்பொறித் திறங்கள்
தெறித்த குண்டலந் தெறித்தன கண்மணி சிதறி. 32

உக்க பற்குவை யுக்கன துவக்கெலும் புதிர்வுற்
றுக்க முற்கர முக்கன முசுண்டிக ளுடைவுற்
றுக்க சக்கர முக்கன வுடறிறந் துயிர்கள்
உக்க கற்பண முக்கன வுயர்மணி மகுடம். 33

தாள்க ளாற்பலர் தடக்கைக ளாற்பலர் தாக்கும்
தோள்க ளாற்பலர் சுடர்விழி யாற்பலர் தொடரும்
கோள்க ளாற்பலர் குன்றுக ளாற்பலர் தத்தம்
வாள்க ளாற்பலர் மரங்களி னாற்பலர் மடிந்தார் 34

ஈர்க்கப் பட்டனர் சிலர்சில ரிடியுண்டு பட்டார்
பேர்க்கப் பட்டனர் சிலர்சிலர் பிடியுண்டு பட்டார்
ஆர்க்கப் பட்டனர் சிலர்சில ரடியுண்டு பட்டார்
பார்க்கப் பட்டனர் சிலர்சிலர் பயமுண்டு பட்டார். 35

ஓடிக் கொன்றனன் சிலவரை யுடலுட னேறும்
கூடிக் கொன்றனன் சிலவரைக் கொடிநெடு மரத்தால்
சாடிக் கொன்றனன் சிலவரைப் பிணந்தொறுந் தடவித்
தேடிக் கொன்றனன் சிலவரைக் கறங்கெனத் திரிவான். 36

முட்டி னார்பட முட்டினன் முறைமுறை முடுகிக்
கிட்டி னார்படக் கிட்டினன் கிரிபட நெருங்கிக்
கட்டி னார்படக் கட்டினன் கைகளின் மெய்யின்
தட்டி னார்படத் தட்டினன் மலையெனத் தகுவான். 37

மறக்கி னுங்கொல்லு முணரினுங் கொல்லுமால் விசும்பிற்
பறக்கி னுங்கொல்லும் படரினுங் கொல்லுமாற் படைக்கை
நிறக்க ருங்கழ லரக்கர்க ளெறிதொறும் பொறிகள்
பிறக்க நின்றெறி படைகளைத் தடக்கையாற் பிசையும். 38

சேறும் வண்டலு மூளையு நிணமுமாய்த் திணிய
நீறு சேர்நெடுந் தெருவெலா நீத்தமாய் நிரம்ப
ஆறு போல்வருங் குருதியவ் வநுமனா லலைப்புண்
டறில் வாய்தொறு முமிழ்வதே யொத்ததவ் விலங்கை. 39

கருதி வாலினுங் காலினுங் கடிகையிற் கட்டிச்
சுருதி யேயன்ன மாருதி மரத்திடை துரப்பான்
நிருத ரெந்திரத் திடுகரும் பாமென நெரிவார்
குருதி சாறெனப் பாய்வது குரைகடற் கூனில். 40

எடுத்த ரக்கரை யெறிதலு மவருட லெற்றக்
கொடித்திண் மாளிகை யிடிந்தன மண்டபங் குலைந்து
தடக்கை யானைகண் மறிந்தன கோபுரந் தகர்ந்த
பிடிக்கு லங்களும் புரவியு மவிந்தன பெரிய. 41

தத்த மாடங்க டம்முட லாற்சிலர் தகர்த்தார்
தத்த மாதரைத் தங்கழ லாற்சிலர் சமைத்தார்
தத்த மாக்களைத் தம்படை யாற்சிலர் தடிந்தார்
எத்தி மாருதி தடக்கைக ளாலெடுத் தெறிய. 42

ஆடன் மாக்களி றனையவ னரக்கியர்க் கருளி
வீடு நோக்கிய செல்கென்று சிலவரை விட்டான்
கூடி னார்க்கவ ருயிரெனச் சிலவரைக் கொடுத்தான்
ஊடி னார்க்கவர் மனைதொறுஞ் சிலவரை யுய்த்தான். 43

தருவெ லாமுட றெற்றியெ லாமுடல் சதுக்கத்
துருவெ லாமுட லுவரியெ லாமுட லுள்ளோர்க்
கருவெ லாமுடல் காவுமெ லாமுட லரக்கர்
தெருவெ லாமுட றேசமெ லாமுடல் சிதறி. 44

ஊனெ லாமுயிர் கவர்வுறுங் காலனேயுந் துலந்தான்
தானெ லாரையு மாருதி சாடுகை தவிரான்
மீனெ லாமுயிர் மேகமெ லாமுயிர் மேன்மேல்
வானெ லாமுயிர் மற்றுமெ லாமுயிர் சுற்றி. 45

ஆக விச்செரு விளைவுறு மமைதியி னரக்கர்
மோக முற்றன ராமென முறைமுறை முனிந்தார்
மாக முற்றவு மாதிர முற்றவும் வளைந்தார்
மேக மொத்தனர் மாருதி வெய்யவ னொத்தான். 46

அடல ரக்கரு மார்த்தலி னலைத்தலி னமராப்
புடைபெ ருத்துயர் பெருமையிற் கருமையிற் பொலிவின்
மிடலி யற்படை மீனென விலங்கலிற் கலங்கும்
கடனி கர்த்தனர் மாருதி மந்தரங் கடுத்தான். 47

கரத லத்தினுங் காலினும் வாலினுங் கதுவ
நிரைம ணித்தலை நெரிந்துகச் சாய்ந்துயிர் நீப்பார்
சுரர்ந டுக்குற வமுதுகொண் டெழுந்தநா டொடரும்
உரக ரொத்தன ரநுமனக் கலுழனே யொத்தான். 48

மான முற்றதம் பகையினுன் முனிவுற்று வளர்ந்த
மீனு டைக்கட லுலகினி லுளவெலா மிடைந்த
ஊன றக்கொன்று துகைக்கவு மொழிவிலா நிருதர்
ஆனை யொத்தன ராளரி யொத்தன னநுமன். 49

எய்த வெற்றின வெறிந்தன வீர்த்தன விகலின்
பொய்த குத்தின பொதுத்தன தொளைத்தன போழ்ந்த
கொய்த சுற்றின பற்றின குடைந்தன பொலிந்த
ஐயன் மற்பெரும் புயத்தன புண்ணளப் பரிய. 50

கார்க்க ருந்தடங் கடல்களு மழைமுகிற் கண்ணும்
வேர்க்க வெஞ்செரு விளைத்தெழும் வெள்ளயிற் றரக்கர்
போர்க்கு ழாம்படி பூசலி னையனைப் புகழ்வுற்
றார்க்கும் விண்ணவ ரமலையே யுயர்ந்ததன் றமரில். 51

மேவும் வெஞ்சினத் தரக்கர்கண் முறைமுறை விசையால்
ஏவும் பல்படை யெத்தனை கோடிக ளெனினும்
தூவுந் தேவரு முனிவரு மகளிருஞ் சொரிந்த
பூவும் புண்களுந் தெரிந்தில மாருதி புயத்தில். 52

பெயர்க்குஞ் சாரிகை கறங்கெனத் திசைதொறும பெயர்வின்
உயர்க்கும் விண்மிசை யோங்கலின் மண்ணின்வந் துறலின்
அயர்த்து வீழ்ந்தனர் கழிந்தன ரரக்கரா யுள்ளார்
வெயர்த்தி லன்மிசை யுடலுயிர்த் திலனலன் வீரன். 53

எஞ்ச வில்கணத் தறிந்தில மிராவண னேவ
நஞ்ச முற்றவ ராமென வநுமன்மே னடந்தார்
துஞ்சி னாரல்ல தியாவரு மறத்தொடுந் தொலைவுற்
றஞ்சி னாரில்லை யரக்கரில் வீரர்மற் றியாரோ. 54

வந்த கிங்கர ரேயெனு மாத்திரை மடிந்தார்
நந்த வானத்து நாயக ரோடினர் நடுங்கிப்
பிந்து காலினர் கையினர் பெரும்பயம் பிடரின்
உந்த வாயிரம் பிணக்குவை மேல்விழுந் துளைவார். 55

விரைவி னுற்றனர் விம்மலா லியாதொன்றும் விளம்பார்
கரத லத்தினுற் பட்டதுங் கட்டுரைக் கின்றார்
தரையி னிற்கிலர் திசைதொறு நோக்கினர் சலிப்பார்
அரசன் மற்றவ ரலக்கணே யுரைத்திட வறிந்தான். 56

இறந்து நீங்கின ரோவின்றெ றுணையை யிகழ்ந்து
துறந்து நீங்கின ரோவன்றி வெஞ்சமந் தொலைந்தார்
மறந்து நீங்கின ரோவென்கொல் வந்ததென் றுரைத்தான்
நிறஞ்செ ருக்குற வாய்தொறு நெருப்புமிழ் கின்றான். 57

சலந்தலைக் கொண்டவவ் வரக்கர் தன்மையால்
அலந்திலர் செருக்களத் தஞ்சி னாலர்
புலந்தெரி பொய்க்கரி போன புன்கணார்
குலங்களி னவிந்தனர் குரங்கினு லென்றார். 58

ஏவலி னெய்தின ரிருந்த வெண்டிசைத்
தேவரை நோக்கினா னாணுஞ் சிந்தையான்
யாவதென் றறிந்திலிர் போலுமா லென்றான்
மூவகை யுலகமும் விழுங்க மூள்கின்றான். 59

மீட்டவ ருரைத்திலர் பயத்தின் விம்முவார்
தோட்டல ரிணமலர்த் தொங்கன் மௌலியான்
வீட்டிய தரக்கரை யென்னும் வெவ்வுரை
கேட்டதோ கண்டதோ கிளத்துவீ ரென்றான். 60

கண்டன மொருபுடை நின்று கண்களால்
தெண்டிரைக் கடலென வளைந்த சேனையை
மண்டலந் திரிந்ததோர் மாத்தி னாலுயிர்
உண்டதக் குரங்கினி யொழிவ தன்றென்றார். 61






கூம்பின கையி னின்ற குன்றெனக் குவவுத் திண்டோட்
பாம்பிவர் தறுகட் சம்பு மாலியென் பானை நோக்கி
வாம்பரித் தானை யோடு வளைத்ததன் மறனை மாற்றித்
தாம்பினிற் பற்றித் தந்தென் மனச்சினந் தணித்தி யென்றான்.

ஆயவன் வணங்கி யைய வளப்பரு மரக்கர் முன்னர்
நீயிது முடித்தி யென்று நேர்ந்தனை நினைவி னெண்ணி
ஏயினை யென்னப் பெற்றே லென்னின்யா ருயர்ந்தா ரென்னாப்
போயின னிலங்கை வேந்தன் போர்ச்சினம் போவ தொப்பான்.

தன்னுடைத் தானை யோடுந் தசமுகன் றருகன் றேய
மன்னுடைச் சேனை யோடுந் தாதைவந் தீந்த வானின்
மின்னுடைப் பரவை யோடும் வேறுளோர் சிறப்பின் விட்ட
பின்னுடை யனிகத்தோடும் பெயர்ந்தனன் பெரும்போர் பெற்
[றான்.

உருமொத்த முழக்கிற் செங்கண் வெள்ளெயிற்றேடைநெற்றிப்
பருமித்த கதியிற் றேன்றும் வேழமும் பதுமத் தண்ணல்
நிருமித்த வெழிலி முற்றிற் றென்னலா நிலைய நேமி
சொரிமுத்த மாலை சூழுஞ் சிறுகொடித் தடந்தேர் சுற்ற. 4

காற்றினை மருங்கிற் கட்டிக் கால்வருத் துயிருங் கூட்டிக்
கூற்றினை யேற்றி யன்ன குலப்பரி குலவுங் குன்றின்
தூற்றினி னெழுப்பி யாண்டுத் தொகுத்தெனச்சுழலுங்கண்ண
வேற்றினப் புலியே றென்ன வியந்தெழும் பதாதி யீட்டம். 5

தோமர மூலக்கை கூர்வாள் சுடர்மழுக் குலிசந் தோட்டி
தாமரந் தின்ற கூர்வேல் சக்கர மெழுக்கள் சாயம்
காமர்தண் டிலைவேல் குந்தங் கற்பணங் கால பாசம்
மாமரம் வலயம் வெங்கோன் முதலிய மயங்க மாதோ. 6

எத்திய வயில்வேல் குந்த மெழுமுத விளைய வேந்திக்
குத்திய திளைப்ப மீதிற் குழுவின மழைமாக் கொண்டல்
பொத்துகு பொருவி னன்னீர் சொரிவன போவ போலச்
சித்திரப் பதாகை யீட்டந் திசைதொறுஞ் செறிவ செல்வ. 7

பல்லியந் துவைப்ப நன்மாப் பணிலங்கண் முரலப் பஃறேர்ச்
சில்லிக ளிடிப்ப வாசி சிரித்திடச் செறிபொற் றாரும்
வில்லுநின் றிசைப்ப யானை முழக்கம்விட் டார்ப்ப விண்டோய்
ஒல்லொலி வானிற் றேவ ருரைதெரி வொழிக்க மன்றோ. 8

மின்னுகு கிரிகள் யாவு மேருவின் விளங்கித் தோன்றத்
தொன்னகர் பிறவு மெல்லாம் பொலிந்தன துறக்க மென்ன
அன்னவன் சேனை செல்ல வார்கலி யிலங்கை யான
பொன்னகர் தகர்ந்து பொங்கி யார்த்தெழு தூளி போர்க்க. 9

ஆயிர மைந்தொ டைந்தா மாழியந் தடந்தே ரத்தேர்க்
கேயின விரட்டி யானை யானையி னிரட்டி பாய்மா
போயின பதாதி சொன்ன புரவியி னிரட்டி போலாந்
தீயவன் றடந்தேர் சுற்றத் தெற்றெனச் சென்ற சேனை. 10

விண்மறைக் கிழவர் நாளு விஞ்சையர் வரத்தின் மிக்கார்
வன்மறக் கண்ண ராற்றல் வரம்பிலா வயிரத் தோளார்
தொன்மறக் குலத்தர் தூணி தூக்கிய புறத்தர் மார்பின்
கன்மறைத் தொளிருஞ் செம்பொற் கவசத்தர் கடுந்தே ராட்கள்

பொருதிசை யானை யூரும் புனிதனைப் பொருவும் பொற்பர்
சுரிபடைத் தொழிலு மற்றை யங்குசத் தொழிலுந் தொக்கார்
நிருதியிற் பிறந்த வீரர் நெருப்பிடை பரப்புங் கண்ணர்
பரிதியிற் பொலியு மெய்யர் படுமதக் களிற்றின் பாகர். 12

ஏர்கெழு திசையுஞ் சாரி பதினெட்டு மியல்பி னெண்ணிப்
போர்கெழு படையுங் கற்ற வித்தகப் புலவர் போரில்
தேர்கெழு மறவர் யானைச் சேவகர் சிரத்திற் செல்லுந்
தார்கெழு புரவி யென்னுந் தம்மனந் தாவப் போனர். 13

அங்நெடுந் தானை சுற்ற வமரரை யச்சஞ் சுற்றப்
பொன்னெடுந் தேரிற் போனன் பொருப்பிடை நெருப்பிற் பொ
தன்னெடுங் கண்கள் காந்தத் தாழ்பெருங் கவச மார்பின் [ங்கித்
மின்னிட வெயிலும் வீச வில்லிடு மெயிற்று வீரன். 14

நந்தன வனத்து ணின்ற நாயகன் றூதன் றானும்
வந்தில ரரக்க ரென்னு மனத்தினன் வழியை நோக்கிச்
சந்திரன் முதல வான மீனெலாந் தழுவ நின்ற
இந்திர தனுவிற் றோன்றுந் தோரண மேறி நின்றான். 15

கேழிரு மணியும் பொன்னும் விசும்பிருள் கிழித்து வீங்க
ஊழிருங் கதிர்க ளோடுந் தோரணத் தும்பர் மேலான்
சூழிருங் கோட்க ளெல்லாந் தொத்திடச் சுடருஞ் சோதி
ஆழியி னடுவட் டோன்று மருக்கனே யனைய னானான். 16

செல்லொடு மேகஞ் சிந்தத் திரைகடல் சிலைப்புத் தீரக்
கல்லளை கிடந்த நாக முயிரொடு விடமுங் காலக்
கொல்லெயிற் றரக்கர் நெஞ்சிற் குடிபுக வச்சம் வீரன்
வில்லென விடிக்க விண்ணோர் நடுக்குற வீர ஞார்த்தான். 17

நின்றன திசைக்கண் வேழ நெடுங்களிச் செருக்கு நீங்கத்
தென்றிசை நமனு முள்ளந் துணுக்கெனச் சிந்தி வானில்
பொன்றலின் மீன்க ளெல்லாம் பூவென வுதிரப் பூவும்
குன்றமும் பிளக்க வேலை துளக்குறக் கொட்டி ஞன்றோன். 18

அவ்வழி யரக்க ரெல்லா மலைநெடுங் கடலி ஞார்த்தார்
செவ்வழிச் சேற லாற்றார் பிணப்பெருங் குன்றந் தெற்றி
வெவ்வழிக் குருதி வெள்ளம் புடைமிடைந் துயர்ந்து வீங்க
எவ்வழிச் சேறு மென்றார் தமருடம் பிடறி வீழ்வார். 19

ஆண்டுநின் றரக்கன் வெவ்வே றடரிவகுத் தனிகந் தன்னை
மூண்டிரு புடையு முன்னு முறைமுறை மூச வேவித்
தாண்டினன் றானுந் திண்டேர் தோரணத் திருந்த சூரன்
வேண்டியதெதிர்ந்தானென்னவீங்கினன்விசயத்திண்டோள்.

ஐயனு மமைந்து நின்று ஞழியா னளவி ஞமம்
நெய்சுடர் விளக்கிற் றோன்று நெற்றியே நெற்றி யாக
மொய்மயிர்ச் சேனை பொங்க முரணயி லுகிர்வாண் மொய்த்த
கைகளே கைகளாகக் கடைக்கூழை திருவா லாக. 21

வயிர்கள்வால் வளைகள் விம்ம வரிசிலை சிலைப்ப மாயப்
பயிர்களார்ப் பெடுப்ப மூரிப் பல்லியங் குமுறப் பற்றிச்
செயிர்கொள்வா ளரக்கர் சீற்றஞ் செருக்கினர் படைகள் சிந்தி
வெயில்கள்போ லொளிகள் வீச வீரன்மேற் கடிது விட்டார்.22

கருங்கழ லரக்கர்தம் படைக்கலங் கரத்தால்
பெருங்கட லுறப்புடைத் திறுத்துகப் பிசைந்தான்
விரிந்தன பொறிக்குல நெருப்பென வெகுண்டாண்
டிருந்தவன் கிடந்ததோ ரெழுத்தெறிந் தெடுத்தான். 23

இருந்தன னெழுந்தன னிழந்தன னுயர்ந்தான்
திரிந்தனன் புரிந்தன னெனநனி தெரியார்
விரிந்தவர் குவிந்தவர் விலங்கினர் கலந்தார்
பொருந்தினர் நெருங்கினர் களப்படப் புடைத்தான். 24

எறிந்தன வெய்தன விடியுரு மேன்மேல்
செறிந்தன படைக்கல மிடக்கையிற் சிதைத்தான்
முறிந்தன தெறுங்கரி முறிந்தன தடந்தேர்
மறிந்தன பரிநிரை வலக்கையின் மலைந்தான். 25

இழந்தன நெடுங்கொடி யிழந்தன விருங்கோ
டிழந்தன நெடுங்கர மிழந்தன வியன்றாள்
இழந்தன முழங்கொலி யிழந்தன மதம்பா
டிழந்தன பெருங்கத மிருங்கவ ளியானை. 26

நெரிந்தன தடஞ்சுவர் நெரிந்தன பெரும்பார்
நெரிந்தன நுகம்புடை நெரிந்தன வதன்கால்
நெரிந்தன கொடிஞ்சில்க ணெரிந்தன வியன்றார்
நெரிந்தன கடும்பரி நெரிந்தன நெடுந்தேர். 27

ஒடிந்தன வுருண்டன வுலந்தன பொலந்தார்
இடிந்தன வெரிந்தன நெரிந்தன வெழுந்தாண்
மடிந்தன மறிந்தன முறிந்தன மலைபோல்
படிந்தன முடிந்தன கிடந்தன பரிமா. 28

வெருண்டனர் வியந்தனர் விழுந்தன ரெழுந்தார்
மருண்டனர் வயங்கினர் மறிந்தன ரிறந்தார்
உருண்டன ருலந்தன ருழைத்தனர் பிழைத்தார்
சுருண்டனர் புரண்டனர் தொலைந்தனர் மலைந்தார். 29

கரிகொடு கரிகளைக் களப்படப் புடைத்தான்
பரிகொடு பரிகளைத் தலத்திடைப் படுத்தான்
வரிசிலை வயவரை வயவரின் மடித்தான்
நிரைமணித் தேர்களைத் தேர்களி னெரித்தான். 30

மூளையு முதிரமு முழுங்கிருங் குழம்பாய்
மீளிருங் குழைபடக் கரிவிழுந் தழுந்தத்
தாளொடுந் தலையுகத் தடநெடுங் கிரிபோல்
தோளொடு நிருதரை வாளொடுந் துகைத்தான். 31

மல்லொடு மலைமலைத் தோளரை வளைவாய்ப்
பல்லொடு நெடுங்கரப் பகட்டொடும் பருந்தாள்
வில்லொடு மயிலொடும் விறலொடும் விளிக்கும்
சொல்லொடு முயிரொடு நிலத்தொடுந் துகைத்தான். 32

புகைநெடும் பொறிபுகுந் திசைதொறும் பொலிந்தான்
சிகைநெடுஞ் சுடர்விடுந் தேர்தொறுஞ் செறிதாட்
டகைநெடுங் கரிதொறும் பரிதொறுஞ் சரித்தான்
நகைநெடுஞ் சிலைதொறுந் தலைதொறு நடந்தான். 33

வென்றியம் புரவியின் வெரிநினும் விரவார்
மன்றலந் தாரணி மார்பினு மணித்தேர்
ஒன்றினின் றொன்றினு முயர்மத மழைதாழ்
குன்றினுங் கடையுகத் துருமெனக் குதித்தான். 34

பிரிவரு மொருபெருங் காலெனப் பெயரா
இருவினை துடைத்தவ ரறிவென வெவர்க்கும்
வருவிலை முலைக்கென மதித்தனர் வழங்கும்
தெரிவையர் மனமெனக் கறங்கெனத் திரிந்தான். 35

அண்ணலவ் வரியினுக் கடியவ ரவன்சீர்
நண்ணுவ ரெனும்பொரு ளவையறத் தெரிப்பான்
மண்ணினும் விசும்பினு மருங்கினும் வலித்தார்
கண்ணினு மனத்தினுந் தனித்தனி கலந்தான். 36

கொடித்தடந் தேரொடுங் குரகதக் குழுவை
அடித்தொரு தடக்கையி னிலத்தினிட் டரைத்தான்
இடித்துநின் றதிர்கதத் தெயிற்றுவன் பொருப்பைப்
பிடித்தொரு தடக்கையி னுயிருகப் பிழிந்தான். 37

கறுத்தெழு நிறத்தின ரெயிற்றினர் கயிற்றார்
செறுத்தெரி விழிப்பவர் சிகைக்கழு வலத்தார்
மறுத்தெழு மறலிக ளிவரென வதிர்ந்தார்
ஒறுத்துருத் திரனெனத் தனித்தனி யுதைத்தான். 38

சக்கரந் தோமர முலக்கைதண் டயில்வாள்
மிக்கன தேர்பரி குடைகொடி விரவி
உக்கன குருதியம் பெருந்திரை யுருட்டப்
புக்கன கடலிடை நெடுங்கரப் பூட்கை. 39

எட்டின விசும்பினை யெழுப்பட வெழுந்த
முட்டின மலைகளை முயங்கின திசையை
ஒட்டின வொன்றையொன் றூடடித் துடைந்த
தட்டுமுட் டாடின தலையொடு தலைகள். 40

கானே காவல் வேழக் கணங்கள் கதவா ளரிகொன்ற
வானே யெய்தத் தனியே நின்ற மதமால் வரையொப்பான்
தேனே புரைகண் கனலே சொரியச் சீற்றஞ் செருச்செய்தான்
தானே யானான் சம்பு மாலி காலன் றன்மையான். 41

காற்றிக் கடிய கலினப் புரவி நிருதர் களத்துக்கார்
ஆற்றுக் குருதி நிணத்தோ டடுத்த வள்ளற் பெருங்கொள்ளைச்
சேற்றிற் செல்லாத் தேரி னுழி யாழு நிலைதீரா
வேற்றுச் செல்லும் வெளியோ வில்லை யளியன் விரைகின்றான்.

ஏதி யொன்றாற் றேரு மஃதா லெளியோ ருயிர்கோடல்
நீதி யன்றா லுடன்வந் தாரைக் காக்கு நிலையில்லாய்
சாதி யன்றேற் பிறிதென் செய்தி யவர்பின் றனிநின்றாய்
போதி யென்றான் பூத்த மரம்போற் புண்ணாற் பொலிகின்றான்.

நன்று நன்றுன் கருணை யென்னு நெருப்பு நகநக்கான்
பொன்று வாரி னொருவ னென்றாய் போலு மெனையென்னு
வன்றிண் சிலையின் வயிரக் காலால் வடித்திண் சுடர்வாளி
ஒன்று பத்து நூறு யிரமு முடனே யுதைப்பித்தான். 44

செய்தி செய்தி சிலைகைக் கொண்டால் வெறுங்கை திரிவோரை
நெய்தின் வெல்வ தரிதோ வென்னு முறுவ லுகநக்கான்
ஐய னங்கு மிங்குங் காலா லழியு மழையென்ன
எய்த பகழி யெல்லா மெழுவா லகல வழுவினான். 45

முற்ற முனிந்தா னிருதன் முனியா முன்னும் பின்னுஞ்சென்
றுற்ற பகழி யுருது முறியா வுதிர்கின் றதையுன்னாச் [னான்
சுற்று நெடுந்தே ரோட்டித் தொடர்ந்தான் றொடருந் துறைகா
வெற்றி யெழுவை மழுவா யம்பா லறுத்து வீழ்த்தினான். 46

சலித்தா னையன் கையா லெய்யுஞ் சரத்தை யுகச்சாடி
ஒலித்தா ரமரர் கண்டா ரார்ப்பத் தேரி னுட்புக்குக்
கலித்தான் சிலையைக் கையால் வாங்கிக் கழுத்தி னிடையிட்டு
வலித்தான் பகுவாய் மடித்த மலைபோற் றலைமண் ணிடைவீழ.

குதித்துத் தேருங் கோல்கொள் ளாளும் பரியுங் குழம்பாக[டான்
மிதித்துப் பெயர்த்து நெடுந்தோ ரணத்தை வீரன்மேற்கொண்
கதித்துப் பழித்துக் கழிந்தார் பெருமை கண்டு களைத்தஞ்சி
உதித்துப் புலர்ந்த தோல்போ லுருவத் தமர ரோடினார். 48

பரிந்து புலம்பு மகளிர் காணக் கணவர் பிணம்பற்றி
விரிந்த குருதிப் பேரா றீர்த்து மனைக டொறும்வீச
இரிந்த திலங்கை யெழுந்த ஞால மின்றிங் கிவனாலே
சரிந்த தரக்கர் வலியென் றெண்ணி யறமுந் தளிர்த்ததால். 49

புக்கா ரமரர் பொலந்தா ரரக்கன் பொருவில் பெருங்கோயில்
விக்கா நின்றார் விளம்ப லாற்றார் வெருவி விம்முவார்
நக்கா னரக்க னடுங்க லென்று னைய நமரெல்லாம்
உக்கார் சம்பு மாலி யுலந்தா னென்றே குரங்கென்றார். 50

என்னு மளவி னெரிந்து வீங்கி யெழுந்த வெகுளியான்
உன்ன வுன்ன வுதிரக் குமிழி விழியூ டுமிழ்கின்றான்
சொன்ன குரங்கை யானே பிடிப்பன் கடிதுதொடர்ந்தென்றான்
அன்ன துணர்ந்த சேனைத் தலைவ ரைவ ரமைவித்தார். 51





## பஞ்சசேனுபதிகள்வதைப்படலம்.

சிலம்பி யுண்பதோர் குரங்கின்மேற் சேறியேற் றிறலோய்
கலந்த போரினின் கட்புலன் கடுங்கனல் கதுவ
உலந்த மால்வரை யருவியா ரொழுக்கற்ற வொக்கப்
புலர்ந்த மாமதம் பூக்குமன் றேதிசைப் பூட்கை. 1

இலங்கு வெஞ்சினத் தஞ்சிறை யெறுழ்வலிக் கலுழன்
உலங்கின் மேலெழுந் தன்னநீ குரங்கின்மே லுருக்கின்
அலங்கன் மாலைநின் புயநினைந் தல்லுநன் பகலும்
குலுங்கும் வன்றுயர் நீங்குமால் வெள்ளியங் குன்றம். 2

உறுவ தென்கொலோ வானிழி வென்பதொன் றுடையார்
பெறுவ தியாதொன்றுங் காண்கிலர் கேட்கிலர் பெயர்ந்தார்
சிறுமை யீதொப்ப தியாதுநீ குரங்கின்மேற் செல்லின்
முறுவல் பூக்குமன் றேநின்ற மூவர்க்கு முகங்கள். 3

அன்றி யும்முனைக் காளின்மை தோன்றுமா லைய
வென்றி யில்லவர் மெல்லியோர் தமைச்செல விட்டாய்
நன்றி நீயின்று காண்டியே லெமைச்செல நயத்தி
என்று கைதொழு திறைஞ்சின ரரக்கனு மிசைந்தான். 4

உலக மூன்றிற்கு முதன்மைபெற் றோரென வுயர்ந்தார்
திலக மண்ணுற வணங்கினர் கோயிலிற் றீர்ந்தார்
அலகி றேர்பரி யானையோ டாண்மிடைந் தரக்கர்
தொலைவி லாதன கதுமென வருகெனச் சொன்னார். 5

ஆனை மேன்முர சறைந்தனர் வள்ளுவ ரழைத்தார்
பேன வேலையிற் புடைபரந் ததுபெருஞ் சேனை
சோனை மாமழை முகிலெனப் போர்ப்பணை துவைப்ப
மீன வானிடு வில்லெனப் படைக்கல மிடைந்த. 6

கூனன் மாக்கொடி மழைபொதுத் துயர்நெடுங் கோல
மான மாற்றரு மாருதி முனியநா ளுலந்து
போன மாற்றலர் புகழெனக் கால்பொரப் புரண்ட
வான யாற்றுவெண் டிரையென வரம்பில பரந்த. 7

விரவு பொற்கழல் விசித்தனர் வெரிநுற்று விளங்கச்
சரமொ டுக்கின புட்டிலுஞ் சாத்தினர் சமையக்
கருவி புக்கன ரரக்கர்மாப் பல்லணங் கவினப்
புரவி யிட்டதேர் பூட்டின பருமித்த பூட்கை. 8

ஆறு செய்தன வாரணையின் மதங்களவ் வாற்றைச்
சேறு செய்தன தேர்களின் சில்லியச் சேற்றை
நீறு செய்தன புரவியின் குரமற்றை நீற்றை
வீறு செய்தன வப்பரிக் கவினமா விலாழி. 9

வழங்கு தேர்களி னிடைப்படு வாசியி னார்ப்பும்
முழங்கு வெங்களிற் றதிர்ச்சியு மொய்கழ லொலியும்
தழங்கு பல்லியத் தமலையுங் கடையுகத் தாழி
முழங்கு மோதையின் மும்மடி யெழுந்தது முடுகி. 10

ஆழித் தேர்த்தொகை யைம்பதி னுயிர மஃதே
சூழிப் பூட்கைக்குத் தொகையவற் றிரட்டியின் றொகைய
ஊழிக் காற்றன்ன புரவிமற் றவற்றென்பா னிரட்டி
பாழித் தோணெடும் படைக்கலப் பதாதியின் பகுதி. 11

கூய்த்த ருந்தொறுந் தருந்தொறுந் தானைவெங் குழுவின்
நீத்தம் வந்தியங் கிடமிட னின்றியே நெருங்கக்
காய்த்த மைந்தவெங் கதிர்ப்படை யொன்றொன்று கதுவித்
தேய்த்தெ ழுந்தன பொறிக்குல மழைக்குலந் தீய. 12

பண்ம ணிக்குலம் யானையின் புடைதொறும் பரந்த
ஒண்ம ணிக்குல மழையிடை யுருமென வொலிப்பக்
கண்ம ணிக்குலங் கனலெனக் காந்துறக் கதுப்பின்
தண்ம ணிக்குல மழையெழு கதிரெனத் தழைப்ப. 13

கைக லந்ததஞ் சேனையங் கடலிடைக் கலந்தார்
செய்கை தாம்வருந் தேரிடைக் கதிரெனச் செல்வார்
மெய்க லந்தமா நிகர்வரு முவமையை வென்றார்
ஐவ ரும்பெரும் பூதங்க ளைந்துமொத் தமைந்தார். 14

தொக்க தம்படை சுரிகுழன் மடந்தையர் தொடிக்கை
மக்க டாயர்மற் றியாவருந் தடுத்தனர் மறுகி
ஒக்க வேகுதுங் குரங்கினுக் குயிர்தர வொருவர்
புக்கு மீண்டில ரென்றழு திரங்கினர் புலம்பி. 15

முந்தி யம்பல கறங்கிட முறைமுறை பொறிகள்
சிந்தி யம்புறு கொடுஞ்சிலை யுருமெனத் தெறிப்பார்
வந்தி யம்புறு மமரர்க்கு முனிவர்க்கும் வலியார்
இந்தி யம்பகை யாயவை யைந்துமொத் தியைந்தார். 16

வாச வன்வயக் குலிசமும் வருணன்வன் கயிறும்
ஏசு தென்றிசைக் கிழவன்ற னெரிமூனை யெழுவும்
ஈசன் வன்றனிச் சூலமு மென்றிவை யொன்றும்
ஊசி போல்வதோர் வடுச்செயா நெடும்புய முடையார். 17

சூர்த டிந்தவன் மயிலிடைப் பறித்தவன் ஞேகை
பார்ப யந்தவ னன்னத்தி னிறகிடைப் பறித்த
மூரி வெஞ்சிற கிடையிட்டுத் தொடுத்தன முறுக்கி
வீர சூடிகை நெற்றியி னயவிட்டு விசித்தார். 18

பொன்றி ணிந்ததோ ளிராவணன் மார்பொடும் பொருத
அன்றி ழுந்தகோ டரிந்திடு மழகுறு குழையர்
நின்ற வன்றிசை நெடுங்களி யானையி னெற்றி
மின்றி ணிந்தன வோடையின் வீரபட் டத்தர். 19

நிதிநெடுங் கிழவனை நெருக்கி நீணகர்ப்
பதியொடும் பெருந்திருப் பறித்த பண்டைநாள்
விதியொடு மன்னவன் விழுந்து வெந்நிடப்
பொதியொடும் வாரிய பொலங்கொள் பூணினர். 20

இந்திர னிசையிழந் தேகு வானிகற்
றந்திமுன் கடாவினன் முடிகத் தாமதன்
மந்தர வாலடி பிடித்து வல்லையேல்
உந்துதி நீயென வலிந்த வூற்றத்தார். 21

பானிறத் தந்தகன் பணிய ஞகிநின்
கோனினைத் திலனென வுலகங் கூறலும்
நீனிறத் திராவணன் முனிவு நீக்குவான்
காலனைக் காலினிற் கையிற் கட்டினர். 22

மலைகளை நகுந்தட மார்பர் மால்கடல்
அலைகளை நகுநெடுந் தோள ரந்தகன்
கொலைகளை நகுநெடுங் கொலையர் கொல்லனா
துலைகளை நகுமன லுமிழுங் கண்ணினார். 23

தோல்கிளர் திசைதொறு முலகைச் சுற்றிய
சால்கிளர் முழங்கெரி தழங்கி யேறினும்
கால்கிளர்ந் தடிப்பினுங் காலங் கையுற
மால்கடல் கிளரினுஞ் சரிக்கும் வன்மையார். 24

இவ்வகை யனைவரு மெழுந்த தானையர்
மொய்கிளர் தோரண மதனை முற்றினார்
கையொடு கையுற வணியுங் கட்டினார்
ஐயனு மவர்நிலை யமைய நோக்கினான். 25

அரக்கர்த மாற்றலு மளவில் சேனையின்
தருக்குமம் மாருதி தனிமைத் தன்மையும்
பொருக்கென நோக்கிய புரந்த ராதியர்
இரக்கமு மவலமுந் துளக்கு மெய்தினார். 26

இற்றன ரரக்கரிப் பகலு ளேயெனாக்
கற்றுணர் மாருதி களிக்குஞ் சிந்தையான்
முற்றுறச் சுலாவிய முடிவி றானையைச்
சுற்றுற நோக்கித்தன் றோளை நோக்கினான். 27

புன்றலைக் குரங்கிது போலு மாலமர்
வென்றது விண்ணவர் புகழை வேரொடும்
தின்றவல் லரக்கரைத் திருகித் தின்றதால்
என்றன ரயிர்த்தனர் நிருத ரெண்ணிலார். 28

ஆயிடை யநுமனு மமரர் கோனகர்
வாயினின் றவ்வழி கொணர்ந்து வைத்தமாச்
சேயொளித் தோரணத் தும்பர்ச் சேணெடு
மீயுயர் விசும்பையுங் கடக்க வீங்கினன். 29

வீங்கிய வீரனை வியந்து நோக்கிய
தீங்கியை யரக்கருந் திருகி னர்சினம்
வாங்கினர் வரிசிலை வழங்கி னர்படை
ஏங்கின சங்கநின் றிடித்த பேரியே. 30

எறிந்தன ரெய்தன ரெண்ணி றந்தனர்
பொறிந்தெழு படைக்கல மரக்கர் போக்கினர்
செறிந்தன மயிர்ப்புறந் தினவு தீர்வுறச்
சொறிந்தன வெனவிருந் தையன் றாங்கினன். 31

உற்றுடன் றரக்கரு முறுத்து டற்றினர்
செற்றுற நெருக்கினர் செருக்குஞ் சிந்தையர்
மற்றையர் வரும்பரி சிவரை வல்விரைந்
தெற்றுவ னெனவெழு வநும னேந்தினன். 32

ஒக்கிய படைகளு முருத்த வீரரும்
தாக்கிய பரிகளுந் தடுத்த தேர்களும்
மேக்குயர் கொடியிடை மேக மாலைபோல்
நூக்கிய கரிகளும் புரள நூக்கினன். 33

வார்மதக் கரிகளின் கோடு வாங்கிமாத்
தேர்படப் புடைக்குமத் தேரின் சில்லியால்
வீரரை யுருட்டுமவ் வீரர் வாளினால்
தாருடைப் புரவியைத் துணியத் தாக்குமால். 34

இரண்டுதே ரிரண்டுகைத் தலத்து மேந்திவே
றிரண்டுமால் யானைபட் டுருள வெற்றுமால்
இரண்டுமால் யானைகை யிரண்டி னேந்திவே
றிரண்டுபா லினும்வரும் பரியை யெற்றுமால். 35

மாயிரு நெடுவரை வாங்கி மண்ணினிட்
டாயிரந் தேர்பட வரைக்கு மாலழித்
தாயிரங் களிற்றையோர் மாத்தி னாலடித்
தேயெனு மாத்திரத் தெற்றி முற்றுமால். 36

விசையின்மான் றேர்களுங் களிறும் விட்டகன்
றிசையுமா காயமுஞ் செறியச் சிந்துமால்
குசைகொள்பாய் பரியொடுங் கொற்ற வேலொடும்
பிசையுமா லரக்கரைப் பெருங்க ரங்களால். 37

உதைக்கும்வெங் கரிகளை யுழக்குந் தேர்களை
மிதிக்கும்வன் புரவியைத் தேய்க்கும் வீரரை
வதிக்கும்வல் லெழுவினா லரைக்கு மண்ணிடைக்
குதிக்கும்வன் றலையிடைக் கடிக்குங் குத்துமால். 38

தீயுறு பொறியுடைச் செங்கண் வேங்கைமா
மீயுறத் தடக்கையால் வீரன் வீசுதோ
றாய்பெருங் கொடிநெடுங் கடலி னாழ்வன
பாயுடை நெடுங்கலம் படிவ போன்றவே. 39

மீயுற விண்ணிடை முட்டி வீழ்வன
வாய்பெருந் திரைக்கட லழுவத் தாழ்வன
ஓய்வில புரவிக ளுதிரங் கால்வன
வாயிடை யெரியுடை வடவை போன்றவே. 40

தாரொடு முருளொடுந் தடக்கை யாற்றனி
வீரன்விட் டெறிந்தன கடலின் வீழ்வன
வாரியி னெடுஞ்சுடர்க் கடவுள் வானவன்
தேரினை நிகர்த்தன புரவித் தேர்களே. 41

வரிந்துற வல்லிதிற் சுற்றி வாவினால்
விரிந்துற வீசலிற் கடலின் வீழ்ந்தவர்
திரிந்தனர் செறிகயிற் றரவி னாற்றிரி
அருந்திறன் மந்தர மனைய ராயினார். 42

வீரன்வன் றடக்கையா லெடுத்து வீசிய
வார்மத கரியினிற் றேரின் வாசியின்
மூரிவெங் கடல்புகக் கடிதின் முந்தின
ஊரின்வெங் குருதியா றீர்ப்ப வோடின. 43

பிறைக்கடை யெயிற்றின பிலத்தின் வாயின
கறைப்புனல் பொறிகளோ டுமிழுங் கண்ணின
உறைப்புறு படையின வுதிர வாக்கைகள்
மறைத்தன மகரதோ ரணத்தை வானுற. 44

குன்றுள மரமுள குலங்கொள் பேரெழு
ஒன்றல பலவுள வுயிருண் பானுளன்
அன்றினர் பலருள ரையன் கையுள
பொன்றுவ தல்லது புறத்துப் போவரோ. 45

முழுமுதற் கண்ணுதன் முருகன் றூதகை
மழுவெனப் பொலிந்தொளிர் வயிர வான்றனி
எழுவினிற் பொலங்கழ லரக்க ரீண்டிய
குழுவினைக் கரியெனக் கொன்று நீக்கினான். 46

உலந்தது தானை யுவந்தன ரும்பர்
அலந்தலை யுற்றதவ் வாழியி லங்கை
கலந்தத ழுங்குர லின்கட லோதை
வலந்தரு தோளவ ரைவரும் வந்தார். 47

ஈர்த்தெழு செம்புன லெக்கரி ழுக்கத்
தேர்த்துணை யாழிய ழுந்தினர் சென்றார்
ஆர்த்தன ராயிர மாயிர மம்பால்
தூர்த்தன ரஞ்சனை தோன்றலு நின்றான். 48

எய்தக டுங்கணை யாவையு மெய்தா
தொய்தக லும்படி கைகளி னூறாப்
பொய்தக டொன்றுபொ ருந்தி நெடுந்தேர்
செய்த கடும்பொறி யொன்று சிதைத்தான். 49

உற்றுறு தேர்சிதை யாமு னுயர்ந்தான்
முற்றின வீரனை வானின் முனிந்தான்
பொற்றிர ணீளெழு வொன்று பொறுத்தான்
எற்றின னஃதவன் வில்லினி னேற்றான். 50

முறிந்தது மூரிவி லம்முறி யேகொண்
டெறிந்த வரக்கனொர் வெற்பை யெடுத்தான்
அறிந்த மனத்தவ னவ்வெழு வேகொண்
டெறிந்த வரக்கனை யின்னுயி ருண்டான். 51

ஒழிந்தவர் நால்வரு மூழி யுருத்த
கொழுந்துறு தீயென வெஞ்சிலை கோவாப்
பொழிந்தனர் வாளி புகைந்தன கண்கள்
விழுந்தன சோரியவ் வீரன் மணித்தோள். 52

ஆயிடை வீரனு மூள்ள மழன்முன்
மாய வரக்கர் வலத்தை யுணர்ந்தான்
மீயெரி யுய்ப்பதொர் கற்செல விட்டான்
தீயவ ரச்சிலை யைப்பொடி செய்தார். 53

தொடுத்த தொடுத்த சரங்க டிரந்த
அடுத்தகன் மார்பி னழுந்தி யகன்ற
மிடற்றெழுழி லான்விடு தேரொடு நொய்தின்
எடுத்தொரு வன்றனை விண்ணி னெறிந்தான். 54

ஏய்ந்தெழு தேரிமிழ் விண்ணினை யெல்லாம்
நீந்திய தோடி நிமிர்ந்தது வேகம்
ஓய்ந்தது வீழ்வதன் முன்னுயர் பாரில்
பாய்ந்தவன் மேலுடன் மாருதி பாய்ந்தான். 55

மதத்த களிற்றினின் வாளரி யேறு
கதத்தது பாய்வது போற்கதி கொண்டு
குதித்தனன் மால்வரை மேனி குழம்ப
மிதித்தனன் வெஞ்சின வீரருள் வீரன். 56

மூண்ட சினத்தவர் மூவர் முனிந்தார்
தூண்டிய தேரர் சரங்க டிரந்தார்
வேண்டிய வெஞ்சமம் வேறு விளைப்பார்
யாண்டினி யேகுதி யென்றெதிர் சென்றார். 57

திரண்டுயர் தோளிணை யஞ்சனை சிங்கம்
அரண்டு விசும்புறை வார்களு மஞ்ச
முரண்டரு தேரவை யாண்டொரு மூன்றின்
இரண்டை யிரண்டுகை யுங்கொ டெழுந்தான். 58

தூங்கிய பாய்பரி சூத ருலைந்தார்
வீங்கிய தோளவர் விண்ணின் விசைத்தார்
ஆங்கது கண்டவர் போயக லாமுன்
ஓங்கிய மாருதி யொல்லையி னுற்றான். 59

காணிமிர் வெஞ்சிலை கையி னிறுத்தான்
ஆனவர் தூணியும் வாளு மறுத்தான்
ஏனையொர் வெம்படை யில்லவ ரெஞ்சார்
வானிடை நின்றுயர் மல்லின் மலைந்தார். 60

வெள்ளை யெயிற்றர் கறுத்துயர் மெய்யர்
பிள்ள விரித்த பிலப்பெரு வாயர்
கொள்ள வுருத்தடர் கோளர வொத்தார்
ஒள்ளிகல் வீர னருக்கனை யொத்தான். 61

தாம்பென வாலின் வரிந்துயர் தாளோ
டேம்பலி லாரிரு தோள்க ளிறுத்தான்
பாம்பென நீங்கினர் பட்டனர் வீழ்ந்தார்
ஆம்ப னெடும்பகை போலவ னின்றான். 62

நின்றன னேனைய னின்றது கண்டான்
குன்றிடை வாவுறு கோளரி போல
மின்றிரி வன்றலை மீது குதித்தான்
பொன்றி யவன்புவி தேரொடு புக்கான். 63

வஞ்சமுங் களவும் வெஃகி வழியலா வழிமே லோடி
நஞ்சினுங் கொடிய ராகி நவைசெயற் குரிய நீரார்
வெஞ்சின வரக்க ரைவ ரொருவனே வெல்லப் பட்ட
அஞ்செனும் புலன்க ளொத்தா ரவனுநல் லறிவு போன்றான்.

நெய்தலை யுற்ற வேற்கை நிருதரைச் செருவி னேர்ந்தார்
உய்தலை யுற்று மீண்டா ரொருவரு மில்லை யுள்ளார்
கைதலைப் பூசல் பொங்கக் கடுகினர் கால னுட்கும்
ஐவரு முலந்த தன்மை யனைவரு மமையக் கண்டார். 65

இறுக்குறு மின்று நம்மைக் குரங்கென விரங்கி யேங்கி
மறுக்குறு கின்ற நெஞ்சின் மாதரை வைது நோக்கி
உறுக்குறு சொல்ல ரூழித் தீயென வுலக மேழும்
சுறுக்கொள நோக்கு வான்றன் செவித்தொளை தீயச் சொன்னார்.

தானையு முலந்த தைவர் தலைவருஞ் சமைந்தார் தாக்கப்
போனபின் மீள்வோம் யாமே யதுவும்போர் புரிகி லாமை
வானையும் வென்று ளோரை வல்லையின் மடிய நூறி
ஏனைய ரின்மை சோம்பி யிருந்ததங் குரங்கு மென்றார். 67





# அக்ஷகுமாரன்வதைப்படலம்.

கேட்டலும் வெகுளி வெந்தீக் கிளர்ந்தெழ விலங்கன் மார்பிற்
றோட்டலர் தெரியன் மாலை வண்டொடுஞ் சுறுக்கொண் டேற
ஊட்டரக் குண்ட போலு நயனத்தா னெருப்பட் டானைத்
தாட்டுணை தொழுது மைந்தன் றடுத்திடை தருதி யென்றான். 1

முக்கண னூர்தி யன்றேன் மூவுல கடியிற் றாயோன்
ஒக்கவூர் பறவை யன்றே லவன்றாயி லுரக மன்றேல்
திக்கய மல்ல வாகிற் குரங்கின்மேற் சேறி போலாம்
இக்கட னடியேற் கீதி யிருத்தியீண் டினிதி னெந்தாய். 2

அண்டர்கோன் றன்னைப் பற்றித் தருகென வடியே னிற்கக்
கொண்டனை யென்முன் றன்னைப் பணியெனநெஞ்சங்கோடல்
உண்டது தீரு மன்றே யுரனிலாக் குரங்கொன் றேனும்
எண்டிசை வென்ற நீயே யேவுதி யென்னை யென்றான். 3

கொய்தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரத் துருவு கொண்டு
கைதவங் கண்ணி யீண்டோர் சிறுபழி யிழைக்குங் கற்பான்
எய்தின னிமையா முக்க ணீசனே யென்ற போதும்
நொய்தினின் வென்று பற்றித் தருகுவ னடியி னுன்பால். 4

துண்டத்தா ணதனிற் றோன்றுங் கோளரி சுடர்வெண் கோட்டு
மண்டொத்த நிமிர்ந்த பன்றி யாயினு மலைத லாற்று
தண்டத்தைக் கடந்து பொங்கி யப்புறத் தகலி னென்பால்
தண்டத்தை யிடுதி யன்றே நின்வயிற் றந்தி லேனேல். 5

எனவிவை யியம்பி யீதி விடையென விறைஞ்சி நின்ற
வினைகழல் வயிரத் திண்டோண் மைந்தனை மகிழ்ந்து நோக்கித்
துனைபரித் தேர்மே லேறிச் சேறியென் றினைய சொன்னான்
புனைமலர்த் தாரி னானும் போரணி யணிந்து போனான். 6

ஏறினா னென்ப மன்னோ விந்திர னிகலி லிட்ட
நூறொரு நூறு பூண்ட நொறில்வயப் புரவி நோன்றேர்
கூறின ரரக்க ராசி குமுறின முரசக் கொண்மூ
ஊறின வுரவுத் தானை யூழிபேர் கடலை யொப்ப. 7

பொருகடன் மகர மெண்ணி னெண்ணலாம் பூட்கை பொங்கித்
திரிவனமீன்களெண்ணினெண்ணலாஞ்செம்பொற்றிண்டேர்
உருவிறு மணலை யெண்ணி னெண்ணலா முரவுத் தானை
வருதிரை மாபி னெண்ணி னெண்ணலாம் வாவும் வாசி. 8

ஆறிரண் டடுத்த வெண்ணி னாயிரங் குமர ராவி
வேறிலாத் தோழர் வென்றி யாக்கர்தம் வேந்தர் மைந்தர்
ஏறிய தேரர் சூழ்ந்தா ரிறுதியின் யாவு முண்பான்
சீறிய காலத் தீயின் செறிசுடர்ச் சிகைக ளன்னார். 9

மந்திரக் கிழவர் மைந்தர் மதிநெறி யமைச்சர் மக்கள்
தந்திரத் தலைவ ரீன்ற தநயர்கள் பிறருந் தாதைக்
கந்தரத் தரம்பை மாரிற் றோன்றின ராதி யானோர்
எந்திரத் தேரர் சூழ்ந்தா ரீரிரண் டிலக்கம் வீரர். 10

தோமர முலக்கை சூலஞ் சுடர்மழுக் குலிசந் தோட்டி
ஏமரு வரிவில் வேல்கோ லீட்டிவா ளெழுவிட் டேறு
மாமரம் வீசு பாச மெழுமுளை வயிரத் தண்டு
காமரு கணையங் குந்தங் கற்பணங் கால நேமி. 11

என்றிவை முதல யாவு மெழிறிகழ் படைக ளீண்டி
மின்றிரண் டனைய வாகி வெயிலொடு நிலவு வீசத்
துன்றிருந் தூளி பொங்கித் துறுதலா லிறுதி செல்லாப்
பொன்றிணி யுலக மான பூதலம் வாழி மாதோ. 12

காகமுங் கழுகும் பேயுங் காலனுங் கணக்கில் காலம்
சேகுற வினையிற் செய்த தீமையுந் தொடர்ந்து செல்லப்
பாகியல் கிளவிச் செவ்வாய்ப்படைவிழிப்பணைத்தவேய்த்தோட்
டோகையர் மனமுந் தொக்க தும்பியுந் தொடர்ந்து சுற்ற. 13

உழைக்குல நோக்கி னூர்க ளுலந்தவர்க் குரிய மாதர்
அழைத்தழு குரலின் வேலை யமலையி னரவச் சேனை
தழைத்தெழு மொலியி னோசைப் பல்லியந் துவைத்த லால்விண்
மழைக்குர லிடியிற் சொன்ன மாற்றங்க ளொழிப்ப மன்னோ. 14

வெயிற்கர மணிகள் வீசும் விரிகதிர் விழுங்க வெய்ய
அயிற்கர மணிகள் காலு மவிரொளி பருக வஃது
வெயிற்றிளம் பிறைக ளீன்ற விலங்கொளி யொதுங்க யாணர்த்
துயிற்குற விரவு மன்று பகலன்றென் றுணர்வு தோன்ற. 15

ஓங்கிருந் தடந்தேர் பூண்ட வுளைவயப் புரவி யொல்கித்
தூங்கின வீழத் தோளுங் கண்களு மிடத்துத் துள்ள
வீங்கின மேக மெங்குங் குருதிநீர்த் துள்ளி வீழ்ப்ப
ஏங்கின காக மார்ப்ப விருளில்விண் ணிடிப்ப மாதோ. 16

வெள்ளவெஞ் சேனை சூழ விண்ணுளோர் வெருவி விம்ம
உள்ளநொந் தனுங்கி வெய்ய கூற்றமு முறுவ துன்னத்
துள்ளின சுழல்கட் பேய்க டோள்புடைத் தார்ப்பத் தோன்றும்
கள்ளவி ழலங்க லானைக் காற்றின்சேய் வரவு கண்டான். 17

இந்திர சித்தோ மற்றவ் விராவண னேயோ வென்னாச்
சிந்தையி னுவகை தோன்ற முனிவுற்ற குரக்குச் சீயம்
வந்தனன் முடிந்த தன்றோ மனக்கருத் தென்ன வாழ்த்திச்
சுந்தரத் தோளை நோக்கி யிராமனைத் தொழுது சொன்னான்.18

எண்ணிய விருவர் தம்மு ளொருவனால் யான்முன் னேற்ற
புண்ணிய முளதா லெங்கோன் றவத்தொடும் பொருந்தி னானே
நண்ணின னானு நின்றேன் காலனு நணுகி நின்றான்
கண்ணிய கரும மின்றே முடிக்குவன் கடிதி னென்றான். 19

பழியில துருவென் றாலும் பஃறலை யரக்க னல்லன்
விழியிடை யிமைப்பின் மேனா ளரியைவென் றானு மல்லன்
மொழியின்மற் றவர்க்கு மேலான் முரட்டொழின் முருக னல்ல
னழிவிலொண் குமரன் யாரோ வஞ்சனக் குன்ற மன்னான். 20

என்றவ னுவந்து விண்டோ யிந்திர சாப மென்ன
நின்றதோ ரணத்தி னும்ப ரிருந்ததோர் நீதி யானை
வன்றொழி லரக்க னோக்கி வாளெயி றிலங்க நக்கான்
கொன்றதிக் குரங்கு போலா மரக்கர்தங் குழாத்தை யென்னா.21

அன்னதா மச்சொற் கேட்ட சாரதி யைய கேண்மோ
இன்னதா மென்ன லாமோ வுலகிய லிகழ லம்மா
மன்னனோ டெதிர்ந்த வாலி குரங்கென்றான் மற்று முண்டோ
சொன்னது துணிவிற்கொண்டு சேறியென் றுணரச்சொன்னான்

விடந்திரண் டனைய மெய்யா னவ்வுரை விளம்பக் கேளா
இடம்புகுந் தினைய செய்த விதமெனுடு சீற்ற மெஞ்சத்
தொடர்ந்துசென் றுலக மூன்றுந் துருவின னொழிவு றாமல்
கடந்துபின் குரங்கென் றோதுங் கருவையுங் களைவ னென்றான்.

ஆர்த்தெழுந் தரக்கர் சேனை யஞ்சனைக் குரிய குன்றைப்
போர்த்தது பொழிந்த தம்மா பொருபடைப் பருவ மாரி
வேர்த்தனர் திசைகாப் பாளர் சலித்தது விண்ணு மண்ணும்
தார்த்தனி வீரன் றானுந் தனிமையும் வரமேற் சார்ந்தான். 24

எறிந்தன நிருதர் வெய்தி னெய்தன படைக ளெல்லாம்
முறிந்தன வீரன் மேனி முட்டின மொகர யானை
மறிந்தன மடிந்த தேரும் வாவுமாக் குழுவு மாவி
பிறிந்தன வரம்பில் யாக்கை யிலங்கைதன் னிலையிற் பேர. 25

காயெரி முளிபுற் கானிற் கலந்தெனக் காற்றின் செம்மல்
ஏயெனு மளவிற் கொல்லு நிருதர்க்கோ ரெல்லை யில்லை
போயவ ருயிரும் போகித் தென்புலம் படர்தல் பொய்யா
தாயிர கோடி தூத ருளர்கொலோ நமனுக் கம்மா. 26

வரவுற்றார் வாரா நின்றார் வந்தவர் வரம்பில் வெம்போர்
பொரவுற்ற பொழுது வீரன் மும்மடங் காற்றல் பொங்கி
எரியிற்போய்க் கதிரோ னூழி யிறுதியி லென்ன லானான்
உரவுத்தோ ளரக்க ரெல்லா மென்பிலா வுயிர்க ளொத்தார். 27

பிள்ளப் பட்டன நுதலோ டைக்கரி
பிறழ்பொற் றேர்பரி பிழையாமல்
அள்ளப் பட்டழி குருதிப் பொருபுன
லாறு கப்படி சேறாக

வள்ளப் பட்டன மகரக் கடலென
மதில்சுற் றியபதி மறலிக்கோர்
கொள்ளைப் பட்டன வுயிரொன் றும்படி
கொன்றா னைம்புலன் வென்றானே. 28

தேரே பட்டன வென்றார் சிலர்சிலர்
தெறுகட் செம்முக வயிரத்தோள்
பேரே பட்டன வென்றார் சிலர்சிலர்
பரியே பட்டன பெரிதென்றார்
காரே பட்டன நுதலோ டைக்கட
கரியே பட்டன கடிதென்றார்
நேரே பட்டவர் படமா டேபட
நில்லா வுயிர்கொடு நின்றாரே. 29

ஆழிப் பொருபடை நிருதப் பெருவலி
யுடலோ ராய்மக ளடுபேழ்வாய்த்
தாழிப் படுதயி ரொத்தார் மாருதி
தனிமத் தென்பதொர் தகையானான்
ஏழிப் புவனமு மிடைவா ழுயிர்களு
மெறிவே லிளையவ ரினமாக
ஊழிப் பெயர்வதொர் புனலொத் தாரன
லொத்தான் மாருத மொத்தானே. 30

கொன்றா னுடன்வரு குழுவைச் சிலர்பலர்
குறைகின் றாருடல் குலைகின்றார்
பின்றா நின்றன ருதிரப் பெருநதி
பெருகா நின்றன ரருகாரும்

நின்றார் நின்றிலர் தனிநின் றாெனாரு
நேமித் தேரொடு மவனேரே
சென்றான் வன்றிற லயில்வா யம்புக
டெரிகின் றான்விழி யெரிகின்றான். 31

உற்றா னிந்திர சித்துக் கிளையவ
னொருநா ளேபல ருயிருண்ணக்
கற்றா னும்முக மெதிர்வைத் தானது
கண்டார் விண்ணவர் கசிவுற்றார்
எற்றா மாருதி நிலையென் றாரினி
யிமையா விழியினை யிவையொன்றே
பெற்றா நல்லது பெற்றா மென்றனர்
பிறியா தெதிரெதிர் செறிகின்றார். 32

எய்தான் வாளிக ளெரிவா யுமிழ்வன
வீரே ழெதிரவை பார்சேரப்
பொய்தான் மணியெழு வொன்றா லன்றது
பொடியா யுதிர்வுற வடிவாளி
வெய்தா யினபல விட்டான் வீரனும்
வேறோர் படையிலன் மாறாவெங்
கைதா னேபொரு படையா கத்தொடர்
காலார் தேரதன் மேலானான். 33

தேரிற் சென்றெதிர் கோல்கொள் வானுயிர்
தின்றா னப்பொரு செறிதிண்டேர்
பாரிற் சென்றது பரிபட் டனவவன்
விரைவிற் சிந்திய பகழிக்கோல்

மார்பிற் சென்றன சிலபொற் றோளிடை
மறைவுற் றனசில மறவோனும்
நேரிற் சென்றவன் வயிரக் குனிசிலை
பற்றிக் கொண்டெதி ருறநின்றான். 34

ஒருகை யாலவன் வயிரச் சிலைதனை
யுற்றுப் பற்றலு முரவோனும்
இருகை யாலவன் வலியா முன்னம
திற்றோ டியதிவர் பொற்றோளான்
சுரிகை யாலவ னுருவிக் குத்தலு
மதனைச் சொற்கொடு வருதூதன்
பொருகை யாலெதிர் பிதிர்வித் தான்முதிர்
பொறியோ டும்படி பறியாவே. 35

வாளா லேபொர லுற்றா னிற்றது
மண்சேர் வதனின்முன் வயிரத்திண்
தோளா லேபொர முடுகிப் புக்கிடை
தழுவிக் கோடலும் வழுவிப்போய்
நீளா ரயிலென மயிர்தைத் திடமணி
நெடுவா லவனுட னிமிர்வுற்று
மீளா வகைபுடை சுற்றிக் கொண்டது
பற்றிக் கொண்டனன் மேலானான். 36

பற்றிக் கொண்டவன் வடிவா ளனவொளிர்
பல்லிற் றுகநிமிர் படர்கையால்
எற்றிக் கொண்டலி னிடைநின் றுமிழ்சுட
ரினமின் னினம்விழு வனவென்ன

முற்றிக் குண்டல முதலா மணியுக
　　முழைநா லாவிவர் குடர்நாலக்
கொற்றத் திண்சுடர் வயிரக் கைகொடு
　　குத்திப் புடையொரு குதிகொண்டான். 37

நீத்தா யோடின வுதிரப் பெருநதி
　　நீரா கச்சிலை பாராகப்
போய்த்தாழ் செறிதசை யரிசிந் தினபடி
　　பொங்கப் போமுயிர் போகாமன்
மீத்தா நிமிர்சுடர் வயிரக் கைகொடு
　　பிடியா மண்ணொடு விண்காணத்
தேய்த்தா னூழியி னுலகேழ் தேயினு
　　மொருதன் புகழிறை தேயாதான். 38

புண்டாழ் குருதியின் வெள்ளத் துயிர்கொடு
　　புக்கார் சிலர்சிலர் பொதிபேயின்
பண்டா ரத்திடை யிட்டார் தம்முடல்
　　பட்டா ரிற்சிலர் பயமுந்தத்
திண்டா டித்திசை யறியா மறுகினர்
　　செத்தார் சிலர்சிலர் செலவற்றார்
கண்டார் கண்டதொர் திசையே விசைகொடு
　　கால்விட் டார்படை கைவிட்டார். 39

மீனாய் வேலையை யுற்றார் சிலர்சிலர்
　　பசுவாய் வழிதொறு மேய்வுற்றார்
ஊனார் பறவையின் வடிவுற் றார்சிலர்
　　சிலர்நான் மறையவ ருருவானார்

மாஞர் கண்ணிள மடவா ராயவன்
முன்னே தங்குழல் வகிர்வுற்ருர்
ஆஞர் சிலர்சில ரையா நின்சர
ணென்ருர் நின்றவ ரரியென்ருர். 40

தந்தா ரமுமுறு கிளேயுந் தமையெதிர்
தழுவுந் தொறுநும தமரல்லேம்
வந்தேம் வானவ ரென்றே கினர்சிலர்
சிலர்மா னுயரென வாய்விட்டார்
மந்தா ரங்கிளர் பொழில்வாழ் வண்டுக
ளாஞர் சிலர்சிலர் மருள்கொண்டார்
இந்தா ரெயிறுக ளிறுவித் தார்சில
ரரிபோல் குஞ்சியை யிருள்வித்தார். 41

குண்டலக் குழைமுகக் குங்குமக் கொங்கையார்
வண்டலேத் தெழுகுழற் கற்றைகால் வருடவாய்
விண்டலத் தகவிரைக் குமுதவாய் விரிதலால்
அண்டமுற் றுளதவூ ரழுதபே ரமலேயே. 42

கதிரெழுந் தனேயசெந் திருமுகக் கணவன்மா
ரெதிரெழுந் தடிவிழுந் தழுதுசோ ரிளநலார்
அதிநலங் கோதைசே ரோதியோ டன்றவூர்
உதிரமுந் தெரிகிலா திடைபரந் தொழுகியே. 43

தாவில்வெஞ் செருநிலத் திடையுலந் தவர்தமேல்
ஓவியம் புரைநலார் விழுதொறுஞ் சிலருயிர்த்
தேவுகண் களுமிமைத் தனர்களா மிதுவெலாம்
ஆவியொன் றுடலிரண் டாயதா லேகொலாம். 44

ஓடினாரு யிர்களு டெல்கள்போ லுதவியால்
வீடினார் வீடினார் மிடலுடற் குவைகள்வாய்
நாடினார் மடநலார் நவையிலா நண்பரைக்
கூடினா ரூடினா ரும்பர்வாழ் கொம்பனார். 45

நீட்டுவா ளனையகட் டெரிவையோர் திருவனாள்
ஆட்டிநின் றயர்வதோ ரறுதலைக் குறையினைக்
கூட்டிநீ யோருயிர்த் துணைவனெங் கோவினைக்
காட்டுவா யாதியென் றழுதுகை கூப்பினாள். 46

ஏந்தினா டலையையோ ரெழுதருங் கொம்பனாள்
காந்தனின் றுடுவா னுயர்கவந் தத்தினை
வேந்தநீ யலசினாய் விடுதியா னடமெனாப்
பூந்தளிர்க் கைகளான் மெய்யுறப் புல்லினாள். 47

நாடினார் நாடியே நனைவருங் கொம்பனார்
வாடினார் கணவர்தம் மார்புறத் தழுவியே
வீடினா ரவ்வயின் வெருவிவிண் ணவர்கடாம்
ஓடினா ரரசன்மாட் டணுகிநின் றுரைசெய்வார். 48

கயன்மகிழ் கண்ணிணை கலுழி கான்றுகப்
புயன்மகிழ் புரிகுழல் பொடிய ளாவுற
அயன்மகன் மகன்மக னடியின் வீழ்ந்தனள்
மயன்மகள் வயிறலைத் தலறி மாழ்கினாள். 49

தாவருந் திருநகர்த் தைய லார்முதல்
ஏவரு மிடைவிழுந் திரங்கி யேங்கினார்
காவலன் கான்மிசை விழுந்து காவன்மாத்
தேவரு மழுதனர் களிக்குஞ் சிந்தையார். 50



## பாசப்படலம்.

அவ்வழி யவ்வுரை கேட்ட வாண்டகை
வெவ்விழி யெரியுக வெகுளி வீங்கினன்
எவ்வழி யுலகமுங் குலைய விந்திரத்
தெவ்வழி தரவுயர் விசயச் சீர்த்தியான். 1

அரஞ்சுடர் வேற்றன தனுச னிற்றசொல்
உரஞ்சுட வெரியுயிர்த் தொருவ னேங்கினன்
புரஞ்சுட வொருசிலைப் பொருப்பு வாங்கிய
பரஞ்சுட ரொருவனைப் பொருவும் பான்மையான். 2

ஏறினன் விசும்பினுக் கெல்லை காட்டுவான்
ஆறிரு நூறுபேய் பூண்ட வாழித்தேர்
கூறின கூறின சொற்கள் கோத்தலால்
பீறின நெடுந்திசை பிளந்த தண்டமே. 3

ஆர்த்தன கழலுந் தாரும் பேரியு மசனி யஞ்ச
வேர்த்துயிர் குலைய மேனி வெதும்பின னமரர் வேந்தன்
சீர்த்தது போரு மென்னாத் தேவர்க்குந் தேவ ராய
மூர்த்திக டாமுந் தத்தம் யோகத்தின் முயற்சி விட்டார். 4

தம்பியை நினையுந் தோறுந் தாரைநீர் ததும்புங் கண்ணன்
வம்பியல் சிலையை நோக்கி வாய்மடித் துருத்து நக்கான்
கொம்பியன் மாய வாழ்க்கைக் குரங்கினாற் குரங்கா வாற்றல்
எம்பியோ தேய்ந்தா னெந்தை புகழன்றோ தேய்ந்த தென்றான்.

வேறிரண் டனவும் வில்லு மிடைந்தவும் வெற்பென் றாலுங்
கூறிரண் டாக்கும் வாட்கைக் குழுவையுங் குணிக்க லாற்றேம்
சேறிரண் டுருகு செய்யுஞ் செறிமதச் சிறுகண் யானை
ஆறிரண் டஞ்சு நூற்றி னிரட்டிதேர்த் தொகையு மஃதே. 6

ஆயமாத் தானை தான்வந் தணவிய தணவு தானைத்
தீயவா னிருதர் வேந்தர் சேர்ந்தவர் சேரத் தேரின்
ஏயெனு மளவின் வந்தா னிராவண னிருந்த யாணர்
வாயின்றோய் கோயில் புக்கா னருவிசோர் வயிரக் கண்ணன். 7

தாளிணை விழுந்தான் றம்பிக் கிரங்கினன் றறுக ணனும்
தோளிணை பற்றி யேந்தித் தழுவின னழுது சோர்ந்தான்
வாளிணை நெடுங்கண் மாதர் வயிறலைத் தலறி மாழ்க
மீளிபோன் மொய்ம்பி னானும் விலக்கினன் விளம்ப லுற்றான். 8

ஒன்றுநீ யுறுதி யோரா யுற்றிருந் துளைய கிற்றி
வன்றிறற் குரங்கி னாற்றன் மரபுநீ யுணர்ந்து மன்றோ
சென்றுநீர் பொருதி ரென்று திறத்திறஞ் செலுத்தித் தேயக்
கொன்றனை நீயே யன்றோ நிருதர்தங் குழுவை யென்றான். 9

கிங்கரர் சம்பு மாலி கேடிலா வைவர் வென்றிப்
பைங்கழ லரக்க ரோடு முடன்சென்ற பகுதிச் சேனை
இங்கொரு பெயரு மீண்டா ரில்லையேற் குரங்க தெந்தாய்
சங்கர னயன்மா லென்பார் தாமெனுந் தரத்த தாமே. 10

திக்கினை வென்ற நீதான் றிரிபுரந் தீயச் செற்ற
முக்கணன் மாயன் றனிவ் வுலகொரு மூன்றுஞ் செய்தான்
அக்கனைக் கொன்று நின்ற குரங்கினை யாற்றல் காட்டப்
புக்கினி வென்று மென்றாற் புலம்பன்றிப் புலமைத் தாமோ. 11

ஆயினு மைய நொய்தி னுண்டொழிற் குரங்கை நானே
ஏயெனு மளவிற் பற்றித் தருகுவ னிடரென் றென்றும்
நீயினி யுழக்கற் பாலை யல்லைநீ டிருத்தி யென்று
போயின னமரர் கோனைப் புகழொடுங் கொண்டு போந்தான்.

பத்தியிற் றேர்கள் செல்லப் பவளக்காற் குடைகள் சுற்ற
முத்தினிற் சிவிகை தன்னை முகிலெனத் தழைகள் சுற்ற
மத்தவெங் கரிக ளெல்லா மழையென மருண்டு தோன்றத்
தத்திய பரிக டம்மிற் சாமரை பதைப்ப வந்தான். 13

சங்குகள் முழங்கப் பேரி சகடைக ளிடியில் வீழ
வெங்குரற் றமிலை யோடு கடுவையின் மரங்கள் வீங்கத்
தொங்கலின் குழாமுந் தூளி வெள்ளமும் விசும்பைத் தூர்க்கத்
திங்களிற் குடைகள் பூப்பத் திசைக்களி றிரிய வந்தான். 14

தீயினிற் செல்ல வைத்த சின்னங்கள் வேறு வேறு
வாயினி லூத வீரர் வழியிடம் பெறாது செல்லக்
காய்பொனிற் றோன்றுங் கண்ணி யரக்கர்கள் கடுத்துச் செல்ல
நாயகன் றூதன் றானு நோக்கின னகையுங் கொண்டான். 15

செம்பொனிற் றேரிற் பாங்கர் செங்குடைத் தொங்கற் காடு
மும்பரிற் கொம்ப ரொத்த வொருபிடி நுசுப்பிற் செவ்வாய்
வம்பவிழ் குழலி னார்கள் சாமரை வகைந்து வீசக்
கொம்பொடு கோடு தாரை குடர்பறித் தூத வந்தான். 16

தொங்கலின் காடு நூறு யிரமென்பர் தோகைப் பிச்சம்
பங்கமில் பணிலம் பத்துப் பத்துநூ றுகு மென்பர்
செங்குடை வெண்மை நீலம் பச்சையோ டினைய வெல்லாம்
பொங்கொளி மன்னு கோடிப் புரந்தரா தித்தர் சுற்ற. 17

தீயெழு பொன்னின் சின்னம் சின்னம்வீ ழரக்கர் வீரர்
வாய்களி னூத மண்ணும் வானமு மறுகிச் சோர
வாயது முடிவு காலங் கிளர்ந்தன னரக்க னென்று
வாய்களிற் பேசி வானோர் மண்டினர் மலைக ணோக்கி. 18

அரந்தரு மயிலிற் காடு மழலுமிழ் குந்தக் காடுஞ்
சரந்தருஞ் சிலையிற் காடுந் தானவர் கடலு மின்ன
நிரந்தரஞ் சங்கு தாரை நிலமகள் முதுகை யாற்றுள்
புரந்தர சித்து வந்தா னென்றன பொன்னின் சின்னம். 19

புலித்தோலிற் பலகை யெல்லாம் பொருகடற் புரவி யென்னக்
கலித்தோடி யும்ப ரோடு மோடின கால னஞ்ச
வொலித்தாழி யுவாவுற் றென்ன வும்பர்தோ ரணத்தை முட்ட
வலித்தார்திண் சிலைக ளெல்லா மண்டின சரத்தின் மாரி. 20

கடுவையின் மரங்க ளோடு சகடைக டமிலை தாக்க
வுடுவின மான வெல்லா முதிர்ந்தன பூவி தென்ன
அடுபுலி யனைய வீர ரமரிணி லார்ப்பு மானை
நெடுமணி முழக்கு மோதை மண்ணக நிறைந்த தன்றே. 21

எண்பதி னாயிர கோடி யிருஞ்சிலை
புண்பயில் வெஞ்சரம் பூட்டின ரொன்றே
விண்புகு தோரண மெல்லைம றைந்தது
மண்புகழ் கீர்த்தியன் மாருதி வாழ்ந்தான். 22

மாறெழு வாட்படை பத்திரு வெள்ளம்
ஆறிரு கோடியின் மேலி னமைந்தார்
கூறிடு வெள்ள மிடைந்தது குந்தம்
வீறுடை மாருதி மேல்வரு சேனை. 23

பந்தென வாடிய பாய்பரி யெல்லாஞ்
சிந்தையின் முந்தின தேர்கள் செறிந்த
அந்தியின் மேனிய வானைக ளெல்லாம்
வந்தன மண்ணை யடித்துகள் மாய்ப்ப. 24

சங்குகள் தாரைகள் சச்சரி சின்னம்
எங்கு மியம்பின பேரி யிடித்த
வெங்குர விற்பறை விண்ணி னிறைந்த
பொங்கி யரக்கர் பொருக்கென வந்தார். 25

பார்த்தன பார்த்தன பாய்பரி யெங்குந்
தேர்த்திரள் தேர்த்திர ளேதிசை யெங்கும்
கார்த்திரள் மேனியி னிற்கய மெங்கு
மார்த்தனர் மண்டும ரக்கர்க ளெங்கும். 26

நுகம்படு தேரவை நூறிரு கோடி
யுகம்பிறி தொன்றுவந் துற்றது வென்ன
அகம்படு வாயி லரக்கர்க ளென்ன
வகம்படி வீரர்க ளையிரு வெள்ளம். 27

வெள்ளமோர் நூறுடை விற்படை யென்பர்
துள்ளிய வாட்படை சொல்லிட வொண்ணு
பொள்ள றருங்கரப் பூட்கையு மஃதே
கள்ள வரக்கனைச் சுற்றினர் காப்பார். 28

ஆய பெரும்படை செல்வது கண்டு
மாய மிகுந்திறல் வானர வீரன்
நாயக னைத்திசை நோக்கி வணங்கி
மேயதொ ரின்பம விளங்கிட நின்றான். 29

ஆழி யனுனை யரக்கர் பெரும்படை
யேழுல கும்மிட மில்லென வீண்டிச்
சூழ வெழுந்தனர் தோன்றினர் தம்மைக்
கோழியி னுக்கிய கூவிடு கின்றான். 30

மாருதி கூறி மகிழ்ந்தன னாகிக்
கூரிய புந்தியிற் கோனைக் குறிக்கொடு
காரண மேனி யரக்கர்கள் காணு
வாரிக ளோடு மடுத்தன வாளி. 31

தூளி மிடைந்துரு தோன்றல வாகி
யாளி யனுனை யறிந்தில னாகிச்
சூளுற நோக்கினன் சோதனை பெற்றான்
கோனை யமர்ந்தனன் கூறுதல் செய்தான். 32

இந்திரன் முன்பு மிடுந்திரள் சோதி
சந்திர வெண்குடை தானெதிர் கண்டா
னந்தமில் கேள்விய னனைகள் காணுச்
சிந்தை யுவந்து சிரித்துட னின்றான். 33

சிந்தை யுவந்தவ னாகிய தீயோன்
முந்தி யெழுந்து முனிந்தமை நோக்கி
வெந்திற லாய்விரை வின்வரு கென்று
னிந்திர சித்திவ னென்ப திசைத்தான். 34

என்றவன் மாற்ற மியம்புதல் கேட்டு
வென்றி மிகுந்திறல் வானர வீரன்
நன்றிது நன்றிது வென்னந யந்தான்
சென்றனை வுற்றத ரக்கர்கள் சேனை 35

ஊழி யெழுந்துல கத்தை யொடுக்க
வாழியல் தானை யரக்கர்க டங்க
வேழுல கும்மிட மில்லை யெனும்படி
யாழி கிளர்ந்தன வென்ன வளைத்தான். 36

உடைந்தவ லிருணோற் றுப்ப லுருக்கொடக் கதிர்க்கு ழாங்கள்
மிடைந்தன மிலைச்சி யாங்கு மெய்யணி பலவு மின்னக்
குடைந்துவெம் பகைவ ரூன்றோய் கொற்றப்போர் வாள்வில் வீச
அடைந்தகா ரரக்கர் தானை யகலிட மிடமின் றென்ன. 37

ஆழியந் தேரு மாவு மரக்கரு முருக்குஞ் செங்கட்
சூழிவெங் கோப மாவுந் துவன்றிய நிருதர் சேனை
ஊழிவெங் கடலிற் சுற்ற வொருதனி நடுவ ணின்ற
பாழிமா மேரு வொத்தான் வீரத்தின் பான்மை தீர்த்தான். 38

சென்றன னென்ப மன்றோ திசைகளோ டுலக மெல்லாம்
வென்றவ னிவனென் றுலும் வீரத்தே நின்ற வீரன்
அன்றது கண்ட வாழி யநுமனு மமரி னாற்றல்
நன்றென வுவகை கொண்டான் யாவரு நடுக்கங் கொண்டார்.

இலைகுலாம் பூணி னனைவ் விரும்பிணக் குருதி யேற்ற
வலகில்வெம் படைக டெற்றி யளவிடற் கரிய தாகி
மலைகளுங் கடலும் யாறுங் கானமும் பெற்று மற்றோர்
உலகமே யொத்த தம்மா போர்ப்பெருங் களமென் றன்றே. 40

வெப்படை கில்லாநெஞ்சிற் பெரியதோர் விம்மல் கொண்டான்
அப்படை வேலை யன்ன பெருமையா ராற்ற லோடும்
ஒப்படை கில்லா ரெல்லா முலந்தனர் குரங்கு மொன்றே
எப்படை கொண்டு வெல்வ திராமன்வந் தெதிர்க்கி னென்றான்.

தண்ணிறு ருயிரை யொப்பார் கைப்படை கருத்தின் மிக்கார்
எண்ணலாந் தகைய ரல்லா ரிறந்தெதிர் கிடந்தார் தம்மை
மண்ணுளே நோக்கி நோக்கி வாய்மடித் துருத்தான் மாயாப்
புண்ணுளே கோலிட் டன்ன மானத்தாற் புழுங்கு கின்றான். 42

கானிடை யத்தைக் குற்ற குற்றமுங் கரனார் பாடும்
யானுடை யெம்பி வீந்த விடுக்கணும் பிறவு மெல்லாம்
மானிட ரிருவ ராலும் வானர மொன்றி னாலும்
ஆனிடத் துளவென் வீர மழகிற்றே யம்ம வென்றான். 43

தீப்புண்ட வுயிர ராகி நெருப்புண்ட நிறத்திற் றோன்றி
ஈப்புண்டற் கரிய வாய பிணக்குவ டிடறச் செல்வான்
தேய்ப்புண்ட தம்பி யாக்கை சிவப்புண்ட கண்க டையில் [டான்.
காய்ப்புண்ட செம்பிற் றோன்றக் கறுப்புண்ட மனத்தன் கண்

தாருகன் குருதி யன்ன குருதியிற் றனிமாச் சீயம்
கூருகி ரளைந்த கொற்றக் கனகன்மெய்க் குழம்பிற் றோன்றத்
தேருகக் கையின் வீரச் சிலையுக வயிரச் செங்கண்
நீருகக் குருதி சிந்த நெருப்புக வுயிர்த்து நின்றான். 45

வெவ்விலை யயில்வே லுந்தை வெம்மையைக் கருதி வீர
வவ்வுதல் கூற்று மாற்றான் மாறுமா றுலகின் வாழ்வார்
அவ்வுல கத்து ளோரே லஞ்சுவ ரொளிக்க வையா
எவ்வுல கத்தை யுற்று யெம்மைநீத் தெளிதி னெந்தாய். 46

ஆற்றல ஞகி யன்பா லறிவழிந் தயரும் வேலை
சீற்றமென் ருென்று தானே மேனிமிர் செலவிற் ருகித்
தோற்றிய துன்ப நோயை யுள்ளுறத் துரந்த தம்மா
ஏற்றஞ்சா லாணி யாணிக் கெதிர்செலக் கடாய தென்ன. 47

ஈண்டிது நிகழ்வுழி யிரவி தேரெனத்
தூண்டுறு தேரின்மேற் ருேன்றுந் தோன்றலை
மூண்டுமுப் புரன்சுட மூடுகு மீசனின்
ஆண்டகை வினைகழ லநும ஞெக்கிஞன். 48

வென்றே னிதன்முன் சிலவீரரை யென்னும் வெம்மை
அன்றே முடுகிக் கடிதெய்த வழைத்த தம்மா
ஒன்றே யினிவெல்லுத ருேற்ற லடுப்ப துள்ளத்
தின்றே யமையு மிவனிந்திர சித்து வென்பான். 49

கட்டேறு நறுங்கமழ் கண்ணியிக் காளை யென்கைப்
பட்டா லதுவே யவிராவணன் பாடு மாகும்
கெட்டோ மெனவெண்ணியக் கேடருங் கற்பி ஞளை
விட்டேகும தன்றி யரக்கரும் வெம்மை தீர்வார். 50

ஒன்ருே விவஞன்வரு மூதிய மொண்மை யானைக்
கொன்றே னெனினிங் திரனுந்துயர்க் கோளு நீங்கும்
இன்றே குடிகெட்ட தரக்க ரிலங்கை மூதூர்
வென்றே னவிராவணன் றன்னையும் வேரொ டென்ருன். 51

அக்காலை யரக்கரு மானையுந் தேரு மாவும்
முக்கா லுலகம்மொரு மூன்றையும் வென்று முற்றிப்
புக்கானின் முன்புக் குயர்பூசல் பெருக்கும் வேலை
மிக்கானும் வெகுண்டோர் மராமரங் கொண்டு புக்கான். 52

உதையுண்டன யானை யுருண்டன யானை யொன்றோ
மிதியுண்டன யானை விழுந்தன யானை மேன்மேல்
புதையுண்டன யானை புரண்டன யானை போரில்
வதையுண்டன யானை மறிந்தன யானை மண்மேல். 53

முடிந்த தேர்க்குல முறிந்தன தேர்க்குல முரணிற்
றிடிந்த தேர்க்குல மிற்றன தேர்க்குல மச்சிற்
றொடிந்த தேர்க்குல மூக்கன தேர்க்குல நெக்குப்
படிந்த தேர்க்குலம் பறிந்தன தேர்க்குலம் படியின். 54

சிரனெ ரிந்தவுங் கண்மணி சிதைந்தவுஞ் செறிதாட்
டரனெ ரிந்தவு முதுகிறச் சாய்ந்தவுந் தார்ப்பூண்
உரனெ ரிந்தவு முதிரங்க ளுமிழ்ந்தவு மொண்பொற்
குரனெ ரிந்தவுங் கொழுங்கழுத் தொடிந்தவுங் குதிரை. 55

பிடியுண் டார்களும் பிளத்தலுண் டார்களும் பெருந்தோள்
ஒடியுண் டார்களுந் தலையுடைந் தார்களு முருவங்
கடியுண் டார்களுங் கழுத்திழந் தார்களு மரத்தால்
அடியுண் டார்களு மச்சமுண் டார்களு மரக்கர். 56

வட்ட வெஞ்சிலை யோட்டிய வாளியும் வயவர்
விட்ட விட்டவெம் படைகளும் வீரன்மேல் வீழ்ந்த
சுட்ட வல்விரும் படைகலைச் சுடுகலா ததுபோல்
பட்ட பட்டன திசைதொறும் பொறியொடும் பரந்த. 57

சிகையெ ழுஞ்சுடர் வாளிக ளிந்திர சித்து
மிகையெ ழுஞ்சினத் தநுமன்மேல் விட்டன வெந்து
புகையெ ழுந்தன வெரிந்தன கரிந்தன போத
நகையெ ழுந்தன வழிந்தன வானுளோர் நாட்டம். 58

தேரும் யானையும் புரவியு மரக்கருஞ் சிந்திப்
பாரின் வீழ்தலுந் தானொரு தனிநின்ற பனைத்தோள்
வீரர் வீரனு முறுவலும் வெகுளியும் விளங்க
வாரும் வாருமென் றழைக்கின்ற வநுமன்மேல் வந்தான். 59

புரந்த ரன்றலை பொதிரெறிந் திடப்புயல் வானில்
பரந்த பல்லுரு மேற்றினம் வெறித்துயர் பதைப்ப
நிரந்த ரம்புவி முழுவதுஞ் சுமந்தநீ டுரகன்
சிரந்து ளங்கிட வரக்கன்வெஞ் சிலையைநா ணெறிந்தான். 60

ஆண்ட நாயகன் றூதனு மயனுடை யண்டம்
கீண்ட தாமெனக் கிரியுக நெடுநிலங் கிழிய
நீண்ட மாதிரம் வெடிபட வவனெடுஞ் சிலையில்
பூண்ட நாணிறத் தன்னெடுந் தோள்புடைத் தார்த்தான். 61

நல்லை நல்லையிஞ் ஞாலத்து ணின்னொக்கு நல்லார்
இல்லை யில்லையா லெறுழ்வலிக் கியாரொடு மிகல
வல்லை வல்லையின் முருநீ படைத்துடை வாழ்நாட்
கெல்லை யெல்லையென் றிந்திர சித்துவு மிசைத்தான். 62

நாளுக் கெல்லையு நிருதரா யுலகத்தை நலியும்
கோளுக் கெல்லையுங் கொடுந்தொழிற் கெல்லையுங் கொடியீர்
வாளுக் கெல்லையும் வந்தன வகைகொண்டு வந்தேன்
தோளுக் கெல்லையொன் றில்லையென் றநுமனுஞ் சொன்னான்.

இச்சி ரத்தையைத் தொலைப்பனென் றிந்திரன் பகைஞன்
பச்சி ரத்தம்வந் தொழுகிட வானவர் பதைப்ப
வச்சி ரத்ினும் வலியன வயிரவான் கணைகள்
அச்சி ரத்தினு மார்பினு மழுத்தலு மநுமன். 64

குறிது வாவென்று குறித்திலன் கொடுஞ்சினங் கொண்டான்
மறியும் வெண்டிரை மாகட லுலகெலாம் வழங்கிச்
சிறிய தாய்சொன்ன திருமொழி சென்னியிற் சூடி
நெறியி னின்றநன் றுயகன் புகழெனா நிமிர்ந்தான். 65

பாக மல்லது கண்டில னநுமனைப் பார்த்தான்
மாக வன்றிசை பத்தொடும் வரம்பிலா வுலகிற்
கேக நாதனை யெறுழ்வலித் தோள்பிணித் தீர்த்த
மேக நாதனு மயங்கின னமெனா வியந்தான். 66

நீண்ட வீரனு நெடுந்தடக் கைகளை நீட்டி
ஈண்டு வெஞ்சர மெய்தன வெய்திடா வண்ணம்
மீண்டு போய்விழ வீசியங் கவன்மிடற் றடந்தேர்
பூண்ட பேயொடு சாரதி தரைப்படப் புடைத்தான். 67

ஊழிக் காற்றன்ன வொருபரித் தேரவ னுதவப்
பாழித் தோளவ னத்தடந் தேர்மிசைப் பாய்ந்தான்
ஆழிப் பல்படை யனையன வளப்பருஞ் சரத்தால்
வாழிப் போர்வலி மாருதி மேனியை மறைத்தான். 68

உற்ற வாளிக ளுரத்தடங் கினவுக வுதறுக்
கொற்ற மாருதி யனையவன் றேர்மிசைக் குதித்தான்
பற்றி வன்கையாற் பறித்தெழுந் துலகெலாம் பலகால்
முற்ற வென்றபோர் மூரிவெஞ் சிலையினை முறித்தான். 69

முறிந்த வில்லின்வல் லோசைபோய் முடிவதன் முன்னம்
மறிந்து போரிடை வழிக்கொள்வான் வயிரவாட் படையால்
செறிந்த வான்பெருஞ் சிறையற மலைகளைச் செயிரா
எறிந்த விந்திர னிட்டவான் சிலையினை யெடுத்தான். 70

நூறு நூறுபோர் வாளியோர் தொடைகொண்டு நொய்தின்
மாறில் வெஞ்சினத் திராவணன் மகன்சிலை வளைத்தான்
ஊறு தன்னெடு மேனியிற் பலபட வொல்கி
ஏறு சேவகன் றூதனுஞ் சிறிதுபோ திருந்தான். 71

ஆர்த்த வானவ ராகுலங் கண்டறி வழிந்தார்
பார்த்த மாருதி தாருவொன் றங்கையாற் பற்றித்
தூர்த்த வாளிகள் துணிபட முறைமுறை சுழற்றிப்
போர்த்த பொன்னெடு மணிமுடித் தடத்திடைப் புடைத்தான்.

பார மாமர முடியுடைத் தலையிடைப் படலும்
தாரை யின்னெடுங் கற்றைகள் சுற்றின தயங்க
ஆர மால்வரை யருவியின் வழிகொழுங் குருதி
சோர நின்றுளந் துளங்கின னமரரைத் தொலைத்தான். 73

நின்று போதம்வந் துறுதலு நிறைபிறை யெயிற்றைத்
தின்று தேவரு மவுணரு முனிவருந் திகைப்பக்
குன்று போனெடு மாருதி யாகமுங் குலுங்க
ஒன்று போல்வன வாயிரம் பகழிகோத் துய்த்தான். 74

உய்த்த வெஞ்சர முரத்தினுங் கரத்தினு மொளிப்பக்
கைத்த சிந்தையன் மாருதி யதிகமுங் கனன்றான்
வித்த கன்சிலை விடுகணை விசையினுங் கடுகி
அத்த டம்பெருந் தேரொடு மெடுத்தெறிந் தார்த்தான். 75

கண்ணின் மீச்சென்ற விமையிடைக் கலப்பதன் முன்னம்
எண்ணின் மீச்சென்ற வெறுழ்வலித் திறலுடை யிகலோன்
புண்ணின் மீச்சென்ற பொழிபுலால் பசும்புனல் பொறிப்ப
விண்ணின் மீச்சென்ற தேரொடும் பார்மிசை விழுந்தான். 76

விழுந்து பாரடை யாமுன மின்னன மெய்யான்
எழுந்து மாவிசும் பெய்தின னிடையவன் படையில்
செழுந்தண் மா்மணித் தேர்க்குலம் யாவையுஞ் சிதைய
உழுந்து பேர்வதன் முன்னெடு மாருதி யுதைத்தான். 77

ஏறு தேறில னெதிர்நிற்கு முரனில னெரியிற்
சீறு வெஞ்சினந் திருகின னந்தரந் திரிவான்
வேறு செய்வதோர் வினைபிறி தின்மையின் விரிஞ்சன்
மாறி லாப்பெரும் படைக்கலந் தொடுப்பதா மதித்தான். 78

பூவும் பூநிற வயினியுந் தீபமும் புகையும்
தாவில் பாவனை யாற்கொடுத் தருச்சனை சமைத்தான்
தேவி யாவையு முலகமுந் திருத்திய தெய்வக்
கோவி னுன்முகன் படைக்கலந் தடக்கையிற் கொண்டான். 79

கொண்டு கொற்றவெஞ் சிலைநெடு நாணொடுங் கூட்டிச்
சண்ட வேகத்த மாருதி தோளொடுஞ் சார்த்தி
மண்டு ளங்கிட மாதிரந் துளங்கிட மதிதோய்
விண்டு ளங்கிட மேருவுந் துளங்கிட விட்டான். 80

தணிப்ப ரும்பெரும் படைக்கலந் தழலுமிழ் தறுகட்
பணிக்கு லங்களுக் கரசின துருவினைப் பற்றித்
துணிக்க வுற்றுயர் கலுழனுந் துணுக்குறச் சுற்றிப்
பிணித்த தப்பெரு மாருதி தோள்களைப் பிறங்க. 81

திண்ணென் யாக்கையைத் திசைமுகன் படைசென்று திருக
அண்ணன் மாருதி யன்றுதன் பின்சென்ற வறத்தின்
கண்ணி னீரொடுங் கனகதோ ரணத்தொடுங் கடைநாள்
தண்ணென் மாமதி கோளொடுஞ் சாய்ந்தெனச் சாய்ந்தான்.82

சாய்ந்த மாருதி சதுமுகன் படையெனுந் தன்மை
ஆய்ந்து மற்றித ஞானையை யவமதித் தகறல்
ஏய்ந்த தன்றென வெண்ணினன் கண்முகுழ்த் திருந்தான்
ஓய்ந்த தாலிவன் வலியென வரக்கன்வந் துற்றான். 83

உற்ற காலையி னுயிர்கொண்டு திசைதொறு மொதுங்கி
அற்ற நோக்கினர் நிற்கின்ற வாளெயிற் றரக்கர்
சுற்றும் வந்துடல் சுற்றிய தொளையெயிற் றரவைப்
பற்றி யீர்த்தனர் தெழித்தன ரார்த்தனர் பலரால். 84

குரக்கு நல்வலங் குலைந்ததென் றுவலங் கொட்டி
இரைக்கு மாநக ரெறிகட லொத்ததெம் மருங்கும்
திரைக்கு மாசுணம் வாசுகி யொத்தது தேவர்
அரக்க ரொத்தனர் மந்தர மொத்தன னநுமன். 85

கறுத்த மாசுணங் கனகமா மேனியைப் பற்ற
அறத்துக் காங்கொரு தனித்துணை யெனநின்ற வநுமன்
மறத்து மாருதம் பொருதநாள் வாசுசி யென்பான்
புறத்துச் சுற்றிய மேருமால் வரையையும் போன்றான். 86

வந்தி ரைத்தனர் மைந்தரு மகளிரு மழைபோல்
அந்த ரத்தினும் விசும்பினுந் திசைதொறு மார்ப்பார்
முந்தி யுற்றபே ருவகைக்கோர் கரையிலை மொழியில்
இந்தி ரன்பிணிப் புண்டநா ளொத்ததவ் விலங்கை. 87





## பிணிவிடுபடலம்.

எய்யுமி னீருமின் னெறிமின் போழுமின்
கொய்யுமின் குடர்களைக் கூறு கூறுகள்
செய்யுமி னுலகிடைத் தேய்மின் றின்னுமின்
உய்யுமே லில்லைநம் முயிரென் றோதுவார். 1

நச்சுடைப் படைகளா னலியு மீட்டதோ
வச்சிர முடன்மறி கடலின் வாய்மடுத்
துச்சுமி னுச்சுமி னுருத்த தோள்களிற்
கிச்சினை யிடுமெனக் கிளத்தி னார்சிலர். 2

மைத்தடங் கண்ணியர் மைந்தர் யாவரும்
பைத்தலை யரவெனக் கனன்று பையலை
இத்தனை பொழுதுகொண் டிருப்ப தோவெனு
மொய்த்தனர் கொலைசெய முயல்கின் றார்சிலர். 3

எந்தையை யெம்பியை யெம்மு னோர்களைத்
தந்தனை போகெனத் தடுக்கின் றார்பலர்
அந்தரத் தமரர்த மாணை யாலிவன்
வந்ததென் றுயிர்கொள மறுகி னார்பலர். 4

ஓங்கலம் பெருவலி யுயிரி னன்பனை
நீங்கல மின்றொடு நீங்கி னுமினி
யாங்களு மிவன்சிர மிற்ற லாற்றிரு
வாங்கல மென்றழு மாத ரார்பலர். 5

கொண்டன ரெதிர்செலுங் கொற்ற மாநகர்
அண்டமுற் றதுநெடி தார்க்கு மார்ப்பது
கண்டமற் றுளவருங் கணவர்க் கேங்கிய
குண்டல முகத்தியர்க் கோகை கூரவே. 6

வடியுடைக் கனற்படை வயவர் மால்கரி
கொடியுடைத் தேர்பரி கொண்டு வீசலின்
இடிபடச் சிதைந்தமால் வரையி னில்லெலாம்
பொடிபடக் கிடந்தன கண்டு போயினர். 7

முயிறலைத் தெழுமுது மரத்தின் மொய்ம்புதேரள்
கயிறலைப் புண்டது கண்டு காண்கிலா
தெயிறலைத் தெழுமித ழரக்க ரேழையர்
வயிறலைத் திரியலின் மயங்கி னர்பலர். 8

ஆர்ப்புற வஞ்சின ரடங்கி னர்பலர்
போர்ப்புறச் செயலினைப் புகல்கின் றர்சிலர்
பார்ப்புறப் பார்ப்புறப் பயத்தி னுற்பதைத்
தூர்ப்புறத் திரியலுற் றோடு வார்பலர். 9

காந்துகட் டழலெயிற் றரவின் கட்டொரு
பூந்துண ரசைத்தெனப் பொலியும் வாண்முகம்
தேர்ந்துறு பொருள்பெற வெண்ணிச் செய்யுமின்
வேந்துறல் பழுதென விளம்பு வார்சிலர். 10

திண்டிற லரக்கர்தஞ் செருக்குச் சிந்துவான்
தண்டலி றன்னுருக் கரந்த தன்மையான்
மண்டமர் தொடங்கிய வான ரத்துருக்
கொண்டன னந்தகன் கொல்லென் பார்பலர். 11

கயிலையி னொருதனிக் கணிச்சி வானவன்
மயிலியற் சீதைதன் கற்பின் மாட்சியான்
எயிலுடைத் திருநகர் சிதைப்ப வெய்தினன்
அயிலெயிற் றொருகுரங் காயென் பார்பலர். 12

ஒளிவரு நாகத்துக் கொல்கி வண்மையால்
எளிதர வன்றுதன் னெண்ணம் வேறெனக்
களிவரு சிந்தையாற் காத்தி யெங்களைச்
சுளியலை யாமெனத் தொழுகின் றார்சிலர். 13

நீரிடைக் கண்டுயி னெடிய நேமியும்
தாருடைத் தனிமல ருலகின் றாதையும்
ஓருடற் கொண்டுதம் முருவ மாற்றினர்
பாரிடைப் புகுந்தனர் பகைத்தென் பார்பலர். 14

பைங்கழ லநுமனைப் பிணித்த பாந்தளை
யிங்கிதத் தொருபுடை பற்றி யீர்க்கின்றார்
ஐம்பதி னுயிர மரக்க ராண்டொழின்
மொய்ம்பினி னெறுழ்வலிக் கலுழன் மும்மையார். 15

அரமியத் தலந்தொறு மம்பொன் மாளிகைத்
தரமுறு நிலைதொறுஞ் சாள ரந்தொறும்
முரசெறி கடைதொறு மிரைத்து மொய்த்தனர்
நிரைவளை மகளிரு நிருதர் மைந்தரும். 16

அரம்பையர் விஞ்சைநாட் டளக வல்லியர்
நரம்பினு மினியசொ லுக நாடியர்
கரும்பியல் சித்திய ரியக்கர் கன்னியர்
வரம்பறு சும்மையர் தலைம யங்கினர். 17

அரக்கரு மரக்கியர் குழாமு மல்லவர்
கரக்கிலர் நெடுமழைக் கண்ணி னீரது
விரைக்குழற் சீதைதன் மெலிவு நோக்கியோ
இரக்கமோ வறத்தின தெளிமை யேகொலோ. 18

ஆண்டொழி லநுமனு மவரொ டேகினன்
மீண்டிலன் மீறலும் விரும்ப லூற்றிலன்
ஈண்டிது வேதொடர்ந் திலங்கை வேந்தனைக்
காண்டலே நலனெனக் கருத்தி னெண்ணினன். 19

எந்தைய தருளினு மிராமன் சேவடி
சிந்தைசெய் நலத்தினுந் தேவ ரீந்தன
முந்துள வரத்தினும் பாசம் முற்றுறச்
சிந்துவெ னயர்வுறு சிந்தை சீரிதால். 20

வளையெயிற் றரக்கனை யுற்று மந்திரத்
தளவுறு முதியரு மறிய வாணையால்
விளைவினை விளம்பினன் மிதிலை நாடியை
இளகின னென்வயி னீத லேயுமால். 21

அல்லது மவனுடைத் துணைவ ராயினர்க்
கெல்லையுந் தெரிவுறு மெண்ணுந் தேறலாம்
வல்லவ னிலைமையு மனமுந் தேறலாம்
சொல்லுவன் முகமனத் தூய சொல்லினே. 22

வாலிதன் னிறுதியு மாத்துக் குற்றதும்
கூலவெஞ் சேனையின் குணிப்பி லாமையும்
மேலவன் காதலன் வலியு மேன்மையும்
நீனிறத் திராவண னெஞ்சிற் றைக்குமால். 23

ஆதலா னரக்கனை யெய்தி யாற்றலின்
நீதியன் மகனுயிர் குடித்த செவ்வியின்
பாதியின் மேற்செல னூறிப் பைப்பையப்
போதலே கருமமென் றநுமன் போயினான். 24

கடவுளர்க் கரசனைக் கடந்த தோன்றலும்
புடைவரும் பெரும்படைப் புணரி போர்த்தெழ
விடைபிணிப் புண்டது போலும் வீரனைக்
குடைகெழு மன்னனிற் கொண்டு போயினான். 25

தூதுவ ரோடினர் தொழுது தொல்லைநாள்
மாதிரங் கடந்தவற் குறுகி மன்னநின்
காதலன் செருவினிற் கடவு ளாமெனப்
பேதியா வானரம் பிடித்திட்டா னென்றார். 26

கேட்டலுங் கிளர்சுடர் கெட்ட வாளென
வீட்டிருள் விழுங்கிய மார்பன் யானையின்
கோட்டெதிர் பொருதபே ராரங் கொண்டெதிர்
நீட்டின னுவகையி னிமிர்ந்த நெஞ்சினான். 27

எல்லையி லுவகையா லிவர்ந்த தோளினன்
புல்லுற மலர்ந்தகட் குமுதப் பூவினன்
ஒல்லையி னோடினீ ருரைத்தென் னாணையால்
கொல்லலிர் தருகெனக் கூறுவீ ரென்றான். 28

அவ்வுரை தூதரு மாணை யால்வரும்
தெவ்வுரை நீக்கின னறியச் செப்பினார்
இவ்வுரை நிகழ்வுழி யிருந்த சீதையாம்
வெவ்வுரை நீங்கின ணிலைவி ளம்புவாம். 29

இறத்தனன் கடிபொழி லெண்ணி லோர்பட
ஒறுத்தன னென்றுகொண் டுவக்கின் றுளுயிர்
வெறுத்தனன் சோர்வுற வீரற் குற்றதைக்
கறுத்தலில் சிந்தையாள் கவன்று கூறுவாள். 30

ஓவி யம்புகை யுண்டது போலொளிர்
பூவின் மெல்லியன் மேனி பொடியுறப்
பாவி வேடன்கைப் பார்ப்புறப் பேதுறும்
தூவி யன்னமன் னாளிவை சொல்லினாள். 31

உற்றுண் டாய விசும்பை யுருவினாய்
முற்றுண் டாய்கலை யாவையு முற்றுறக்
கற்றுண் டாயொரு கள்ள வரக்கனால்
பற்றுண் டாயிது வோவறப் பான்மையே. 32

கடல்க டந்து புகுந்தனை கண்டகர்
உடல்க டந்துநின் னூழி கடந்திலை
அடல்க டந்த திரள்புயத் தையநீ
இடர்க டந்தனை வந்திடர் மேலுமே. 33

ஆழி காட்டியென் னாருயிர் காட்டினாய்க்
கூழி காட்டுவ னென்றுரைத் தேனது
வாழி காட்டுமொன் றுண்டுன் வரைப்புயப்
பூழி காட்டி யரும்பழி பூட்டினாய். 34

கண்டு போயினை நீநெறி காட்டிட
மண்டு போரி னரக்கரை மாய்த்தெனைக்
கொண்டு மானவன் போமெனுங் கொள்கையைத்
தண்டி னுயெனக் காருயிர் தந்தநீ. 35

எயப் பன்னி யமுதனை ளின்னுயிர்
தேயக் கன்று பிடியுணத் தீங்குறு
தாயைப் போலத் தளர்ந்து மயங்கினாள்
தீயைச் சுட்டதோர் கற்பெனுந் தீயினாள். 36

பெருந்த கைப்பெரி யோனைப் பிணித்தவன்
உருந்த மற்றை யுலகொரு மூன்றையும்
அருந்த வப்பய னுலர சாள்கின்றான்
இருந்த கற்பகச் சோலைசென் றெய்தினான். 37

தலங்கண் மூன்றிற்கும் பிறிதொரு மதிதழைத் தென்ன
அலங்கல் வெண்குடை கண்குடை யவிரொளி பரப்ப
வலங்கொ டோளினான் மண்ணின்று வானுற வெடுத்த
பொலங்கொண் மாமணி வெள்ளியங் குன்றெனப் பொலிய. 38

புள்ளு யர்த்தவன் றிகிரியும் புரந்தர னயிலும்
தள்ளின் முக்கணான் கணிச்சியிற் றாக்கிய தழும்பும்
கள்ளு யிர்க்குமென் குழலியர் முகிழ்விரற் கதிர்வாள்
வள்ளு கிர்ப்பெருங் குறிகளும் புயங்களின் வயங்க. 39

துன்று செம்மயிர்ச் சுடர்நெடுங் கற்றைகள் சுற்ற
நின்று திக்குற்று நிறைதரக் கதிர்க்குழா நிமிர
ஒன்று சீற்றத்தி னுயிர்ப்பெனும் பெரும்புகை யுயரத்
தென்றி சைக்குமோர் வடவனை திருத்திய தென்ன. 40

மாக நக்கொழுங் கதிரொடு மாணிக்க நெடுவாள்
நாக தேயத்து ண்டுக்குழு விருளையு நக்கச்
சிரம னைத்தையுந் திசைதொறுந் திசைதொறுஞ் செலுத்தி
உரகர் கோனினி தரசுவீற் றிருந்தன னொப்ப. 41

குவித்த பன்மணிக் குப்பைகள் கலையொடுங் கொழிப்பச்
சவிச்சு டர்க்கன லவிந்தபோ லானனந் தயங்கப்
புவித்த டம்படர் மேருவைப் பொன்முடி யென்னக்
கவித்து மாவிருங் கருங்கட லிருந்தது கடுப்ப. 42

சிந்து ராகத்தின் செறிதுகிற் கச்சொடுஞ் செறியப்
பந்தி வெண்முத்தி னணிகலன் முழுநிலாப் பரப்ப
இந்து வெண்குடை நீழலிற் றுரகை யினம்பூண்
டந்தி வானுடுத் தல்லுவீற் றிருந்ததா மென்ன. 43

வண்மைக் குந்திரு மறைகட்கும் வானினும் பெரிய
திண்மைக் குந்தனி யுறையுளா முழுமுகந் திசையின்
கண்வைக் குந்தொறுங் களிற்றொடு மாதிரங் காக்கும்
எண்மர்க் கும்மற்றை யிருவர்க்கும் பெரும்பய மியற்ற. 44

ஏக நாயகன் றேவியை யெதிர்ந்ததற் பின்பு
நாகர் வாழ்விட முதலென நான்முகன் வைகும்
மாக மால்விசும் பீறென நடுவுள்ள வரைப்பில்
தோகை மாதர்கண் மைந்தரிற் றேன்றினர் சுற்ற. 45

வான ரங்களும் வானவ ரிருவரு மனிதர்
ஆன புன்றொழி லோரென விகழ்கின்ற வவரும்
ஏனை நின்றவ ரிருடிகள் சிலரொழிந் தியாரும்
தூந வின்றவே லரக்கர்தங் குழுவொடுஞ் சுற்ற. 46

நரம்பு கண்ணகத் துள்ளுறை நறையிசைப் பாண்டில்
நிரம்பு சில்லரிப் பாணியுங் குறடுநின் றிசைப்ப
அரம்பை மங்கைய ரமிர்துகுத் தாலன்ன பாடல்
வரம்பி லின்னிசை செவிதொறுஞ் செவிதொறும் வயங்க. 47

கூடு பாணியி னிசையொடு முழவொடுங் கூடத்
தோடு சீரடி விழிமனங் கையொடுந் தொடரும்
ஆட லேனுக்குறி னருந்தவ முனிவர்க்கு மமைந்த
வீடு மீட்குறு மேனகை மேனகை விளங்க. 48

ஊடி னார்முகத் துறுநறை யொருமுக முண்ணக்
கூடி னார்முகக் களிநறை யொருமுகங் குடிப்பப்
பாடி னார்முகத் தாரமு தொருமுகம் பருக
ஆடி னார்முகத் தணியமு தொருமுக மருந்த. 49

தேவ ரோடிருந் தரசிய லொருமுகஞ் செலுத்த
மூவ ரோடுமா மந்திர மொருமுக முயலப்
பாவ காரிதன் பாவக மொருமுகம் பயிலப்
பூவை சானகி யுருவெளி யொருமுகம் பொருந்த. 50

காந்தள் மெல்விரற் சனகிதன் கற்பெனுங் கடலை
நீந்தி யேறுவ தென்றென வொருமுக நினையச்
சாந்த ளாவிய வனமுலை மகளிர்தற் சூழ்ந்தார்
ஏந்து மாடியி னொருமுக மெழிலினை நோக்க. 51

பொதும்பர் வைகுதேன் புக்கருந் துதற்ககம் புலரும்
மதம்பெய் வண்டெனச் சனகிபான் மனஞ்செல மறுகி
வெதும்பு வாரகம் வெந்தழி வார்விழி முழுநீர்
ததும்பு வார்விழித் தாரைவே றேடொறுந் தாக்க. 52

மாற ளாவிய மகரந்த நறையுண்டு மகளிர்
வீற ளாவிய முகுண்முலை மெழுகிய சாந்தின்
சேற ளாவிய சிறுநறுஞ் சீதளத் தென்றல்
ஊற ளாவிய கடுவென வுடலிடை நுழைய. 53

திங்கள் வாண்முக மடந்தையர் சேயரிக் கிடந்த
அங்க யத்தடந் தாமரைக் கலரியோ னாகி
வெங்கண் வானவர் தானவ ரென்றிவர் விரியாப்
பொங்கு கைக்கடற் றாமரைக் கிந்துவே போன்று. 54

இருந்த வெண்டிசைக் கிழவனை மாருதி யெதிர்ந்தான்
கருந்தி ணாகத்தை நோக்கிய கலுழனிற் கனன்றான்
திருந்து தோளிடை வீக்கிய வுரகத்தைச் சிந்தி
உருந்து நஞ்சுபோ லவன்வயிற் பாய்வனென் றுருத்தான். 55

உறங்கு கின்றபோ துயிருண்டல் குற்றமென் றொழிந்தேன்
பிறங்கு பொன்மணி யாசனத் திருக்கவும் பெற்றேன்
திறங்க ளென்பல சிந்திப்ப திவன்றலை சிந்தி
அறங்கொள் கொம்பினை மீட்டுடன் போவனென் றமைந்தான்.

தேவர் தானவர் முதலினர் சேவகன் றேவி
காவல் கண்டிவ ணிருந்தவர் கட்புலன் கதுவப்
பாவ காரிதன் முடித்தலை பறித்தில னென்றால்
ஏவ தாமினி மேற்செயு மாள்வினை யென்றான். 57

மாடி ருந்தமற் றிவன்புணர் மங்கையர் மறுகி
ஊடி ரிந்திட முடித்தலை திசைதொறு முருட்டி
ஆடல் கண்டுநின் றாடுத லதுநெடி தம்மா
தேடி வந்ததோர் குரங்கெனும் வாசகஞ் சிறிதோ. 58

நீண்ட வாளெயிற் றரக்கனைக் கண்களி னேரே
காண்டல் வேண்டியிவ் வுயிர்சுமந் தெதிர்சில கழறி
மீண்ட போதுண்டு வசைப்பொருள் வென்றிலே னெனினும்
மாண்ட போதினும் புகழன்றி மற்றுமொன் றுண்டோ. 59

என்று தோளிடை யிறுக்கிய பாசமிற் றேகக்
குன்றின் மேலெழு கோளரி யென்னவோர் குதியிற்
சென்று கூடுவ னென்பது சிந்தனை செய்யா
நின்று காரிய மன்றென நீதியி னினைந்தான். 60

கொல்லலாம் வரத்தனு மல்லன் கொற்றமும்
வெல்லலாந் தரத்தனு மல்லன் மேலைநாள்
அல்லெலாந் திரண்டன நிறத்த னற்றலை
வெல்லலா மிராமனுற் பிறரும் வெல்வரோ. 61

என்னையும் வெலற்கரி திவனுக் கீண்டிவன்
தன்னையும் வெலற்கரி தெனக்குந் தாக்கினால்
என்னவே காலங்க ளிறக்கு மாதலான்
துன்னரு மமர்த்தொழி றொடங்க றாய்தன்றால். 62

எழுபே ருலகங்கள் யாவு மின்புறப்
பாழிவன் புயங்களோ டரக்கன் பஃறலைப்
பூழியிற் புரட்டுவன் பூணிப் பர்மென
ஊழியான் விளம்பிய வுரையு மொன்றுண்டால். 63

இங்கொரு திங்களே யிருப்பல் யானென
எங்கணு யகன்றனி யானை யீந்துள
மங்கையு மன்னுயிர் துறத்தல் வாய்மையால்
பொங்குவெஞ் செருவிடைப் பொழுது போக்கினால். 64

ஆதலா னமர்த்தொழி லழுகிற் றன்றரூந்
தாதஞுந் தன்மையே தாய்தென் றன்னிஞன்
வேதநா யகன்றனித் தூணைவன் வென்றியால்
எதிவா னரக்கன திருக்கை யெய்திஞன். 65

தீட்டிய வாளெனத் தெறுகட் டேவியர்
ஈட்டிய குழுவிடை யிருந்த வேந்தற்குக்
காட்டின னநுமனைக் கடவி ஞாமு
தாட்டிய வும்பரை யுலைய வோட்டிஞன். 66

புவனமெத் தனையவை யனைத்தும் போர்கடந்
தவனையுற் றரியுரு வான வாண்டகை
சிவனெனச் செங்கண்மா லெனனச் செய்தவன்
இவனெனக் கூறிநின் றெதிரி றைஞ்சிஞன். 67

நோக்கிய கண்களா னுறிற்க னற்பொறி
தூக்கிய வநுமன்மெய் மயிர்சு றுக்கொளத்
தாக்கிய வுயிர்ப்பொடுந் தவழ்ந்த வெம்புகை
வீக்கின னவனுடல் விசித்த பாம்பினே. 68

அன்னதோர் வெகுளிய னமர ராதியர்
துன்னிய துன்னலர்த் துணுக்கஞ் சுற்றுற
என்னிவண் வரவுநீ யாரை யென்றவன்
தன்மையை விஞவிஞன் கூற்றின் றன்மையான். 69

நேமியோ குலிசியோ நெடுங்க ணிச்சியோ
தாமரைக் கிழவனோ தறுகட் பஃறலைப்
பூமிதாங் கொருவனோ பொருது முற்றுற
நாமமு முருவமுங் கரந்து நண்ணிஞய். 70

நின்றிசைத் துயிர்கவர் நீலக் காலனே
குன்றிசைத் தயிலுற வெறிந்த கொற்றனே
தென்றிசைக் கிழவனே திசைநின் ருட்சியர்
என்றிசைக் கின்றவர் யாருள் யாவனீ. 71

அந்தணர் வேள்வியி னுக்கி யானையின்
வந்துற விடுத்ததோர் வயவெம் பூதமோ
மூந்தொரு மலருளோ னிலங்கை முற்றுறச்
சிந்தெனத் திருத்திய திகிரித் தெய்வமோ. 72

ஆரைநீ யென்னையிங் கெய்து காரியம்
ஆருனை விடுத்தவ ரறிய வானையால்
சோர்விலை சொல்லுதி யென்னச் சொல்லினன்
வேரொடு நிருதர்தம் புகழ்வி ழுங்கினன். 73

சொல்லிய வனைவரு மல்லன் சொன்னவப்
புல்லிய வலியினே ரேவல் பூண்டிலன்
அல்லியங் கமலமே யனைய செங்கணோர்
வில்லிதன் றாதன்வந் திலங்கை மேயினேன். 74

அனையவன் யாரென வறிதி யாதியேல்
முனிவரு மமரரு மூவர் தேவரும்
எனையவ ரெனையவர் யாவர் யாவையு
நினைவரு மிருவினை முடிக்க நின்றுளோன். 75

ஈட்டிய வலியு மேனை யியற்றிய தவமும் யாணர்க்
கூட்டிய படையுந் தேவர் கொடுத்தநல் வரமுங் கோட்பும்
தீட்டிய வாளு மெய்தத் திருத்திய பிறவு மெல்லாம்
நீட்டிய பகழி யொன்றான் முதலொடு நீக்க நின்றான். 76

தேவரும் பிறரு மல்லன் றிசைக்களி றல்லன் றிக்கிற்
காவல ரல்ல னீசன் கைலையங் கிரியு மல்லன்
மூவரு மல்லன் மற்றை முனிவரு மல்ல னெல்லைப்
பூவல யத்தை யாண்ட புரவலன் புதல்வன் போலாம். 77

போதமும் பொருந்து வேள்விப் புரையறு பயனும் பொய்தீர்
மாதவஞ் சுமந்து தீரா வரங்களு மற்று யாவும்
யாதவ னினைந்தா னன்ன பயத்தன வேது வேண்டின்
வேதமு மறமுஞ் சொல்லு மெய்யற மூர்த்தி வில்லோன். 78

காரணங் கேட்டி யாயிற் கடையிலா மறையின் கண்ணும்
ஆரணங் காட்ட மாட்டா வறிவினுக் கறிவு மன்னோன்
போரணங் கிடங்கர் கௌவப் பொதுநின்ற முதலே யென்ற
வாரணங் காக்க வந்தா னமரரைக் காக்க வந்தான். 79

மூலமு நடுவு மீறு மில்லதோர் மும்மைத் தாய
காலமுங் கணக்கு நீத்த காரணன் கைவி லேந்திச்
சூலமுந் திகிரி சங்குங் கரகமுந் துறந்து தொல்லை
ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்புநீத் தயோத்தி வந்தான். 80

அறந்தலை நிறுத்தி வேத மருள்சுரந் தறைந்த நீதித்
திறந்தெரிந் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோ ரிடர்துடைத் தேக வீண்டு
பிறந்தனன் பிறவி நோய்க்கு மருந்தவன் பிறிதொன் றுண்டோ.

அன்னவற் கடிமை செய்வே னுமமு மநும னென்பேன்
நன்னுத றன்னைத் தேடி நாற்பெருந் திசையும் போந்த
மன்னரிற் றென்பால் வந்த தானைக்கு மன்னன் வாலி
தன்மக னவன தேவற் றூதன்யான் றனியே னென்றான். 82

என்றலு மிலங்கை வேந்த னெயிற்றின மெழிலி நாப்பண்
மின்றிரிந் தன்ன நக்கு வாலிசேய் விடுத்த தூத
வன்றுணை யாய வாலி வலியன்கொ லரசின் வாழ்க்கை
நன்றுகொ லென்ன லோடு நாயகன் றூத னக்கான். 83

அஞ்சலை யரக்க மாண்ட தவ்வுற வியாண்டு மாண்ட
வெஞ்சின வாலி மீளான் வாலும்போய் விளிந்த தன்றே
மஞ்சன மேனி யான்றன் வடிக்கணை யொன்றால் வாலி
துஞ்சின னெங்கள் வேந்தன் சூரியன் றோன்ற லென்றான். 84

என்னுடை யீட்டி னுலவ் வாலியை யெறுழ்வா யம்பால்
இன்னுயி ருண்ட திப்போ தியாண்டையா னிராம னென்பான்
அன்னவன் றேவி தன்னை யங்கத னுட லுற்ற
வன்மையையுரைசெய்யென்னச்சமிரணன்றனயன்சொல்வான்.

தேவியை நாடி வந்த செங்கணற் கெங்கள் கோமான்
ஆவியொன் றாக நட்டா னருந்துயர் துடைத்தி யென்ன
ஓவியர்க் கெழுத வொண்ணு வுருவத்த னுருமை யோடும்
கோவியற்செல்வமுன்னேகொடுத்துவாலியையுங்கொன்றான்.

ஆயவன் றன்னொ டாண்டு திங்களோ ராறும் வைகி
மேயவெஞ் சேனை சூழ வீற்றினி திருந்த வீரன்
போயினி நாடு மென்னப் புகுந்தனம் புகுந்த தீதென்
றேயவன் றூதன் சொன்னு னிராவண னிதனைச் சொன்னான்.

உங்குலத் தலைவன் றன்னோ டொப்பிலா வுயர்ச்சி யோனை
வெங்கொலை யம்பிற் கொன்றாற் காட்டொழின் மேற்கொண்
டெங்குலப்புறநுங்கீர்த்திநும்மொடுமியைந்ததென்றால்[டேரே
மங்குலிற் பொலிந்த ஞால மாதுமை யுடைத்து மாதோ. 88

தம்முனைக் கொல்வித் தன்னாற் கொன்றவற் கன்பு சான்ற
உம்பினத் தலைவ னேவ யாதெனக் குணர்த்த லூற்ற
தெம்முனைத் தூது வந்தா யிகல்புரி தன்மை யென்னை
நொம்மெனக் கொல்லா நெஞ்ச மஞ்சலை நுவறி யென்றான். 89

துணர்த்த தாரவன் சொல்லிய சொற்களைப்
புணர்த்து நோக்கிப் பொதுமின்ற நீர்மையை
உணர்த்தி னால துறுமென வுன்னருங்
குணத்தி னானு மினையன கூறினான். 90

தூது வந்தது சூரியன் கான்முளை
ஏது வொன்றிய நீதி யியைந்தன
சாது வென்றுணர் கிற்றியேற் றக்கன
கோதி றந்தன நின்வயிற் கூறுகேன். 91

வறிது வீழ்த்தனை வாழ்க்கையை மன்னறம்
சிறிது நோக்கலை தீமை திருத்தினாய்
இறுதி யுற்றுள தாயினு மின்னுமோர்
உறுதி கேட்டி யுயிர்நெடி தோம்புவாய். 92

போயிற் றீர்நும் புலன்வென்று போற்றிய
ஆயிற் றீர்வரி தாகிய மாதவம்
மாயிற் றீர்வருங் கேடருங் கற்பினாற்
றீயிற் றூயவ ளைத்துயர் செய்ததால். 93

இன்று வீந்தது நாளைச் சிறிதிறை
நின்று வீந்த தலாலிறை நிற்குமோ
ஒன்று வீந்தது நல்லுணர் வும்பரை
வென்று வீங்கிய வீக்கம் விதியினால். 94

தீமை நன்மையைத் தீர்த்தலொல் லாதெனும்
வாய்மை நீக்கினை மாதவத் தால்வந்த
தூய்மை தூயவ டன்வயிற் றேன்றிய
நோய்மை யாற்றுடைக் கின்றனை நோக்கிலாய். 95

திறந்தி றம்பிய காமச் செருக்கினால்
மறந்து தத்த மதியின் மயங்கினார்
இறந்தி றந்திழிந் தேறுவ தேயலால்
அறந்தி றம்பின ராருள ராயினார். 96

நாமத் தாழ்கடன் ஞாலம் புரந்தவர்
வாமத் தான்மறைந் தாரிள மாதர்பால்
காமத் தாலிறந் தார்கறை வண்டுறை
தாமத் தாரின ரெண்ணினுஞ் சால்வரோ. 97

பொருளுங் காமமு மென்றிவை போக்கிவே
றிருளுண் டாமென வெண்ணல ரீதலும்
மருளுங் காதலிற் றீர்தலும் வல்லதோர்
தெருளுண் டாமென வெண்ணலர் சீரியோர். 98

இச்சைத் தன்மை யினிற்பிற ரில்லினை
நச்சி நாளு நகையுற னுணலை
பச்சை மேனி புலர்ந்து பழிபடூஉங்
கொச்சை யாண்மையுஞ் சீர்மையிற் கூடுமோ. 99

வெறுப்புண் டாக வொருத்தியை வேண்டினால்
மறுப்புண் டானபின் வாழ்கின்ற வாழ்வினின்
உறுப்புண் டாய்மிக வோங்கிய நாசியை
அறுப்புண் டாலு மழகென லாகுமே.. 100

ஓத நீருல காண்டவ ருன்றனைப்
போத நீதிய ராருளர் போயினர்
வேத நீதி வீதிவழி மேல்வரும்
காத னீயறத் தெல்லை கடத்தியோ. 101

பாரைஞ் ஞாறுவ பற்பல பொற்புயம்
ஈரைஞ் ஞாறு தலையுள வென்னினும்
ஊரைஞ் ஞாறுங் கடுங்கன லுட்பொதி
சீரைஞ் ஞாறவை சேமஞ் செலுத்துமோ. 102

புரம்பி ழைப்பருந் தீப்புகப் பொங்கியோன்
நரம்பி ழைத்தநின் பாடலி னல்கிய
வரம்பி ழைக்கு மறைபிழை யாதவன்
சரம்பி ழைக்குமென் றெண்ணுதல் சாலுமோ. 103

ஈறி ஞுக வெஞ்சலி னற்றிரு
நூறி னொய்தினை யாகி நுழைதியோ
வேறு மின்னகை யாய வினைத்தொழில்
தேறி னர்பலர் காமிக்குஞ் செவ்வியோய். 104

பிறந்து ளார்பிற வாத பெருந்தவம்
சிறந்து ளார்பெருந் தேவர்க்குந் தேவராய்
இறந்து ளார்பிறர் யாரு மிராமனை
மறந்து ளாருள ராகிலர் வாய்மையால். 105

ஆத லாற்ற னரும்பெறற் செல்வமும்
ஓது பல்கிளை யும்முயி ரும்முறச்
சீதை யைத்தரு கென்றெனச் செப்பினன்
சோதி யான்மக னிற்கென்று சொல்லினன். 106

என்ற லும்மிவை சொல்லிய தெற்கொரு
குன்றின் வாழுங் குரங்குகொ லாமிது
நன்று நன்றென மாநகை செய்தனன்
வென்றி யென்றென்று தானன்றி வேறிலான். 107

குரக்கு வார்த்தையு மானுடர் கொற்றமும்
இருக்க நிற்கநீ யென்கொ லடாவிரும்
புரத்தி னுட்டருந் தூது புகுந்தபின்
அரக்கரைச் செற்ற தஃதுரை யாயென்றான். 108

காட்டு வாரின்மை யாற்கடி காவினை
வாட்டி னேனெனைக் கொல்லவந் தார்களை
வீட்டி னேன்பின்னு மென்மையி னாலுன்றன்
மாட்டு வந்தது காணுன் மதியினால். 109

என்னு மாத்திரத் தீண்டெரி நீண்டகை
மின்னும் வாளெயிற் றன்சினம் வீங்கினான்
கொன்மி னென்றனன் கொண்டவர் போதலும்
நின்மி னென்றனன் வீடண னீதியான். 110

ஆண்டெ ழுந்துநின் றண்ண னரக்கனை
நீண்ட கையின் வணங்கின னீதியான்
மூண்ட கோப முறையதன் றாமென
வேண்டு மெய்யுரை யென்ன விளம்பினான். 111

அந்தண னுலக மூன்று மாதியி னறத்தி னுற்றத்
தந்தவன் மரபின் வந்த தவநெறி யுணர்ந்து தக்கோய்
இந்திரன் திருவை மாற்று மிறைவனீ யியம்பு தூது
வந்தன னென்ற பின்னுங் கோறியோ மறைகள் வல்லோய். 112

பூதலப் பரப்பி னண்டப் பொகுட்டினிற் புறம்பிற் பொய்தீர்
வேதமுற் றுயர்ந்த வைப்பின் வேறுவே றிடத்து வேந்தர்
மாதரைக் கொலைசெய் தார்க ளுளரென வரினும் வந்த
தூதரைக் கொன்று ளார்கள் யாவரே தொல்லை நல்லோர். 113

பகைப்புல னணுகி யுய்த்தார் பகர்ந்தது பகர்ந்து பற்றார்
மிகைப்புல னடக்கி மெய்ம்மை விளம்புதல் விரதம் பூண்ட
தகைப்புலத் தருமத் தோரைக் கோறலிற் றக்க யார்க்கும்
நகைக்குலம் பிறிதுண் டாமோ நக்குல நவையின் றாமோ. 114

முத்தலை யெஃகன் மற்றை முராந்தகன் முனிவர் முன்னோர்
அத்தலை நம்மை நோா வமரர்க்கு நகையிற் றாமால்
மெய்த்தலை யுலகங் காக்கும் வேந்தநின் மாற்றா ரேவ
இத்தலை யேகி னானைக் கொல்லுத லிழுக்க மின்னும். 115

இளையவ டன்னைக் கொல்லா திருஞ்செவி மூக்கொ டரிந்து
விளைவுரை யென்று விட்டார் வீரராய் மேன்மை பார்ப்பார்
களைதியே லரக்க ராய வினம்வந்து கண்ணிற் கண்ட
வளவுரை யாமற் செய்தி யாதியென் றறியச் சொன்னான். 116

நல்ல துரைத்தாய் நம்பியிவ னவைசெய் தானு நாமவனைக்
கொல்லல் பழுதே போயவனைக் கூறிக் கொணர்தி கடிதென்றுத்
தொல்லை வாலை மூலமுறச் சுட்டு நகரைச் சூழ்போக்கி
எல்லை கடக்க விடுமின்க ளென்று னின்று ரிரைத்தெழுந்தார்.

ஆய காலத் தயன்படையோ டிருப்ப
வாகா தனவிடுகை
தூய பாச மெனைப்பலவுங் கொணர்ந்து
பிணிமின் றேரென்று

மேய தெய்வப் படைக்கலத்தை விட்டா
 னமரர் போர்வென்றான்
ஏயெ ளுமுன் னிடைபுக்குத் தடைவன்
 கயிற்றாற் பிணித்தீர்த்தார். 118

நாட்டி னகரி னடுவுள்ள கயிறு நவிலுந் தகைமையவே
வீட்டி னூச நெடும்பாச மற்ற தேரும் விசிதுறந்த
வாட்டும் புரவி யிலாயமெலா மருவி வாங்குந் தொடையழிந்த
பூட்டும் வல்லி முட்கோலும் புரசை யிழந்த போர்யானை. 119

மண்ணிற் கண்ட வானவரை வலியிற் கவர்ந்த வரம்பெற்ற
எண்ணற் கரிய வேனையரை யிகலிற் பறித்த தமக்கியைந்த
பெண்ணிற்கமையுமங்கலத்திற்பிணித்தகயிறே யிடைபிழைத்த
கண்ணிற் கண்ட வன்பாசமெல்லா மிட்டுக் கட்டினார். 120

கடவுட் படையைக் கடந்தறத்தி னானை கடந்தே னாகாமே
விடுவித் தளித்தார் தெவ்வரே வென்றே னன்றே யிவர்வென்றி
சுடுவிக் கின்ற திவ்வுரைச் சுடுகென் றுரைத்த துணிவென்று
நடுவுற் றயரா வரநோக்கி முற்று முவந்தா னவையற்றான். 121

நொய்யபாசம்புறம்பிணிப்பநோன்மையிலன்போலுடனுடங்கி
வெய்ய வரக்கர் புறத்தலைப்ப வீடு முணர்ந்தே விரைவில்லா
ஐயன்விஞ்சைதனையறிந்துமறியாதான்போலவிஞ்சையெனும்
பொய்யைமெய்யேநடிக்கின்றயோகிபோன்றான்போகின்றான்.

வேந்தன் கோயில் வாயிலெற்றாம் விரைவிற்
 கடந்து வெள்ளிடையிற்
போந்து புறநின் றிரைக்கின்ற பொறைதீர்
 மறவர் புறஞ்சுற்ற

ஏந்து நெடுவால் கிழிசுற்றி முற்றுந்
தோய்த்தா ரிழுநெண்ணெய்
காந்து கடுந்தீக் கொளுத்திஞ ரார்த்தா
ரண்டங் கடிகலங்க. 123

ஒக்க வொக்க வுடன்விசித்த வுலப்பி
லாத வுரப்பாசம்
பக்கம் பக்க மிருகூருய் நூரு
யிரவர் பற்றிஞர்
புக்க படைஞர் புடைகாப்போர் புணரிக்
கணக்கர் புறஞ்செல்வோர்
திக்கி னளவா யயனின்று காண்போர்க்
கெல்லே தெரிவரிதால். 124

அந்த நகருங் கடிகாவு மழிவித் தரக்கர் முதலோடுஞ்
சிந்த நூறிச் சீதையொடும் பேசி மனிதர் திறஞ்செப்ப
வந்த குரங்கிற் குற்றதனை வம்மின் காண வம்மினெனத்
தந்த மரக்கர் தெருவுதொறும் யாரு மறியச் சாற்றிஞர். 125

ஆர்த்தா ரண்டத் தப்புறத்து மறிவிப்
பார்போர் லங்கோடிங்
கீர்த்தார் முரச மெற்றிஞ ரிடித்தார்
தெழித்தா ரெம்மருங்கும்
பார்த்தா ரோடிச் சானகிக்கும் பகர்ந்தா
ரவளு முயிர்பதைத்தாள்
வேர்த்தா ளுலந்தாள் விம்மிஞள் விழுந்தா
ளழுதாள் வெய்துயிர்த்தாள். 126

தாயே யனைய கருணையான் றுணையே யேதுந் தகைவில்லா
நாயே யனைய வல்லரக்கர் நலியக் கண்டா னல்காயோ
நீயே யுலகுக் கொருசான்று நிற்கே தெரியுங் கற்பதனில் [ருள்.
தூயே னென்னிற் றொழுகின்றே னெரியே யவனைச் சுடலென்

வெளுத்தமென் னகையவள் விளம்பு மேல்வையின்
ஒளித்தவெங் கனலவ னுள்ள முட்கினான்
தளிர்த்தன மயிர்ப்புறஞ் சிலிர்ப்பத் தண்மையால்
குளிர்த்ததக் குரிசில்வா லென்பு கூரவே. 128

மற்றினிப் பலவென் வேலை வடவனல் புவிய ளாய
கற்றையங் கனலி மற்றைக் காயத்தீ முனிவர் காக்கும்
முற்றுற மும்மைச் செந்தீ முப்புர முருங்கச் சுட்ட
கொற்றவ னெற்றிக் கண்ணின் வன்னியுங் குளிர்ந்த வன்றே.

அண்டமுங் கடந்தா னங்கை யனலியுங் குளிர்ந்த தங்கிக்
குண்டமுங் குளிர்ந்த மேகத் துருமெலாங் குளிர்ந்த கொற்றச்
சண்டவெங் கதிர வாகித் தழங்கிருள் விழுங்குந் தாவில்
மண்டலங் குளிர்ந்த மீளா நரகமுங் குளிர்ந்த மாதோ. 130

வெற்பினு வியன்ற தன்ன மேனியை விழுங்கி வெந்தீ
நிற்பினுஞ் சுடாது நின்ற நீர்மையை நினைந்து நோக்கி
அற்பினு ரருத வுள்ளத் தநுமனுஞ் சனகன் பாவை
கற்பினு லியன்ற தென்னப் பெரியதோர் களிப்ப ருனான். 131

அற்றையவ் விரவிற் றூன்ற னறிவினான் முழுது முள்ளப்
பெற்றில னெனினு மாண்டொன் றுள்ளது பிழையு ருமே
மற்றுறு பொறிமுன் செல்ல மறைந்துசெல் லறிவு மானக்
கற்றிலா வரக்கர் தாமே காட்டலிற் றெரியக் கண்டான். 132

முழுவதுந் தெரிய நோக்கி முற்றுமூர் முடியச் சென்ருன்
வழுவுறு கால மீதென் றெண்ணினன் வலிதிற் பற்றித்
தழுவின னிரண்டு நூரு யிரம்புயத் தடக்கைத் தாம்போ
டெழுவென நால விண்மே லெழுந்தனன் விழுந்த வெல்லாம்.

இற்றவா ளரக்கர் நூரு யிரவரு மிழந்த தோளார்
முற்றினு ருலந்தா னையன் மொய்ம்பினே டுடலை மூழ்கச்
சுற்றிய கயிற்றி னேடுந் தோன்றுவா னரவின் சுற்றம்
பற்றிய கலுழ னென்னப் பொலிந்தனன் விசும்பின் பாலான்.

துன்னலர் புரத்தை முற்றுஞ் சுடுதொழிற் ருெல்லை யோனும்
பன்னின பொருளு நாணப் பாதக ரிருக்கை பாற
மன்னனை வாழ்த்தி வாழ்த்தி வயங்கெரி மடுப்ப னென்னுப்
பொன்னகர் மீதே தன்போர் வாலினைப் போக விட்டான். 135

தன்னிறைக் குறுகண் வெய்யோர் தாமியற் றலுங்கேட் டின்னே
அன்னவர்க் கிறுதி யாக வணிநக ரழிப்ப லென்னச்
செந்நிறச் சிகைய வெம்போர் மழுப்பின்னர்ச் சேற லொக்கும்
அன்னிறத் தண்ண றூத னனல்கெழு கொற்ற நீள்வால். 136

அப்புறம் வேலை காறு மலங்குபே ரிலங்கை தன்னை
எப்புறத் தளவுந் தீய வொருகணத் தெரித்த கோட்பால்
துப்புறழ் மேனி யண்ணன் மேருவிற் குழையத் தோளால்
முப்புரத் தெய்த கோலே யொத்ததம் மூரிப் போர்வால். 137

உகக்கடை யுலகம் யாவு முணங்குற வொருதன் ருட்டம்
சிகைக்கொழுங் கனலை வீசுஞ் செயன்முனம் பயில்வான் போல
மிகைத்தெழு தீய ராயோர் விரிநகர் வீயப் போர்வால்
தகைத்தலி னேன்மை சாலுந் தனிவீரன் சேணி லுய்த்தான்.

வெள்ளியிற் பொன்னி ஞனு விளங்குபொன் மணியின்விஞ்சை
தெள்ளிய கடவுட் டச்சன் கைமுறை திருந்தச் செய்த
தள்ளரு மனைக டோறு முறைமுறை தாவிச் சென்முன்
ஒள்ளரி யோடெங் குன்றத் தாழிவீ ழுருமொ டொப்பான். 139

நீனிற நிருத ரியாண்டு நெய்பொழி வேள்வி நீக்கப்
பால்வரும் பசியி னின்முன் மாருதி வாலைப் பற்றி
ஆலமுண் டவனன் றாட்ட வுலகெலா மவியி னுண்ணும்
காலமே யென்ன மன்றே கனலியுங் கடிதி னுண்டான். 140





## ஊர்சுடுபடலம்.

கொடியைப் பற்றி விதானங் கொளுத்தித்தான்
நெடிய தூணைத் தடவி நெடுஞ்சுவர்
முடியச் சுற்றி முழுது முருக்கிற்றால்
கடிகொள் மாமனை தோறுங் கடுங்கனல். 1

வாச விட்ட வெரிமணி மாளிகை
மூச முட்டி முழுது முருக்கலால்
ஊச விட்டன வோடி யுலேந்துளேப்
பூச லிட்ட விரியப் புரமெலாம். 2

மணியி ழைய வயங்கொளி மாளிகை
பிணியிற் செஞ்சுடர்க் கற்றை பெருக்கலால்
திணிகொ டையுற்ற துற்றில தேர்கிலார்
அணிவ ளைக்கைநல் லாரலம் வந்துளார். 3

வான கத்தை நெடும்புகை மாய்த்தலால்
போன திக்கறி யாது புலம்பினர்
தேன கத்த மலர்பல சிந்திய
கான கத்து மயிலன்ன காட்சியார். 4

கூய்க்கொ ழும்புனல் குஞ்சியிற் கூந்தலில்
மீச்சொ ரிந்தனர் மாதரும் வீரரும்
எய்த்த தன்மையி னெரி யின்மையும்
தீக்கொ ளுந்தின வுந்தெரி யாமையால். 5

இல்லிற் றங்கும் வயக்கொ[illegible] யாவையும்
சொல்லிற் றீர்ந்தன போல்வருந் தொல்லுருப்
புல்லிக் கொண்டன மாயைப் புணர்ப்பறக்
கல்வித் தம்மியல் பெய்துங் கருத்தர்போல். 6

ஆய தங்கொர் குறளுரு வாயடித்
தாய ளந்துல கங்க டரக்கொள்வான்
மீயெ ழுந்த கரியவன் மேனியில்
போயெ ழுந்து பரந்தது வெம்புகை. 7

நீல நின்ற நிறநிலங் கீழ்நிலை
மாலின் வெஞ்சின யானையை மானுவ
மேல்வி ழுந்தெரி முற்றும் விழுங்கலால்
தோலு ரிந்து கழன்றன தோலெலாம். 8

மீதி மங்கலந் தாலன்ன வெம்புகை
சோதி மங்கலத் தீயொடுஞ் சுற்றலால்
வீதி மங்குலின் வீழ்புனல் மேற்பட
வோதி மங்களின் மாத ரொதுங்கினர். 9

பொடித்தெ ழுந்த பெரும்பொறி போவன
இடிக்கு லங்களின் வீழ்தலி லெங்கணும்
வெடித்த வேலை வெதும்பிட மீன்குலம்
துடித்து வெந்து புலர்ந்துயிர் சோர்ந்தவால். 10

பருகு தீமடுத் துள்ளுறப் பற்றலால்
அருகு நீடிய வாடகத் தாரைகள்
உருகி வேலையி லூடுபுக் குற்றன
திருகில் பொன்னெடுந் தண்டிற் றிரண்டவால். 11

உரையின் முந்துல குண்ணு மெரியதால்
வரைநி வந்தன பன்மணி மாளிகை
நிரையி னீணெடுஞ் சோலையி னிற்குமோ
தரையும் வெந்தது பொன்னெனுந் தன்மையால். 12

கல்வி னும்வலி தாம்புகைக் கற்றையால்
எல்லி பெற்ற திமையவர் நாட்டிடம்
வல்லி கோலி நிமிர்ந்தன மாமணிச்
சில்லி யோடுந் திரண்டன தேரெலாம். 13

பேய மன்றினி னின்று பிறங்கெரி
மாய ருண்ட நறவு மடுத்ததால்
தூய ரென்றவர் வைகிடந் துன்னினர்
தீய ரன்றியுந் தீமையுஞ் செய்வரால். 14

தழுவி லங்கை தழங்கெரி தாய்ச்செலீஇ
வழுவில் வேலை யுலையின் மறுகின
எழுமெ ழுஞ்சுடர்க் கற்றைசென் றெய்தலால்
குழுவு தண்புனன் மேகங் கொதித்தவே. 15

ஊனி லோடு மெரியொ டுயங்குவார்
கானி லோடு நெடும்புனல் காணொ
வானி லோடு மகளிர் மயங்கினார்
வேனி லோடருந் தேரிடை வீழ்ந்தனர். 16

தேன வாம்பொழி றீப்படச் சிந்திய
சோனை மாமலர்த் தும்பி தொடர்ந்தயல்
போன தீச்சுடர் புண்டரி கத்தடங்
கான மாமென வீழ்ந்து கரிந்தவே. 17

நற்க டம்பிது நம்முயிர் நாயகர்
மற்க டந்தெற மாண்டனர் வாழ்கிலர்
இற்க டந்தினி யேகலம் யாமெனா
விற்க டந்த நுதற்சிலர் வீடினார். 18

பூக்க ரிந்து பொறிபொறி யாயிடை
நாக்கெ ரிந்து சினைநறுஞ் சாம்பராய்
மேக்கெ ரிந்து நெடும்பனை வேருறக்
காக்க ரிந்து கருங்கரி யானவே. 10

கார்மு ழுக்க வெழுங்கனற் கற்றைபோய்
ஊர்மு ழுக்க வெதும்பி யுருகின
சோர்வொ ழுக்க மருமையிற் றுன்னுபொன்
வேர்வி ழுப்பது போன்றன விண்ணெலாம். 20

நெருக்க மீமிசை யோங்கி நெருப்பழல்
செருக்கு வெண்கதிர்த் திங்களைச் சேணுற
உருக்க மெய்யி னமுத முகுத்தலால்
அரக்க ருஞ்சில ராவிபெற் றாரரோ. 21

பரிதி பற்றி நிமிர்ந்தெழு பைங்கனல்
கருகி முற்று மெரிந்தெழு கார்மழை
அருகு சுற்று மிருந்தைய தாயதின்
உருகு பொற்றிர ளொத்த துலாங்கதிர். 22

தளைகொ ளுந்திய தாவெரி தாமணி
முளைகொ ளுந்தி முகத்திடைம் மொய்த்தபேர்
உளைகொ ளுந்த வுளைந்துலை வுற்றன
வளைகு ளப்பின் மணிநிற வாசியே. 23

எழுந்து பொற்றலத் தேறலி னீள்புகைக்
கொழுந்து சுற்ற வுயிர்ப்பிலர் கோளுமுற்
றழுந்து பட்டொ ரொத்தயர்ந் தாரழல்
விழுந்து முற்றினர் கூற்றை விழுங்குவார். 24

கோசி கத்துகி லுற்ற கொழுங்கனல்
தூசி னுத்தரி யத்தொடு சுற்றுறு
வாச மைக்குழல் பற்ற மயங்கினார்
பாசி ழைப்பர வைப்பட ரல்குலார். 25

நிலவி லங்கிய துகிலினை நெருப்புண நிருதர்
இலவி னுஞ்சில முத்துள வெனுநகை யிளையார்
புலவி யின்கரை கண்டவ ரமுதுகப் புணரும்
கலவி யின்கரை கண்டிலர் மண்டினர் கனன்மேல். 26

பஞ்ச ரத்தொடு பசுநிறக் கிளிவெந்து பதைப்ப
அஞ்ச னக்கணி னருவிநீர் முலைமுன்றி னலைப்பக்
குஞ்ச ரத்தன கொழுநரைத் தழுவுறுங் கொதிப்பால்
மஞ்சு றப்புகு மின்னெனப் புகையிடை மறைந்தார். 27

வரையி னைப்புரை மாடங்க ளெரிபுக் மகளிர்
புரையில் பொற்கலன் விசும்பிடை வில்லிடப் போவார்
கரையி னுட்புகைப் படலையிற் கரிந்தனர் கலங்கித்
திரையி னுட்பொலி சித்திரப் பாவையின் செயலார். 28

அகரு நன்னறுஞ் சாந்தமு முதலிய வநேகம்
புகரி னன்மரத் துறுவெறி யுலகெலாம் போர்ப்பப்
பகரு மூழியிற் காலவெங் கடுங்கனல் பருகும்
மகர வேலையின் வெந்தன நந்தன வனங்கள். 29

மினல்ப ரந்தெழு கொழுஞ்சுட ருலகெலாம் விழுங்கி
நினைவ ரும்பெருந் திசையுற விரிகின்ற நிலையால்
சினைப ரந்தெரி சேர்ந்திலா நின்றவுஞ் சிலவெம்
கனல்ப ரந்தவுந் தெரிகில கற்பகக் கானம். 30

மூளும் வெம்புகை முற்றுறச் சுற்றிய முழுநீர்
மாளும் வண்ணமா மலைநெடுந் தலைதொறும் வழங்கிப்
பூளை வீயன்ன போவன புணரியிற் புனலின்
மீள யாவையுந் தெரிந்தில முகிற்கண மிசையே. 31

மிக்க வெம்புகை விழுங்கலின் வெள்ளியங் கிரியும்
ஒக்க வெற்பினோ டன்னமுங் காக்கையி னுருவும்
பக்க வேலையின் படியது பாற்கடன் முடிவிற்
றிக்க யங்களுங் கயங்களும் வேற்றுமை தெரியா. 32

கரிந்து சிந்திடக் கடுங்கன லுருடார்ந்துடல் கதுவ
உரிந்த மெய்யின ரோடினர் நீரிடை யொளிப்பார்
விரிந்த கூந்தலுங் குஞ்சியு மிடைதலிற் றூனும்
எரிந்து வேகின்ற தொத்ததவ் வெறிதிரைப் பரவை. 33

மருங்கின் மேலொரு மகவுகொண் டொருதனி மகவை
அருங்கை யாற்பற்றி மற்றொரு மகவுபின் றரத்தர
நெருங்கி னாரொடு நெறிகுழல் சுறுக்கொள நீங்கிக்
கருங்க டற்றலை வீழ்ந்தன ரரக்கியர் கதறி. 34

வில்லும் வேலும்வெங் குந்தமு முதலிய விறகாய்
எல்லு டைச்சுட ரெனப்புக ரஃகெலா முருகித்
தொல்லை நன்னிலை தொடர்ந்துபே ருணர்வன்ன தொழிலாற்
சல்லி யுண்டையிற் றிரண்டன படைக்கலச் சாலை. 35

செய்தொ டர்க்கன வல்லியும் புரசையுஞ் சிந்தி
நொய்தி னிட்டவன் றறிபறித் துடலெரி நுழைய
மொய்த டச்செவி நிறுத்திவான் முதுகினின் முறுக்கிச்
கையெ டுத்தழைத் தோடின வோடைவெங் களிமா. 36

வெருளும் வெம்புகைப் படலையின் மீச்செல வெருவி
இருளும் வெங்கடல் விழுந்தன வெழுந்தில பறவை
மருளு மீன்கணம் விழுங்கிட வுலந்தன மனத்தோர்
அருளில் வஞ்சரைத் தஞ்சமென் றடைந்தவ ரனைய. 37

நீரை வற்றிடப் பருகிமா நெடுநிலந் தடவித்
தாரு வைச்சுட்டு மலைகளைத் தணற்செய்து தனிமா
மேரு வைப்பற்றி யெரிகின்ற காலவெங் கனல்போல்
ஊரை முற்றுவித் திராவணன் மனைபுக்க துயர்தீ. 38

வான மாதரு மற்றுள மகளிரு மறுகிப்
போன போனதிக் கறிவரு மறிவிலார் போனார்
ஏனை நின்றவ ரெங்கணு மிரிந்தன ரிலங்கைக்
கோன வானவர் பதிகொண்ட நாளெனக் குலைந்தார். 39

நாவி யுங்கறுங் கலவையுங் கற்பக நக்க
பூவு மாரமு மகிலுமென் றினையன புகையத்
தேவு தேன்மழை செறிபெருங் குலமெனத் திசையிற்
பாவை மார்நறுங் குழல்களும் பரிமளம் பரந்த. 40

சூழும் வெஞ்சுடர் தொடர்ந்திட யாவருந் தொடரா
வாழி வெஞ்சினத் தாண்டொழி லிராவணன் மனையின்
ஊழி வெங்கன லுண்டிட வுலகமென் றுயர்ந்த
ஏழும் வெந்தன வெரிந்தன நெடுநிலை யேழும். 41

பொன்றி ருத்திய தாதலி லிராவணன் புரைதீர்
குன்ற மொத்துயர் தடநெடு மாநிலைக் கோயில்
நின்ற துற்றெரி பருகிட நெரிவுற வுருகித்
தென்றி சைக்குமோர் மேருவுண் டாமெனத் தெரிந்த. 42

அனைய காலையி னரக்கனு மரிவையர் குழுவும்
புனைம ணிப்பொலி புட்பக விமானத்துப் போனார்
நினையு மாத்திரத் தியாவரு நீங்கினர் நினையும்
வினையி லாமையில் வெந்ததவ் விலங்கன்மே லிலங்கை. 43

ஆழித் தேரவ னரக்கரை யழுவெழ நோக்கி
ஏழுக் கேழென வடுக்கிய வுலகங்க ளெரியும்
ஊழிக் காலம்வந் துற்றதோ பிறிதுவே றுண்டோ
பாழித் தீச்சுட வந்ததென் னகரெனப் பகர்ந்தான் 44

கரங்கள் கூப்பினர் தங்கிளை திருவொடுங் காணார்
இரங்கு கின்றவ லரக்கரீ தியம்பின ரிறையோய்
தரங்க வேலையி னெடியதன் வாலிட்ட தழலால்
குரங்கு சுட்டதென் றுரைத்தலு மிராவணன் கொதித்தான். 45

இன்று புன்றொழிழ் குரங்குதன் வலியினா லிலங்கை
நின்று வெந்துமா நீறெழு கின்றது நெருப்புத்
தின்று தேக்கிடு கின்றது தேவர்கள் சிரிப்பார்
நன்று நன்றுபோ ரிராவணன் வலியென நக்கான். 46

உண்ட நெருப்பைக்-கண்டெதிர் பற்றிக்
கொண்டணை கென்றான்-அண்டரை வென்றான். 47

உற்றக லாமுன்-சொற்ற குரங்கைப்
பற்றுமி னென்றான்-முற்று முனிந்தான். 48

சாரய னின்றார்-வீரர் விரைந்தார்
நேருது மென்றார்-தேரினர் சென்றார். 49

எல்லை யிகந்தார்-வில்லர் வெகுண்டார்
பல்லதி காரத்-தொல்லர் தொடர்ந்தார். 50

நீர்கெழு வேலை நிமிர்ந்தார்-தார்கெழு தானை சமைந்தார்
போர்கெழு மாலை புனைந்தார்-ஓரெழு வீர ருயர்ந்தார். 51

விண்ணினை வேலை விளிம்பார்-மண்ணினை யோடி வளைந்தார்
அண்ணலை நாடி யணைந்தார்-கண்ணினின் வேறயல் கண்டார்.

பற்றுதிர் பற்றுதி ரென்பார்-எற்றுதி ரெற்றுதி ரென்பார்.
சுற்றுதிர் சுற்றுதி ரென்பார்-முற்றினர் முற்று முனிந்தார். 53

ஏல்கொடு வஞ்ச ரெதிர்ந்தார்
கால்கொடு கைகொடு கார்போல்
வேல்கொடு கோலினர் வெந்தீ
வால்கொடு தானும்வ ளைந்தான். 54

பாதவ மொன்று பகுத்தான்
மாதிரம் வாலின் வளைத்தான்
மோதினன் மோத முனிந்தார்
ஏதியு நாளு மிழந்தார். 55

நூறிட மாருதி நொந்தார்-ஊறிட வூனிடு புண்ணீர்
சேறிட வூரிடு செந்தீ-ஆறிட வோடின தாறாய். 56

தோற்றின துஞ்சின ரல்லார்-ஏற்றிகல் வீர ரெதிர்ந்தார்
காற்றின் மகன்கலை கற்றான்-கூற்றினு மும்மடி கொன்றான். 57

மைஞ்சுறழ் மேனியர் வன்றோள்-மொய்ம்பினர் வீரர் முடிந்தார்
ஐம்பதி னாயிர ரல்லார்-பைம்புனல் வேலை படிந்தார். 58

தோய்ச்சனன் வாலது தோயாக்-காய்ச்சின வேலை கலந்தார்
போய்ச்சிலர் பொன்றினர் போனார்-ஏச்சென வீர ரெதிர்ந்தார்.

சுற்றின தேரினர் தோலா-விற்றொழில் வீரம் விளைத்தார்
எற்றென மாருதி யெற்ற-உற்றெழு வீர ருலந்தார். 59

விட்டியர் விஞ்சையர் வெந்தீ-வட்ட முலைத்திரு வைகும்
புட்டிரள் சோலை புறத்தும்-சுட்டில னென்பது சொன்னார். 60

வந்தவர் சொல்ல மகிழ்ந்தான்-வெந்திறல் வீரன் வியந்தான்
உய்ந்தனனென்னவுவந்தான்-பைந்தொடிதாள்கள்பணிந்தான்.

பார்த்தனள் சானகி பாரா
வேர்த்தெரி மேனி குளிர்ந்தாள்
வார்த்தையென் வந்தனை யென்றுப்
போர்த்தொழின் மாருதி போனான். 62

தெள்ளிய மாருதி சென்றான்
கள்ள வரக்கர்கள் கண்டால்
எள்ளுவர் பற்றுவ ரென்று
ஒள்ளெரி போனு மொளித்தான். 63





# மீட்சிப்படலம்.

நீங்குவன் விரைவி னென்னா நினைவினன் மருங்கு நின்ற
தாங்கொரு குடுமிக் குன்றை யுருக்கனி னணைந்த வையன்
வீங்கின னுலகை யெல்லாம் விழுங்கின னென்ன வீரன்
பூங்கழ றொழுது வாழ்த்தி விசும்பிடைக் கடிது போனான். 1

மைந்நாக மென்ன நின்ற
குன்றையு மரபி னெய்திக்
கைந்நாக மனையோ னுற்ற
துணர்த்தினன் கணத்தின் காலைப்
பைந்நாக வரையின் வீரன்
றன்னொடு வரவு பார்க்கும்
கொய்ந்நாக நறுந்தேன் சிந்துங்
குன்றிடைக் குதியுங் கொண்டான். 2

போய்வருங் கரும முற்றிற் றென்பதோர் பொம்மல் பொங்க
வாய்வெரீஇ நின்ற வென்றி வானர வீரர் மன்னோ
பாய்வரு நீளத் தாங்க ணிருந்தன பறவைப் பார்ப்புத்
தாய்வரக் கண்ட தன்ன வுவகையிற் றளிர்த்தா ரம்மா. 3

அழுதனர் சிலவர் முன்னின் றார்த்தனர் சிலவ ரன்பிற்
றொழுதனர் சிலவ ரோடித் துள்ளினர் சிலவ ரள்ளி
முழுதுற விழுங்கு வார்போன் மொய்த்தனர் சிலவர் சுற்றும்
தழுவினர் சிலவர் கொண்டு சுமந்தனர் சிலவர் தாங்கி. 4

தேனொடு கிழங்கு காயு நறியன வரிதிற் றேடி
மேன்முறை வைத்தே மண்ண னுகர்ந்தனை மெலிவு தீர்தி
மானவாண் முகமே யெங்கட் குரைத்தது மாற்ற மென்று
தானுகர் சாக மெல்லா முறைமுறை சிலவர் தந்தார். 5

தாள்களின் மார்பிற் றோளிற் றலைகளிற் றடக்கை தம்மின்
வாள்களின் வேலின் வாளி மழையினின் வகுத்த புண்கள்
நாள்கண்மே லுலகிற் சென்ற நம்பிதன் கண்ண வாக
ஊழ்கொள நோக்கி நோக்கி யுயிருக வுயிர்த்து நொந்தார். 6

வாலிகா தலனை மூத்தை வணங்கின னெண்கின் மன்னைக்
கா லுறப் பணிந்து பின்னைக் கடன்முறை கடவோர்க் கெல்லாம்
மேலுற வியற்றி யாங்க ணிருந்திவ ணிருந்தோர்க் கெல்லாம்
ஞாலநா யகன்றன் றேவி சொல்லின ணன்மை யென்றான். 7

என்றலுங் கரங்கள் கூப்பி யெழுந்தன ரிறைஞ்சித் தாழ்ந்து
நின்றன ருவகை பொங்க விம்மலா னிமிர்ந்த நெஞ்சர்
சென்றது முதலா வந்த திறுதியாச் செப்பற் பாலை
வன்றிற லுரவோ யென்னச் சொல்லினன் மருத்தின் மைந்தன்.

ஆண்டகை தேவி யுள்ளத் தருந்தவ மனைமயச் சொல்லிப்
பூண்டபே ரடையா ளங்கைக் கொண்டதும் புகன்று போரில்
நீண்டவா ளரக்க ரோடு நிகழ்ந்தது நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான் முன்றன் வென்றியை விளம்ப வெள்கி.

பொருதமை புன்னை சொல்ல வென்றமை போந்த தன்மை
உரைசெய வூர்தீ யிட்ட தோங்கிரும் புகையே யோதக்
கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலே காட்டத்
தெரிதர வுணர்ந்தேம் பின்ன ரென்னினிச் செய்து மென்றார்.

யாவது மினிவே றெண்ணல் வேண்டுவ தின்றையு மில்லை
சேவகன் றேவி தன்னைக் கண்டமை விரைவிற் செப்பி
ஆவதவ் வண்ண லுள்ளத் தருந்துய ரகற்ற லேயாம்
போவது புலமை யென்னுப் பொருக்கென வெழுந்து போனர்.

போயினர் களிப்பி னேடும் புங்கவன் சிலையி னின்றும்
எயின பகழி யன்ன வெழுந்துவிண் படர்ந்து தாவிக்
காய்கதிர்க் கடவுள் வானத் துச்சிசென் றிறுக்குங் காலத்
தாயன வீர ரும்போய் மதுவன மதிலி றுத்தார். 12

எதிரு ளிறந்த சால வென்பதோர் வருத்த நெஞ்சத்
தாதலா னுணவு தீர்ந்து வருந்தின மளிய மெம்மைச்
சாதநீர்த் தளித்த வீர தந்தரு ளுணவு மென்னப்
போதுநாம் வாலி சேய்பா லென்றுட னெழுந்து போனர். 13

அங்கதன் றன்னை யண்மி யநுமனு மிருகை கூப்பிக்
கொங்குதங் கலங்கன் மார்ப நின்னுடைக் குரக்குச் சேனை
வெங்கத மொழிந்து சால வருந்தின வேடை யோடி
இங்கிதற் களித்தல் வேண்டு மிறு லுமிழ் பிரச மென்றான். 14

நன்றென வவனு நேர்ந்தா னரலையு நடுங்க வார்த்துச்
சென்றுறு பிரசந் தூங்குஞ் செழுவன மதனி னூடே
ஒன்றின்முன் னொன்று பாயு மொடிக்குமென் பிரச மெல்லாம்
தின்றுதின் றுவகை கூருந் தேனுக ரளியின் மொய்த்தே. 15

ஒருவர்வாய்க்கொள்ளுந்தேனையொருவருண்டெளிதிற்போவார்
ஒருவர்கைக்கொள்ளுந்தேனையொருவர்கொண்டோடிப்போவார்
ஒருவரோ டொருவ ரொன்றத் தழுவுவர் விழுவ ரோடி
ஒருவர்மே லொருவ ரேறி யோகையென் றுவகை கூர்வார். 16

இன்னண நிகழுங் காலை யெரிவிழித் தெழுந்து சீறி
அந்நெடுஞ் சோலை காக்கும் வானர ரவரை நோக்கி
மன்னெடுங் கதிரோன் மைந்த னாணையை மறுத்து நீவிர்
என்னினைந் தென்செய் தீர்மன் னும்முயிர்க் கிறுதி யென்ன.17

முனியுமா லெம்மை யெங்கோ னென்றவர் மொழிந்து போந்து
கனியுமா மதுவ னத்தைக் கட்டழித் திட்ட தின்று
நனிதரு கவியின் றானை நண்ணலார் செய்கை நாண
இனியெம்மாற் செயலின் றென்னுத் ததிமுகற் கியம்பி னாரே.

கேட்டவன் யாவ ரேயம் மதுவனங் கேடு சூழ்ந்தார்
காட்டுமென் றெழுந்தா னன்னூர் வாலிசேய் முதல கற்றோர்
ஈட்டம்வந் திறுத்த தாக வங்கத னேவ றன்னால்
மாட்டின கவியின் றானை மதுவள ருலவை யீட்டம். 19

உரங்கிளர் மதுகை யான்ற னாணையா லுறுதி கொண்டே
குரங்கினந் தம்மை யெல்லாம் விலக்கினங் கொடுமை கூறிக்
கரங்களா லெற்ற நொந்தேங் காவலோ யென்ன லோடும்
தரங்கிளர் தந்தை பட்ட தறிந்திலன் றநயன் போலும். 20

எனவுரைத் தனலிற் பொங்கி யெழுந்திரைத் திரண்டு கோடி
கனைகழற் கவியின் சேனை கல்லெனக் கலந்து புல்லப்
புனைமதுச் சோலை புக்கான் மதுநுகர் புனிதச் சேனை
அனைகனை வாழ்த்தி யோடி யங்கத னடியின் வீழ்ந்த. 21

இந்திரன் வாலிக் கீந்த வின்சுவை மதுவின் கானம்
அந்தரத் தவர்க்கு நோக்கற் கரியவென் ஞானை தன்னைச்
சிந்தினை கதிரோன் மைந்தன் றிறலினை யறிதி யன்றே
மந்தர மனைய தோளா யிற்றதுன் வாழ்க்கை யின்றே. 22

மதுவனந் தன்னை யின்னே மாட்டுவித் தனைநீ யென்னக்
கதுமென வாலி சேய்மே லெறிந்தனன் கருங்கற் பாறை
அதுதனைப் புறங்கை யாலே யகற்றியங் கதனுஞ் சீறித்
ததிமுகன் றன்னைப் பற்றிக் குத்தினன் றடக்கை தன்னால். 23

வாய்வழி குருதி சோர மணிக்கையான் மலங்க மோதிப்
போய்மொழிகதிரோன்மைந்தற்கென்றவன்றன்னைப்போக்கித்
தீயெழும் வெகுளி பொங்க மற்றவன் சேனை தன்னைக்
காய்கனல் பொழியுங் கையாற் குத்துதிர் கட்டி யென்றான். 24

பிடித்தனர் கொடிக டம்மாற் பிணித்தனர் பின்னு முன்னும்
இடித்தன ரசனி யஞ்ச வெறுழ்வலிக் கரங்க ளோச்சித்
துடித்தன ருடலஞ் சோர்ந்தார் சொல்லும்போய் நீரு மென்னப்
படித்தனன் வாலி மைந்தன் பயத்துட னவ்ரும் போனார். 25

அலைபுனல் குடையு மாபோன் மதுக்குடைந் தாடித் தத்தம்
தலைவர்கட் கினிய தேனுங் கனிகளும் பிறவுந் தந்தே
உலைவுறு வருத்தந் தீர்ந்திட் டுபவனத் திருந்தா ரப்பால்
சிலைவிளைத் துலவுந் தேரோன் றெறும்வெயி றணிவு பார்த்தே.

முத்தலை யெஃகி னூற்கு முடிப்பருங் கரும முற்றி
வித்தகன் றூதன் மீண்ட திறுதியாய் விளைந்த தன்மை
அத்தலை யறிந்த வெல்லா மறைந்தன மாழி யான்மாட்
டித்தலை நிகழ்ந்த வெல்லா மியம்புவா னெடுத்துக் கொண்டாம்.

சேற்றிள மரைமலர்த் திருவைத் தேர்கெனக்
காற்றின்மா மகன்முதற் கவியின் சேனையை
நாற்றிசை மருங்கினு மேவி நாயகற்
றேற்றின னிருந்தனன் கவியின் செம்மலே. 28

கார்வரை யிருந்தவக் கதிரின் காதலன்
சீரிய சொற்களாற் றெருட்டச் செங்கணன்
ஆருயி ராயிர முடைய னுமெனுச்
சோர்தொறுஞ் சோர்தொறு முயிர்த்துத் தோன்றுவான். 29

தண்டலி னெடுந்திசை மூன்றுந் தாயினர்
கண்டிலர் மடந்தையை யென்னுங் கட்டுரை
உண்டுயி ரகத்தென வொறுக்க வும்முளன்
திண்டிற லநுமனை நினையுஞ் செய்கையான். 30

ஆரிய னருந்துயர்க் கடலி னாழ்பவன்
சீரிய தன்றுநஞ் செய்கை தீர்வரும்
மூரிவெம் பழியொடு முடிந்த தாமெனச்
சூரியன் புதல்வனை நோக்கிச் சொல்லினான். 31

குறித்தநா ளிறந்தன குன்றத் தென்றிசை
வெறிக்கருங் குழலியை நாடன் மேயினார்
மறித்திவண் வந்திலர் மாண்டு ளார்கொலோ
பிறித்தவர்க் குற்றுள தென்னை பெற்றியோ. 32

மாண்டன ளவளிவண் மாண்ட வார்த்தையை
மீண்டவர்க் குரைத்தலின் விளித னன்றெனப்
பூண்டதோர் துயர்கொடு பொன்றி னார்கொலோ
தேண்டின ரின்னமுந் திரிகின் றார்கொலோ. 33

கண்டன ரரக்கரைக் கறுவு கைமிக
மண்டமர் தொடங்கினார் வஞ்சர் மாயையால்
விண்டல மதனின்மே யினர்கொல் வேறிலாத்
தண்டலி னெடுஞ்சிறை தளைப்பட் டார்கொலோ. 34

கூறின நாளவ ரிருக்கை கூடலம்
ஏறலஞ் சுதுமென வின்ப துன்பங்கள்
ஆறின ரருந்தவ மயர்கின் றார்கொலோ
வேறவர்க் குற்றதென் விளம்பு வாயென்றான். 35

என்றுரைத் திடருழந் திருக்கும் வேலையில்
வன்றிறற் றதிமுகன் வான ரேசன்முன்
தன்றலைப் பொழிதரு குருதி தன்னொடும்
குன்றெனப் பணிந்தன னிருகை கூப்பியே. 36

எழுந்துநின் றையகே ளினறு நாளையோ
டழிந்தது மதுவன மடைய வென்றலும்
வழிந்திடு குருதியின் வதன நோக்கியே
மொழிந்திடங் கியாரது முடித்து ளாரென. 37

நீலனுங் குமுதனு நெடிய குன்றமே
போலுயர் சாம்பனும் புணரி போர்த்தென
மேலெழு சேனையும் விரைவின் வந்துறச்
சால்புடை மதுவனந் தனைய ழிப்பவே. 38

தகைந்தவச் சேனையைத் தள்ளி நின்னையும்
இகழ்ந்துரைத் தீர்த்தனன் வாலி சேயெனக்
குகந்தன புகன்றவவ் வுரையொ ழுமையாற்
புகைந்தொரு பாறையின் புணர்ப்பு நீக்கியே. 39

இமைத்தன்முன் வாலிசே யெழில்கொள் யாக்கையைச்
சமைத்தியென் றெறிதரப் புறங்கை யாற்றகைத்
தமைத்தரு கனலென வழன்றெற் பற்றியே
குமைத்துயிர் பதைப்பநீ கூறுபோ யென்றுன். 40

எம்பலொ டெழுந்துநின் றிரவி கான்முளை
பாம்பணை யமலனை வணங்கிப் பைந்தொடி
மேம்படு கற்பின ளென்னு மெய்ம்மையைத்
தாம்புகன் றிட்டதிச் சலமென் றோதினன். 41

பண்டரு கிளவியா டன்னைப் பாங்குறக்
கண்டன ரன்னதோர் களிப்பி னலவர்
வண்டுறை மதுவன மழித்து மாந்திய
தண்டநா யகவினி யவலந் தீர்கென. 42

வந்தனர் தென்றிசை வாலி னொனப்
புந்திநொந் தென்னைகொல் புகலற் பாலரென்
றெந்தையு மிருந்தன னிரவி கான்முளை
நொந்தவத் ததிமுகன் றன்னை நோக்கியே. 43

யாரவ ணிறுத்தவ ரியம்பு வாயென
மாருதி வாலிசேய் மயிந்தன் சாம்பவன்
சோர்வறு பதினெழு வோர்க ளென்னினர்
ஆர்கலி நாணவந் தார்க்குஞ் சேனையார். 44

என்றவ னுரைத்தபோ திரவி காதலன்
வன்றிறற் றதிமுகன் வதன நோக்கியே
ஒன்றுனக் குணர்த்துவ துளது வாலிசேய்
புன்றொழிற் செய்கைசேர் புணர்ப்ப னல்லனால். 45

கொற்றவன் பணிதலைக் கொண்டு தெண்டிரை
சுற்றிய திசையெலாந் துருவித் தோகையைப்
பற்றிய பகைஞரைக் கடிந்து பாங்கர்வந்
துற்றன ரவரையா முரைப்ப தென்னையே. 46

அன்றியும் வாலிசே யரச தாதலின்
பின்றுத லரிதரோ பிணங்குஞ் சிந்தையாய்
ஒன்றுநீ யுணரலை யுறுதி வேண்டுமேல்
சென்றவன் றனைச்சரண் சேர்தி யீண்டென்றான். 47

வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன்
உணங்கிய சிந்தைய னொடுங்கு மேனியன்
கணங்களோ டேகியக் கான நண்ணினான்
மணங்கிளர் தாரினான் மறுத்தும் வந்தரோ. 48

கண்டனன் வாலிசேய் கறுவு கைமிக
விண்டவ னம்மெதிர் மீண்டு ளானெனின்
உண்டிடு குதுமுயி ரென்ன வுன்னினான்
தொண்டெனத் ததிமுகன் றொழுது தோன்றினான். 49

போழ்ந்தன யான்செய்த குறைபொ றுக்கெனு
வீழ்ந்தன னடிமிசை வீழ வாலிசேய்
தாழ்ந்துகை பற்றிமெய் தழீஇக்கொண் டும்மையான்
சூழ்ந்ததும் பொறுக்கெனு முதன்மை சொல்லினான். 50

யாமுதற் குறித்தநா ளிறத்த லெண்ணியே
ஏழுறத் துயர்துடைத் தளித்த வேற்றம்போல்
தாமரைக் கண்ணவன் றுயரந் தள்ளநீர்
போமெனத் தொழுதுமுன் னநுமன் போயினான். 51

வன்றிறற் குரிசிலு முனிவு மாறினான்
வென்றிகொள் கதிருந்தன் வெம்மை யாறினான்
என்றுகொண் டியாவரு மெழுந்து போதலே
நன்றென வேகினார் நவைக்க ணீங்கினார். 52

இப்புறத் திராமனு மிரவி சேயினை
ஒப்புற நோக்கிவந் துற்ற தானையர்
தப்பறக் கண்டன மென்ப ரோதகா
தப்புறத் தென்பரோ வறைதியா லென்றான். 53

என்புழி யநுமனு மிரவி யென்பவன்
தென்புறத் துளனெனத் தெரிவ தாயினான்
பொன்பொழி தடக்கையப் பொருவில் வீரனும்
அன்புறச் சிந்தையி னமைய நோக்கினான். 54

எய்தின னநுமனு மெய்தி யெந்தைதன்
மொய்கழ லெழுகிலன் முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன் கையினன்
வையகந் தழீஇநெடி திறைஞ்சி வைகினான். 55

திண்டிற லவன்செய றெரிய நோக்கினான்
வண்டுறை யோதியும் வலியண் மற்றிவன்
கண்டது முண்டவள் கற்பு நன்றெனக்
கொண்டனன் குறிப்பினு லுணருங் கொள்கையான். 56

ஆங்கவன் செய்கையை யளவை யாமெனு
ஒங்கிய வுணர்விஞல் விளைந்த துன்னிஞன்
வீங்கினன் ருேள்புனல் கண்கள் விம்மினன்
நீங்கிய தருந்துயர் காத னீண்டதே. 57

கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்
தெண்டிரை யலைகட லிலங்கைத் தென்னகர்
அண்டர்நா யகவினித் தவிர்தி யையமும்
பண்டுள துயருமென் றநுமன் பன்னிஞன். 58

உன்பெருந் தேவி யென்னு முரிமைக்கு முன்னைப் பெற்ற
மன்பெரு மருகி யென்னும் வாய்மைக்கு மிதிலை வேந்தன்
தன்பெரும் புதல்வி யென்னுந் தகைமைக்குந் தலைமை சான்ருள்
என்பெருந் தெய்வ மையா வென்னினுங் கேட்டி யென்ருன்.

பொன்னலதில்லைப்பொன்னையொப்பெனப்பொறையினின்ரு
டன்னல தில்லைத் தன்னை யொப்பெனத் தனக்கு வந்தாள்
நின்னல தில்லை நின்னை யொப்பென நினக்கு நேர்ந்தாள்
என்னல தில்லை யென்னை யொப்பென வெனக்கு மீந்தாள். 60

உன்குல முன்ன தாக்கி யுயர்புகழ்க் கொருத்தி யான
தன்குலந் தன்ன தாக்கித் தன்னையித் தனிமை செய்த
மன்குல மறலிக் கீந்து வானவர் குலமுங் காத்தின்
றென்குல மெனக்குத் தந்தா ளென்னினிச் செய்வ தெம்மோய்.

விற்பெருந் தடக்கை வீர விலங்குநீ ரிலங்கை வெற்பின்
நற்பெருந் தவத்து ளாய நங்கையைக் கண்டே னல்லேன்
இற்பிறப் பென்ப தொன்று மிரும்பொறை யென்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றுங் களிநடம் புரியக் கண்டேன். 62

கண்ணினு முளைநீ தையல் கருத்தினு முளைநீ வாயின்
எண்ணினு முளைநீ கொங்கை யிணைக்குவை தன்னி லே-வ-
தண்ணல்வெங் காம னெய்த வலரம்பு தொளைத்த வாறுப்
புண்ணினு முளைநீ நுன்னைப் பிரிந்ததது பொருந்திற் றமோ. 63

வேலையு ளிலங்கை யென்னும் விரிநக ரொருசார் விண்டோய்
காலையு மாலை தானு மில்லதோர் கனகக் கற்பச்
சோலையங் கதனி னும்பி புல்லினுற் றொடுத்த தூய
சாலையு ளிருந்தா ளைய தவஞ்செய்த தவமாந் தையல். 64

மண்ணொடுங் கொண்டு போனன் வானுயர் கற்பி னுடன்
புண்ணிய மேனி தீண்ட வஞ்சுவா னுலகம் பூத்த
கண்ணகன்கமலத்தண்ணல்கருத்திலாட்டொடுதல்கண்ணான்
எண்ணருங்கூறும்யாக்கையென்பதோர்மொழியுண்டொண்டான்.

தீண்டில னென்னும் வாய்மை திசைமுகன் செய்த முட்டை
கீண்டில தனந்த னுச்சி கிழிந்தில தெழுந்து வேலை
மீண்டில சுடர்கள் யாவும் விழுந்தில வேதஞ் செய்கை
மாண்டில தென்னுந் தன்மை வாய்மையா வுணர்தி மன்றே.

சோகத்தா ளாய நங்கை கற்பினுற் றொழுதற் கொத்த
மாகத்தார் தேவி மாரும் வான்சிறப் புற்றார் மற்றைப்
பாகத்தா ளிப்போ தீசன் மகுடத்தாள் பதுமத் தாளும்
ஆகத்தா ளல்லண் மாய னுயிர மௌலி யாளால். 67

இலங்கையை முழுது நாடி யிராவண னிருக்கை யெய்திப்
பொலங்குழையவரையெல்லாம்பொதுவுறநோக்கிப்போனேன்
அலங்குதண் சோலை புக்கே னவ்வழி யணங்க னைக்
கலங்குதெண் டிரையிற் றுய கண்ணினீர்க் கடலிற் கண்டேன்.

அரக்கிய ரளவற் றார்க ளலகையின் குழுவு மஞ்ச
நெருக்கினர் காப்ப நின்பா னேயமே யச்ச நீக்க
இரக்கமென் றொன்று தானே யேந்திழை வடிவ மெய்தித்
தருக்கிய சிறையுற் றன்ன தகையளாத் தமிய ளம்மா. 69

மாண்பிறந் தமைந்த கற்பின் வாணுத னின்பால் வைத்த
சேண்பிறந் தமைந்த காதல் கண்களிற் றெறிவிட்டித் தீராக்
காண்பிறந் தமையா னீயே கண்ணகன் ஞாலந் தன்னுள்
ஆண்பிறந் தமைந்த செல்வ முண்டனை யாநி யன்றே. 70

அயர்ப்பிலர் காண்பார் முன்னு மறிந்தில ரெனினு மைய
வெயிற்புனை யிலங்கை மூதூ ரிந்திர னிருக்கைக் கேற்ற
மயிற்புனை யியலி னொரு மைந்தரு நாளு மாங்கே
உயிர்ப்பொடு முயிரி னோடு மூசனின் றூடு வாரும். 71

தையலை வணங்கற் கொத்த விடைபெறுந் தன்மை நோக்கி
ஐயயா னிருந்த காலை யலங்கல்வே லிலங்கை வேந்தன்
எய்தின னிரந்து கூறி யிறைஞ்சின னிருந்து நங்கை
வெய்துரை சொல்லச் சீறிக் கோறன்மேற் கொண்டு விட்டான்.

ஆயிடை யணங்கின் கற்பு மையநின் னருளுஞ் செய்ய
தூயநல் லறனு மென்றிங் கினையன தொடர்ந்து காப்பப்
போயின னரக்கி மாரைச் சொல்லுமின் பொதுவி னென்றாங்
கேயின னவரெ லாமென் மந்திரத் துறங்கி யிற்றார். 73

அன்னதோர் பொழுதி னங்கை யாருயிர் துறப்ப தாக [சுற்றித்
உன்னினள் கொடியொன் றேந்திக் கொம்பொடு முறைப்பச்
தன்மணிக் கழுத்திற் சார்த்து மனவையிற் றடுத்து நாயேன்
பொன்னடி வணங்கி நின்று நின்பெயர் புகன்ற போழ்தில். 74

வஞ்சனை யரக்கர் செய்கை யாமென மனக்கொண் டேயும்
அஞ்சன வண்ணத் தான்றன் பெயருரைத் தளிய வென்பால்
துஞ்சுறு பொழிதிற் றந்தாய் துறக்கமென் றுவந்து சொன்னாள்
மஞ்செசன வண்ணக் கொங்கை வழிகின்ற மழைக்க ணீராள். 75

அறிவுறத் தெரியச் சொன்ன பேரடை யாள மைய
செறிவுற நோக்கி நாயேன் சிந்தையிற் றெரிக்குந் தன்மை
குறியுற வெண்ணி வண்ண மோதிரங் காட்டக் கொண்டாள்
இறுதியி னுயிர்தந் தீயு மருந்தொத்த தனைய தெந்தாய். 76

ஒருகணத் திரண்டு கண்டே ளொளிமணி யாழி யூன்றத்
திருமுலைத் தடத்து வைத்தாள் வைத்தலுஞ் செல்வ நின்பால்
விரகமென் பதனின் வந்த வெங்கொழுந் தீயி னல்வெக்
துருகிய துடனே யாறி வலித்தது குளிர்ப்புள் ளூற. 77

வாங்கிய வாழி தன்னை வஞ்சரூர் வந்த தாமென்
றோங்குயர் மழைக்க ணீரா லாயிரங் கலச மாட்டி
ஏங்கின ளிருந்த தல்லா லியம்பல ளுயிர்ப்பு விட்டா
ளோங்கிய வோகை யோடு முண்கனின்ற வூச னீங்கி. 78

அன்னவர்க் கடிய னேனிற் பிரிந்தபி னடுத்த வெல்லாம்
சொன்முறை யறியச் சொல்லித் தோகைநீ யிருந்த சூழல்
இன்னதென் றறிகி லாமை யித்துணை தாழ்த்த தென்றேன்
மன்னநின் வருத்தப் பாடு முணர்த்தின னுயிர்ப்பு வந்தாள். 79

இங்குள தன்மை யெல்லா மியைபுளி யியையக் கேட்டாள்
அங்குள தன்மை யெல்லா மடியனே னறியச் சொன்னாள்
திங்களொன் றிருப்ப னின்னே திருவுளந் தீர்ந்த பின்னை
மங்குவ னுயிரோ டென்றுன் மலரடி சென்னி வைத்தாள். 80

வைத்தபின் றுகிலின் வைத்த மாமணிக் கரசை வாங்கிக்
கைத்தலத் தினிதி னீந்தா டாமரைக் கண்க ளார
வித்தக காண்டி யென்று கொடுத்தனன் வேத நன்னூல்
உய்த்துள கால மெல்லாம் புகழொடு மொக்க நிற்பான். 81

பைப்பையப் பயந்த காமம் பரிணமித் துயர்ந்து பொங்கி
மெய்யுற வெதும்பி யுள்ள மெலிவுறு நிலையை விட்டான்
ஐயனுக் கங்கி முன்ன ரங்கையாற் பற்று நங்கை
கையென லாயிற் றன்றே கைபுக்க மணியின் காட்சி. 82

பொடித்தனவுரோமம்போந்துபொழிந்தனகண்ணீர்பொங்கித்
துடித்தன மார்புந் தோளுந் தோன்றின வியர்வுந் துன்னி
மடித்தது மணிவா யாவி வருவது போவ தாகித்
தடித்தது மேனி யென்னே யாருளார் தன்மை தேர்வார். 83

ஆயிடைக் கவிக ளோடு மங்கதன் முதலி னோயோர்
மேயினர் வணங்கிப் புக்கார் வீரனைக் கவியின் வேந்தைப்
போயின கரும முற்றிப் புகுந்ததோர் பொம்ம றன்றால்
சேயிரு மதியு மென்னத் திகழ்தரு முகத்த ராகி. 84

ஆண்டையி னருக்கன் மைந்த னையகே ளிவை நம்பால்
காண்டலுக் கெளிய வாறு ளென்றலுங் காலந் தாழ
ஈண்டினு மிருத்தி போலா மென்றன னென்ற லோடும் [வான்.
தூண்டிரண்டனையதோளான்பொருக்கெனவெழுந்துசொல்

எழுகவெம் படைக ளென்று னேயெனு மளவி னெங்கும்
முழுமுர செற்றிக் கொற்ற வள்ளுவர் முடுக்க முந்திப்
பொழிதிரை யன்ன வேலை புடைபரந் தென்னப் பொங்கி
வழுவலில் வெள்ளத் தானை தென்றிசை வளர்ந்த தன்றே. 86

நீலனை நெடிது நோக்கி நேமியோன் பணிப்பா னந்தம்
பால்வருஞ் சேனை தன்னைப் பகைஞர்வந் தடரா வண்ணஞ்
சால்புற முன்னர்ச் சென்று சரிநெறி துருவிப் போதி
மால்தரு களிறு போலும் படைஞர்பின் மருங்கு சூழ. 87

என்றுரைத் தெழுந்த வேலை மாருதி யிருகை கூப்பிப்
புன்றொழிற் குரங்கெ னுடைதன் றோளிடைப் புகுதி யென்னாத்
தன்றலை படியிற் றாழ்ந்தா னண்ணலுஞ் சரணம் வைத்தான்
வன்றிறல் வாலி சேயு மிளவலை வணங்கிச் சொன்னான். 88

நீயினி யென்றன் றோண்மே லேறுதி நிமல வென்ன
வாய்புதைத் திறைஞ்சி நின்ற வாலிகா தலனை நோக்கி
நாயகற் கிளைய கோவு நன்றெனா வவன்றன் றோண்மேல்
பாய்தலுந் தகைப்பி லானை படர்நெறி படர்ந்த தன்றே. 89

கருடனில் விடையிற் றோன்று மிருவருங் கடுப்பக் காலின்
அருடரு குமரன் றோண்மே லங்கத னலங்கற் றோண்மேல்
பொருடரும் வீரர் போகப் பொங்கொளி விசும்பிற் றங்கும்
தெருடரும் புலவர் வாழ்த்திச் சிந்தினர் தெய்வப் பொற்பூ. 90

வையக மதனின் மாக்கண் மயங்குவர் வயவெஞ் சேனை
எய்திடு மென்ப துன்னி யிராகவ னினிதி னேவப்
பெய்கனி கிழங்கு தேனென் றினையன பெறுதற் கொத்த
செய்யமால் வரையே யாறுச் சென்றன தகைப்பில் சேனை. 91

வீரரும் விரைவிற் போனார் விலங்கன்மே
விலங்கை வெய்யோன்
சோர்விலாக் காவற் பாடும் பெருமையு
மரணுங் கொற்றக்

கார்நிறத் தரக்கர் தங்கள் கணிதமும்
பிறவு மெல்லாம்
வார்கழ லநுமன் சொல்ல வழியினி
தெளிதிற் செல்வார். 92

அந்நெறி யிரண்டு நாளி னங்கதன்
முதலி ஞேர்கள்
பொன்னடி வணங்கி ஞரைப் புகழ்ந்துடன்
பொருந்திப் போவா
ரின்னெடும் பனிமாக் குன்றி லின்னுழை
யிறுத்த பின்னர்
பன்னிரு பகலிற் சென்று தென்றிசைப்
பரவை கண்டார். 93



# செய்யுளகராதி.

கா.

---